

# அந்நியன்

ஆல்பெர் காம்யு

## ஆல்பெர் காம்யு

ஆல்பெர் காம்யு 1913ஆம் ஆண்டு, அல்ஜீரியாவில் பிறந்தார். இவருடைய தந்தை பிரெஞ்சுக்காரர்; தாயார் ஸ்பெயின் தேசத்தவர். சிறு வயதிலேயே தந்தையை இழந்த இவர், பிரெஞ்சு காலனியாக இருந்த அல்ஜீரியாவில் தத்துவம் படித்துப் பட்டம் பெற்றார். காசநோய் காரணமாக மேல்படிப்பு படிக்க முடியாமல், நாடகத் துறை, பத்திரிகைத் துறை ஆகியவற்றில் ஈடுபட்டார். ஜெர்மன் ஆதிக்கத்தை எதிர்த்த பிரெஞ்சுக் கிளர்ச்சி இயக்கத்தில் முக்கிய இடம் பெற்றிருந்த 'போராட்டம்' (Combat) என்ற பத்திரிகையின் ஆசிரியராக இருந்தார். பின்னர், பத்திரிகைத் துறையை விட்டுவிட்டு, எழுதுவதில் மிகுந்த ஈடுபாடுகொண்டு அகில உலகப் புகழ் அடைந்தார். 'அந்நியன்' இவரது முதல் நாவல் *(1942)*. இது தவிர, 'பிளேக்' (The Plague), 'வீழ்ச்சி' (The Fall) என்ற நாவல்களும், 'காலிகுலா' (Caligula) முதலிய நாடகங்களும், 'சிசிபஸ் என்ற தொன்மம்' (The Myth of Sisyphus) 'கிளர்ச்சியாளன்' (The Rebel) ஆகிய தத்துவக் கட்டுரைகளும் இவருடைய முக்கியமான படைப்புகள்.

'இன்றைய மனிதனின் மனசாட்சி குறித்த பிரச்சினைகளைத் தெளிவான நேர்மையுடன் விளக்கியிருக்கும் இவரது இலக்கியப் படைப்புகளுக்காக' இவருக்கு 1957ஆம் ஆண்டு நோபல் பரிசு அளிக்கப்பட்டது. 1960ஆம் ஆண்டு ஜனவரி 4ஆம் தேதி, ஒரு கார் விபத்தில் காம்யு இறந்தார்.

காம்யு விபத்துக்குள்ளான இடத்துக்கு அருகில் அவருடைய முடிவுறாத நாவல் ஒன்றின் கைப்பிரதி கண்டெடுக்கப்பட்டது. இந்தக் கைப்பிரதி அவர் மகள் காத்தரினால் ஒழுங்குசெய்யப் பட்டு, முப்பத்துநான்கு ஆண்டுகளுக்குப் பிறகு 'முதல் மனி தன்' என்ற தலைப்பில் *1994*ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. மிகுந்த பரபரப்பை ஏற்படுத்திய இந்த நாவல், முதல் வாரத் திலேயே ஐம்பதாயிரம் பிரதிகள் விற்றது. முதல் மாதத்தி லேயே, இந்த நாவலை மொழிபெயர்க்க பத்துக்கும் மேற்பட்ட நாடுகள் அனுமதி கோரின. சுயசரித அம்சங்கள் கொண்ட இந்த நாவலில் காம்யுவின் ஆரம்பக் கால வாழ்க்கை குறித்த சுவாரஸ் யமான தகவல்கள் கிடைக்கின்றன. காம்யுவின் நண்பரும் முக்கியமான பத்திரிகை ஆசிரியருமான மூான் டேனியல், காம் யுவை அறிந்துகொள்ள விரும்புகிறவர்களுக்கு இந்த நாவல் ஒரு முறையான அறிமுகமாக இருக்குமென்று கருதுகிறார்.

*2013*ஆம் ஆண்டு காம்யுவின் நூற்றாண்டு. இதைச் சிறப்பிக்கும் வகையில் காம்யுவின் 'முதல் மனிதன்' நாவலின் மொழி பெயர்ப்பை க்ரியா வெளியிட இருக்கிறது.

# அந்நியன்

(திருத்திய நான்காம் பதிப்பு)

ஆல்பெர் காம்யு

பிரெஞ்சு மொழியிலிருந்து தமிழில்

வெ. ஸ்ரீராம்

க்ரியா

***anniyan***, a Tamil translation of the French Novel ***L'Etranger*** by Albert Camus

© Editions Gallimard 1942

Tamil translation directly from the French by V. Sriram. Translation rights with V. Sriram

First Edition: 1980
Second Edition: 1984
Third Edition: 1997
Fourth Edition: December, 2012

ISBN: 978-93-82394-00-6

Printed at:
Sudarsan Graphics
Chennai - 600 017

Published by:
Cre-A:
New No. 2 Old No 25,
17th East Street, Thiruvanmiyur
Chennai - 600 041.
creapublishers@gmail.com
www.crea.in

Price: Rs.175

## நன்றி

இந்த மொழிபெயர்ப்பின் திருத்திய பதிப்புக்கு ஆரம்பக் கட்டத்தில் உதவிய கி. நாராயணனுக்கும்,

பிறகு, முக்கியத் திருத்தங்களைச் செய்ய உதவிய டாக்டர் டி. கே. கோபாலனுக்கும்.

# 1

இன்று அம்மா இறந்துவிட்டாள். ஒருவேளை நேற்றாகவும் இருக்கலாம்; எனக்குத் தெரியாது. முதியோர் இல்லத்திலிருந்து எனக்கு ஒரு தந்தி வந்தது. ''தாயார் மரணம். நாளை அடக்கம். ஆழ்ந்த அனுதாபங்கள்.'' இதற்கு ஒன்றும் அர்த்தமில்லை. ஒருவேளை நேற்றாகவும் இருந்திருக்கலாம்.

அந்த முதியோர் இல்லம் அல்ஜேயிலிருந்து எண்பது கிலோ மீட்டர் தூரத்தில் மாரங்கோவில் இருக்கிறது. இரண்டு மணி பேருந்தைப் பிடித்தால் பிற்பகலில் போய்ச் சேருவேன். இரவில் நீத்தார் கண்விழிப்பில் கலந்துகொண்டு நாளை மாலை திரும்புவேன். என்னுடைய முதலாளியிடம் இரண்டு நாள் விடுப்புக் கேட்டேன். இது போன்ற காரணத்தைச் சொன்ன பிறகு அவரால் மறுக்க முடியவில்லை. ஆனால் அது அவருக்குப் பிடிக்கவில்லை என்பதும் தெரிந்தது. ''இது என் தவறு அல்ல,'' என்றுகூட நான் அவரிடம் சொன்னேன். அவர் ஒன்றும் சொல்லவில்லை. நான் அப்படிச் சொல்லியிருக்கக் கூடாதோ என்றும் அப்போது நினைத்தேன். மொத்தத்தில் நான் வருத்தம் தெரிவித்திருக்க வேண்டிய அவசியமே இல்லை. பார்க்கப்போனால், தன் அனுதாபங்களை எனக்குத் தெரிவிக்க வேண்டிய நிலையில் அவர்தான் இருந்தார். ஒருவேளை நாளை மறுநாள் துக்கம் அனுசரிக்கும் உடையில் என்னைப் பார்த்ததும் சொல்வாரோ என்னவோ. இப்போதைக்குக் கிட்டத்தட்ட அம்மா இன்னும் இறக்கவில்லை என்பது போலத்தான்; மாறாக, அடக்கம் ஆன பிறகோ, அது நடந்து முடிந்த ஒரு சம்பவமாகி, எல்லாவற்றுக்குமே ஒரு அதிகாரபூர்வமான மதிப்பு ஏற்பட்டுவிடும்.

இரண்டு மணி பேருந்தைப் பிடித்தேன். ஒரே வெயில். வழக்கம் போல் செலஸ்த்தினுடைய உணவு விடுதியில் சாப்பிட்டேன். எல்

லோரும் எனக்காக மிகவும் வருத்தப்பட்டார்கள். "யாருக்குமே, இருப்பது ஒரே ஒரு தாயார்தானே," என்றான் செலஸ்த். நான் புறப் படும்போது எல்லோரும் வாசல்வரை வந்தார்கள். நான் சற்றுக் குழம்பிப்போயிருந்தேன். ஏனெனில், ஒரு கருப்பு டையையும் கையில் கட்டிக்கொள்ள ஒரு கருப்புப் பட்டையையும் இரவல் வாங்குவதற்காக என் நண்பன் இம்மானுவேல் வீடுவரை நான் போக வேண்டியிருந்தது. சில மாதங்களுக்கு முன்புதான் அவன் தன் மாமாவை இழந்திருந்தான்.

பேருந்தைப் பிடிக்க ஓட வேண்டியிருந்தது. இந்த அவசரம், இந்த ஓட்டம், இவை போதாதென்று பேருந்தின் குலுக்கல், பெட்ரோ லின் வாடை, வழி நெடுக சாலையிலிருந்தும் திறந்தவெளியிலிருந் தும் வந்த வெளிச்சம் எல்லாம் சேர, நான் கண்ணயர்ந்தேன். கிட்டத் தட்ட வழி முழுவதும் தூக்கம். கண்விழித்தபோது அருகிலிருந்த ராணுவக்காரன்மீது நான் சாய்ந்திருந்தேன். அவன் என்னைப் பார்த்து லேசாகச் சிரித்து, நான் வெகு தொலைவிலிருந்து வருகிறேனா என்று கேட்டான். அவனுடன் மேலே பேசுவதைத் தவிர்க்க "ஆமாம்," என்று சொன்னேன்.

அந்த முதியோர் இல்லம் நான் சென்ற கிராமத்திலிருந்து இரண்டு கிலோமீட்டர் தொலைவில் இருந்தது. நடந்தே சென்றேன். அம் மாவை உடனே பார்க்க விரும்பினேன். ஆனால் இல்லத்தின் தலை வரை நான் முதலில் சந்தித்தாக வேண்டும் என்று காவல்காரன் சொன் னான். அவர் வேறு வேலையாக இருந்ததால் சற்றுக் காத்திருந்தேன். காத்திருந்த நேரம் முழுவதும் காவல்காரன்தான் பேசிக்கொண் டிருந்தான். பிறகு இல்லத்தின் தலைவரை அவருடைய அலுவலக அறையில் சந்தித்தேன். சிறிய உருவம். சற்றே வயதானவர். அரசாங்க விருது பெற்றவர். தன் வெளிர்நிறக் கண்களால் என்னைப் பார்த்தார். பிறகு என் கையைக் குலுக்கிய அவர், வெகு நேரம் என் கையைப் பிடித்தவாறே இருந்ததால், எனக்கு எப்படி விடுவித்துக்கொள்வது என்று தெரியவில்லை. ஒரு கோப்பினை எடுத்துப் பார்த்த அவர் சொன்னார், "திருமதி மெர்சோ இங்கு வந்து மூன்று ஆண்டுகள் ஆயிற்று. அவருக்கு இருந்த ஒரே ஆதரவு நீங்கள்தான்." அவர்

என்னை ஏதோ குற்றம்சாட்டுவதுபோல் எனக்குப் பட்டதால் நான் அவரிடம் விளக்கமாகப் பேச முற்பட்டேன். ஆனால் அவர் என்னை இடைமறித்தார்: "நீங்கள் ஏதும் சமாதானம் சொல்ல வேண்டாம், தம்பி. உங்கள் தாயாரைப் பற்றிய கோப்புகளைப் படித்தேன். அவர்களுடைய தேவைகளை நிறைவேற்ற முடியாத நிலையில் நீங்கள் இருந்திருக்கிறீர்கள். அவர்களுக்கு ஒரு துணை வேண்டியிருந்தது. உங்கள் சம்பளமோ குறைவு. கூட்டிக் கழித்துப்பார்த்தால் அவர் இங்கு மகிழ்ச்சியாகத்தான் இருந்தார்." "ஆமாம்," என்று நான் கூற, அவர் தொடர்ந்தார்: "உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். இங்கு அவருடைய வயதை ஒத்த நண்பர்கள் இருந்தார்கள். அவர்களுடன் அந்தக் காலத்திய விருப்புவெறுப்புகளைப் பகிர்ந்து கொள்ள வாய்ப்பிருந்தது. நீங்களோ இளைஞர். உங்களுடன் இருப்பது அவருக்கு சுவாரஸ்யமில்லாமல் இருந்திருக்கும்."

அது உண்மைதான். வீட்டில் இருந்த நாட்களில் அம்மா மௌனமாகத் தன் பார்வையால் என்னைத் தொடர்ந்துகொண்டே இருப்பதில் பொழுதைப் போக்கிக்கொண்டிருந்தாள். முதியோர் இல்லத்துக்குச் சென்றபின், முதல் சில நாட்கள் அடிக்கடி அழுவாள். பழக்க தோஷத்தினால்தான். சில மாதங்கள் கழித்து, முதியோர் இல்லத்தை விட்டு வந்திருக்க வேண்டியிருந்தாலும் அழுதிருப்பாள். அதுவும் ஒரு பழக்கதோஷந்தான். அதனாலேயேதான் கிட்டத்தட்ட ஒரு வருடமாக நான் அங்கே போகவேயில்லை. அதுவுமின்றி, ஞாயிற்றுக் கிழமை முழுவதும் அதற்கே சரியாக இருக்கும். போதாக் குறைக்கு பஸ்ஸைப் பிடித்துப் பயணச்சீட்டு வாங்கி இரண்டு மணி நேரம் பிரயாணம் செய்ய வேண்டும்.

இல்லத் தலைவர் இன்னும் என்னென்னவோ பேசினார். பெரும் பகுதியை நான் காதில் போட்டுக்கொள்ளவே இல்லை. பிறகு அவர் "உங்கள் தாயாரைப் பார்க்க விரும்புகிறீர்கள் என்று நினைக்கிறேன்," என்றார். நான் ஏதும் பேசாமல் எழுந்தேன். கதவை நோக்கிச் சென்ற அவரைத் தொடர்ந்தேன். படிகளில் போகும்போது அவர் மேலும் விளக்கினார்: "எங்களுடைய சிறிய சவ அறைக்கு அவரை எடுத்துச் சென்றுவிட்டோம். மற்றவர்களைப் பாதிக்கக் கூடாது

என்றுதான். ஒவ்வொரு தடவையும் இங்கு யாராவது இறந்து போகும்போது இரண்டு மூன்று நாட்களுக்கு மற்றவர்கள் குலைந்து போய்விடுகிறார்கள். எங்களுக்கு மிகவும் சிரமமாக இருக்கிறது.'' சிறுசிறு கும்பல்களாகக் கூடிப் பேசிக்கொண்டிருந்த பல முதியவர்கள் இருந்த ஒரு முற்றத்தைக் கடந்து நாங்கள் சென்றோம். நாங்கள் கடக்கும்போது பேச்சு நின்றது. பிறகு நாங்கள் கடந்ததும் பேச்சுத் தொடர்ந்தது. பல கிளிகளின் காதடைக்கும் இரைச்சல் என்று சொல்லத் தோன்றும். ஒரு சிறிய கட்டடத்தின் வாசலில் இல்லத் தலைவர் விடைபெற்றார். ''மெர்சோ, உங்களை நான் இங்கு விட்டுச் செல்கிறேன். உங்களுக்கு எதுவும் தேவையென்றால் என்னை அலுவலகத்தில் பார்க்கலாம். அடக்கம் நாளைக் காலை பத்து மணிக்கு என்று எப்போதும்போல ஏற்பாடுசெய்திருக்கிறோம். மறைந்துபோன உங்கள் தாயாருக்கான நீத்தார் கண்விழிப்பில் நீங்கள் கலந்துகொள்ளவே இந்த ஏற்பாடு. இறுதியாக இன்னுமொரு விஷயம்: மதச் சம்பிரதாயப்படி அடக்கம் செய்யப்பட வேண்டும் என்று தன்னுடைய நண்பர்களிடையே உங்கள் தாயார் சொல்லி வந்தார் என்று அறிந்தோம். அதற்கான ஏற்பாட்டை என் சொந்தப் பொறுப்பில் செய்திருக்கிறேன். இருந்தாலும் உங்களிடம் ஒரு வார்த்தை சொல்ல வேண்டும் என்றே சொல்கிறேன்.'' நான் அவருக்கு நன்றி சொன்னேன். நாத்திகவாதியில்லை என்றாலும் உயிரோடிருந்தபோது அம்மா மதத்தைப் பற்றி ஒருபோதும் கவலைப் பட்டதில்லை.

நான் உள்ளே நுழைந்தேன். கண்ணாடிக் கூரையும் வெள்ளையடிக்கப்பட்ட சுவருமாகப் பளிச்சென்று இருந்தது அந்த அறை. எக்ஸ் வடிவக் கால்களைக் கொண்டிருந்த பலகைத் தாங்கிகளும் நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. நடுவே இரு பலகைத் தாங்கிகளின்மீது மூடப்பட்ட சவப்பெட்டி ஒன்று இருந்தது. ஆழ்ந்த பழுப்பு வர்ணம் பூசப்பட்ட பலகைகளின் மேற்பரப்பில் சற்றே செலுத்தப்பட்ட பளபளக்கும் திருகு ஆணிகளை மட்டுமே பார்க்க முடிந்தது. சவப்பெட்டியின் அருகே வெள்ளை அங்கியும் தலையில் பளிச்சிடும் வர்ண ஸ்கார்ஃபும் அணிந்த அராபியச் செவிலி ஒருத்தி இருந்தாள்.

அப்போது எனக்குப் பின்புறமாகக் காவல்காரன் அறையில் நுழைந்தான். அவன் ஓடிவந்திருக்க வேண்டும். வார்த்தைகள் சற்றே தட்டுத்தடுமாறி வந்தன. ''சவப்பெட்டியை மூடிவிட்டார்கள். ஆனால் நீங்கள் பார்ப்பதற்காக அதை மறுபடியும் திறக்க வேண்டும்.'' சவப்பெட்டியை அவன் நெருங்கியபோது நான் அவனைத் தடுத்தேன். ''நீங்கள் பார்க்க விரும்பவில்லையா?'' என்றான். ''இல்லை,'' என்றேன். அவன் பாதியில் நிறுத்தினான்; எனக்குச் சங்கடமாக இருந்தது. ஏனென்றால் நான் அவ்வாறு சொல்லியிருக்கக் கூடாது என்று எனக்குத் தோன்றியது. சற்றுக் கழித்து என்னைப் பார்த்து ''ஏன்?'' என்று கேட்டான். ஆனால் குற்றம்சாட்டுவது போலன்றி, தெரிந்துகொள்ள விரும்பும் பாவனையில் கேட்டான். ''எனக்குத் தெரியவில்லை,'' என்றேன். தனது நரைத்த மீசையை முறுக்கியவாறு என்னைப் பார்க்காமலேயே ''எனக்குப் புரிகிறது,'' என்றான். அவனுக்கு அழகிய வெளிர்நீலக் கண்கள்; சற்றே சிவந்த மேனி. எனக்கு ஒரு நாற்காலியைக் கொடுத்துவிட்டு அவனும் சற்றுப் பின்னால் உட்கார்ந்தான். அங்கு துணைக்கிருந்த செவிலி எழுந்து கதவை நோக்கிச் சென்றாள். அப்பொழுது காவல்காரன் என்னிடம் ''அவளுக்கு மேகப்புண்,'' என்றான். அவன் சொன்னது புரியாததால் அந்தச் செவிலியைப் பார்த்தேன். அவளுடைய கண்களுக்கடியில் தலையைச் சுற்றி ஒரு கட்டுப் போட்டிருந்ததைக் கவனித்தேன். மூக்கின் மீது தட்டையாகப் போடப்பட்டிருந்தது அந்தக் கட்டு. அவள் முகத்தில் அந்தக் கட்டின் வெண்மை மட்டுமே தெரிந்தது.

அவள் சென்றவுடன் காவல்காரன் ''உங்களைத் தனியாக விட்டுப் போகிறேன்,'' என்றான். நான் என்ன சைகைசெய்தேனோ தெரியாது. அவன் எனக்குப் பின்னால் நின்றவாறே இருந்தான். எனக்குப் பின்புறமாக அவன் நின்றுகொண்டிருந்தது எனக்குச் சங்கடமாக இருந்தது. மாலை நேரத்தின் அழகிய வெளிச்சம் அந்த அறையில் படர்ந்திருந்தது. இரண்டு பெரிய வண்டுகள் கண்ணாடிக் கூரைமீது மோதி ரீங்கரித்துக்கொண்டிருந்தன. என்னையும் மீறி எனக்குத் தூக்கம் வருவதை உணர்ந்தேன். காவல்காரனிடம், அவனைத் திரும்பிப் பார்க்காமலேயே, ''நீண்ட காலமாக இங்கே இருக்கிறீர்

களா,'' என்று கேட்டேன். உடனே அவன் ''ஐந்து வருடங்களாக,'' என்று, நீண்ட நேரமாக இந்தக் கேள்வியை எதிர்பார்த்தவன்போல், பதில் சொன்னான்.

அதை அடுத்து அவன் ஏதேதோ பேசிக்கொண்டேயிருந்தான். இந்த மாரங்கோ முதியோர் இல்லத்தில் காவல்காரனாக வந்து சேரு வான் என்று யாராவது சொல்லியிருந்தால், ஒரு காலத்தில் அவன் வியப்படைந்திருப்பான். பாரிஸ் நகரவாசியான அவனுக்கு இப் போது அறுபத்து நான்கு வயது. நான் அவனை அப்போது இடை மறித்து ''ஓகோ, உங்களுக்கு இந்த ஊர் இல்லையா?'' என்றேன். கூடவே, என்னை இல்லத் தலைவரிடம் அழைத்துச் செல்வதற்கு முன் என் அம்மாவைப் பற்றி அவன் பேசிக்கொண்டிருந்தது என் நினைவுக்கு வந்தது. சவ அடக்கம் சீக்கிரமே செய்யப்பட வேண்டும் என்று அவன் கூறியிருந்தான். ஏனென்றால் சமவெளிப் பிரதேசங்க ளில் உஷ்ணம் அதிகம். குறிப்பாக, இந்த நாட்டில். அப்போதுதான் அவன் பாரிஸில் வாழ்ந்திருந்தது பற்றியும், அதை அவன் மறக்க முடி யாமலிருந்தது பற்றியும் கூறியிருந்தான். பாரிஸில் ஒரு சடலத்தைச் சில சமயம் மூன்று, நான்கு நாட்கள்கூட வைத்திருக்கலாம். இங்கோ அதற்கெல்லாம் நேரம் கிடையாது. இங்கே சவ வண்டிக்குப் பின் னால் ஓட வேண்டிய அவசியம் ஏற்கனவே இதற்குள் ஏற்பட்டிருக் கலாம் என்ற எண்ணமே நமக்குப் புதிது. அவன் மனைவி ''சும்மா இருங்கள். அவரிடம் இதையெல்லாமா சொல்வார்கள்,'' என்றாள். அவன் முகம் சிவந்து மன்னிப்புக் கேட்டான். நான் குறுக்கிட்டு ''பரவாயில்லை, பரவாயில்லை,'' என்றேன். அவன் சொன்னது சரி யென்றும், தேவைதான் என்றும் எனக்குத் தோன்றியது.

அந்தச் சிறிய சவ அறையில், ஏழ்மை காரணமாக அந்த முதியோர் இல்லத்திற்குத் தான் வந்ததாக அவன் எனக்குச் சொன்னான். அவன் திடமாக இருந்ததால் காவல்காரன் வேலைக்கு விண்ணப்பித்தான். ஆக, அவனும் அந்த இல்லத்தைச் சேர்ந்தவன்தான் என்று நான் சொன்னேன். அப்படி இல்லை என்று அவன் சொன்னான். அவனை விட வயதில் பெரியவர்கள் அல்லாத சிலரும் அடங்கியுள்ள அந்த இல்லத்தில் இருந்தவர்களைக் குறிப்பிடும்போது, 'அவர்கள்' என்

றும், 'மற்றவர்கள்' என்றும், சில சமயம் 'கிழவர்கள்' என்றும்கூட அவன் பிரித்துப் பேசிய விதம் என்னை ஏற்கனவே வியப்பில் ஆழ்த்தி யிருந்தது. ஆனாலும், உண்மையில் அவன் நிலைமை வேறுபட்டது. அவன் ஒரு காவல்காரன்; அதாவது, ஒரு விதத்தில் மற்றவர்கள்மீது அதிகாரம் செலுத்தக்கூடியவன்.

அந்தச் செவிலி இப்போது உள்ளே வந்தாள். வெகு விரைவாக இருள் விழுந்துவிட்டது. கண்ணாடிக் கூரைக்கு மேலே சீக்கிர மாகவே இருள் அடர்ந்துவிட்டிருந்தது. காவல்காரன் மின்விளக்கு களைப் போட்டான். திடீரென்று பிரகாசித்த வெளிச்சம் என்னைக் குருடாக்கியது. அங்குள்ள பொது உணவுக்கூடத்தில் சாப்பிட என்னை அவன் அழைத்தான். ஆனால் எனக்குப் பசிக்கவில்லை. "அப்படியென்றால் ஒரு கோப்பை காப்பி கொண்டுவருகிறேன்," என்று முன்வந்தான். எனக்கு காப்பி மிகவும் பிடிக்குமென்பதால் நான் ஒப்புக்கொள்ளவே, அவன் சிறிது நேரத்தில் தட்டில் காப்பி எடுத்து வந்தான். நான் குடித்தேன். உடனே எனக்குப் புகைபிடிக்க வேண்டும்போல் இருந்தது. ஆனால் சற்றுத் தயங்கினேன். ஏனென் றால் அம்மாவுக்கு முன்னால் அவ்வாறு செய்யலாமா என்று தெரிய வில்லை. யோசித்துப்பார்த்தேன். இது ஒன்றும் பெரிய விஷய மில்லை. காவல்காரனுக்கு ஒரு சிகரெட்டைத் தந்தேன். இருவரும் புகைபிடித்தோம்.

சற்று நேரம் கழிந்ததும் அவன் சொன்னான், "இன்னொரு விஷ யம் தெரியுமா, உங்கள் தாயாரின் சிநேகிதர்கள்கூட நீத்தார் கண் விழிப்புக்காக வருவார்கள். அதுதான் வழக்கம். நான் போய் இன்னும் சில நாற்காலி, கறுப்புக் காப்பி எல்லாம் கொண்டுவருகிறேன்." அந்த விளக்குகளில் ஏதாவது ஒன்றையாவது அணைக்க முடியுமா என்று நான் கேட்டேன். அந்த வெள்ளைச் சுவரில் பட்டுப் பிரதிபலித்த வெளிச்சம் எனக்கு அயர்ச்சியைத் தந்தது. அது முடியாத காரியம் என்று அவன் சொன்னான். விளக்குகள் பொருத்தப்பட்டிருக்கும் விதமே அப்படித்தான்; ஒன்று, எல்லாம் எரியும், அல்லது எதுவுமே எரியாது. அதன் பிறகு நான் அவனை அதிகமாகக் கவனிக்கவில்லை. அவன் வெளியே போய் நாற்காலிகளைக் கொண்டுவந்து போட்

டான். ஒரு நாற்காலியின் மேல் ஒரு காப்பிப் பாத்திரத்தை வைத்து, அதைச் சுற்றிக் கோப்பைகளை அடுக்கினான். பிறகு அம்மாவுக்கு மறுபக்கத்தில் எனக்கு எதிராக உட்கார்ந்தான். அந்தச் செவிலியும் மறுகோடியில் திரும்பி உட்கார்ந்திருந்தாள். அவள் என்ன செய்து கொண்டிருந்தாள் என்பதை என்னால் பார்க்க முடியவில்லை. ஆனா லும் அவள் கைகளின் அசைவைக் கொண்டு அவள் ஏதோ பின்னிக் கொண்டிருந்தாள் என்று மட்டும் ஊகிக்க முடிந்தது. இப்போது குளுமையாக இருந்தது. காப்பியும் எனக்கு இதமான சூடேற்றியிருந் தது; திறந்த கதவின் வழியே மிதந்து வந்த இரவின் மணம், மலர் களின் சுகந்தம். நான் சற்றுக் கண்ணயர்ந்ததாக ஞாபகம்.

ஏதோ ஒரு சலசலப்பு என்னை எழுப்பியது. கண்களை மூடிக் கொண்டிருந்ததால் அறையின் வெண்மை இன்னும் பல மடங்கு பிரகாசமாகவே தெரிந்தது. எனக்கு முன்னால் நிழல் எதுவும் இல்லா மல் ஒவ்வொரு பொருளும், கோணமும், வளைவும் கண்களை நோக வைக்கும் ஒரு தூய்மையுடன் காட்சியளித்தன. அந்த நிலை யில்தான் அம்மாவின் நண்பர்கள் அறைக்குள் பிரவேசித்தார்கள். கிட்டத்தட்டப் பத்துப்பேர் அடங்கிய அந்தக் கும்பல் கண்களைக் கூச வைக்கும் இந்தப் பிரகாசத்தில் அமைதியாக நுழைந்தது. நாற் காலி கிறீச்சிடாத விதத்தில் அவர்கள் அமர்ந்தார்கள். இதுவரை எவ ரையும் ஒருபோதும் பாத்திராதவகையில் நான் அவர்களைப் பார்த் தேன்—அவர்களுடைய முகங்களோ, உடைகளோ, எந்த ஒரு சிறு அம்சமுமோ என் பார்வைக்குத் தப்பவில்லை. இருந்தபோதிலும் அவர்கள் பேசுவது எதுவும் கேட்காத நிலையில் அவர்கள் அங்கு இருந்தார்கள் என்ற உண்மையை நம்புவது எனக்குக் கடினமாக இருந்தது. கிட்டத்தட்ட எல்லாப் பெண்களும் அணிந்திருந்த அங்கி களின் நாடா உடலோடு இறுக்கிக் கட்டப்பட்டு அவர்களுடைய பருத்த தொப்பையை நன்றாக எடுத்துக் காட்டியது. வயதான பெண் களுக்கு எந்த அளவுக்குத் தொப்பை இருக்க முடியும் என்று இதுவரை நான் யோசித்துப்பார்த்ததில்லை. பெரும்பாலான ஆண்கள் ஒல்லி யாக, கைத்தடி ஊன்றிய வண்ணம் இருந்தனர். அந்த முகங்களில், கண்களைப் பார்க்க முடியாமல், சுருக்கங்களாலான ஒரு பறவைக்

கூட்டின் மத்தியில் பிரகாசமற்ற மங்கலான ஒளியை மட்டுமே பார்ப் பதுபோல் இருந்தது எனக்கு வியப்பை அளித்தது. உட்காரும்போது பெரும்பாலானோர் என்னைப் பார்த்து ஒருவிதச் சங்கடத்துடன் தலையை அசைத்தார்கள். பற்களற்ற வாய்க்குள் புதைந்துவிட்ட உதடுகளுடன் கூடிய இந்தத் தலையசைப்பிலிருந்து அவர்கள் எனக்கு வணக்கம் தெரிவித்தார்களா அல்லது அவர்களுக்கு ஏதாவது அரிப்பு போன்ற உபாதையா என்று என்னால் சொல்ல முடியாதபடி இருந்தது. எனக்கு வணக்கம் தெரிவித்திருக்க வேண்டுமென்றுதான் நினைக்கிறேன். எனக்கு எதிரே உட்கார்ந்திருந்த அவர்கள் அனை வரும் என்னை நோக்கித் தலையசைப்பதற்காகவே அவ்வாறு உட் கார்ந்திருந்ததையும் அதே சமயம்தான் உணர்ந்தேன். என்னை எடை போடவே அவர்கள் இங்கு வந்திருக்கிறார்கள் என்ற ஒரு பைத்தியக் காரத்தனமான எண்ணம் ஒரு கணம் எனக்கு ஏற்பட்டது.

சற்று நேரம் கழித்து, அந்தப் பெண்களில் ஒருத்தி அழ ஆரம் பித்தாள். இரண்டாம் வரிசையில் அமர்ந்திருந்த அவள் இன்னொருத் தியின் பின்னால் இருந்ததால் என்னால் சரியாகப் பார்க்க முடிய வில்லை. ஒரே சீராக விட்டுவிட்டுச் சத்தம் எழுப்பி அழுதுகொண் டிருந்தாள்: ஒருபோதும் நிறுத்த மாட்டாள்போல எனக்குத் தோன்றி யது. மற்றவர்கள் அதைக் கேட்ட மாதிரியும் தோன்றவில்லை. அவர் கள் இடிந்துபோய், சோகமாக, மௌனமாக இருந்தார்கள். சவப் பெட்டியையோ, கைத்தடியையோ அல்லது வேறு ஏதாவது பொரு ளையோ, ஆனால் அதை மட்டுமே, பார்த்தபடியே இருந்தார்கள். அந்தப் பெண் இன்னும் அழுதுகொண்டேயிருந்தாள். அவள் யாரென்று தெரியாததால் எனக்கு மிகவும் வியப்பாக இருந்தது. அழு கையைக் கேட்காமலேயே இருக்க வேண்டும் போலிருந்தது. அவ் வாறு அவளிடம் கூற எனக்குத் தைரியம் இருக்கவில்லை. காவல் காரன் குனிந்து அவளிடம் ஏதோ சொல்ல, அவளோ தலையசைத்து ஏதோ முணுமுணுத்துவிட்டு, மறுபடியும் அதே சீருடன் அழுகை யைத் தொடர்ந்தாள். அப்போது காவல்காரன் எழுந்து என் பக்கம் வந்தான். என்னருகே உட்கார்ந்தான். சற்று நேரம் கழிந்த பின்னர், என்னைப் பார்க்காமலேயே சில தகவல்களைச் சொன்னான்:

''உங்கள் தாயாருக்கு மிகவும் நெருக்கமாக இருந்தார்கள். இவர்களுக்கு இருந்த ஒரே சிநேகிதி உங்கள் தயார்தானாம். இப்போது தங்களுக்கு யாரும் இல்லையே என்கிறார்கள்.''

இப்படியே நீண்ட நேரம் இருந்தோம். அந்தப் பெண்ணின் பெருமூச்சும் விம்மலும் மிகவும் குறைந்துபோயிருந்தன. மூக்கை உறிஞ்சியவாறே இருந்தாள். ஒருவழியாக அதுவும் அடங்கியது. எனக்குத் தூக்கம் கலைந்துவிட்டிருந்தது. ஆனால் களைப்பாக இருந்தது. இடுப்பு வலித்தது. அந்த நேரத்தில் எல்லாருடைய மௌனமுமே எனக்குப் பொறுக்க முடியாததாக இருந்தது. இடையிடையே ஒரு விசித்திரமான சப்தம் மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது. அது என்ன என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. சில கிழவர்கள் கன்னத்தின் உட்புறத்தில் எச்சிலை உறிஞ்சியதால் வெளிப்பட்ட சொடக்குப் போன்ற விசித்திரமான ஒலிதான் அது என்று ஊகிக்க எனக்குச் சற்று நேரம் பிடித்தது. ஆனால் அந்த ஒலியை அவர்கள் சற்றும் சட்டை செய்யாமல் தங்கள் நினைவுகளில் ஆழ்ந்திருந்தனர். அவர்களுக்கிடையே சாவில் உறங்கிக்கொண்டிருந்தவள், அவர்கள் கண்களுக்கு முன்னால் அர்த்தமற்றுப்போய்விட்டிருந்தாள் என்ற எண்ணம்கூட அப்போது எனக்கு ஏற்பட்டது. ஆனால் அது ஒரு தவறான எண்ணம் என்று இப்போது நான் நினைக்கிறேன்.

காவல்காரன் கொடுத்த காப்பியை நாங்கள் எல்லோரும் குடித்தோம். அதன் பிறகு என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது. இரவு கழிந்திருந்தது. இடையே ஒருதரம் கண்விழித்துப் பார்க்கும்போது அந்தக் கிழவர்கள் தத்தம் மேலேயே கவிழ்ந்து தூங்கிக்கொண்டிருக்க, ஒரே ஒருவர் மட்டும் கைத்தடியை இறுகப் பிடித்திருந்த புறங்கைகளின் மேல் தாடையை ஊன்றி, நான் கண்விழிப்பதற்காகவே காத்திருந்தவர்போல் என்னை உற்றுப்பார்த்துக்கொண்டிருந்தது என் நினைவிற்கு வருகிறது. பிறகு நான் மீண்டும் தூங்கிப்போனேன். மீண்டும்மீண்டும் இடுப்பு வலிக்கவே விழித்துக்கொண்டேன். கூரைக் கண்ணாடி மீது காலை ஒளி படர்ந்துகொண்டிருந்தது. சற்று நேரம் கழித்துக் கண்விழித்துக்கொண்ட ஒரு கிழவர் ஒரேயடியாக இருமினார். கட்டம் போட்ட ஒரு பெரிய கைக்குட்டை

யில் அவர் ஒவ்வொரு தடவை துப்பும்போதும் ஏதோ பிய்த்துக் கொண்டு வருவதுபோலிருந்தது. அவர் மற்றவர்களை எழுப்பினார். காவல்காரன் அவர்கள் எல்லோரும் வெளியே போக வேண்டும் என்று சொன்னான். அவர்கள் எழுந்தார்கள். அசௌகரியமாக இப் படிக் கண்விழித்ததால் அவர்கள் முகங்கள் வாடி வெளிறியிருந்தன. புறப்படும்போது, என் வியப்பு மேலிட, அவர்கள் எல்லோரும் என் னிடம் கைகுலுக்கினார்கள், ஒரு வார்த்தைகூடப் பரிமாறிக்கொள் ளாத இந்த இரவில் எங்களுக்குள்ளே நெருக்கமான உறவு ஏதோ ஏற் பட்டுவிட்டதைப்போல. நான் களைத்துப்போயிருந்தேன். காவல் காரன் என்னை அவன் வீட்டுக்கு அழைத்துச்சென்றான். நான் காலைக்கடன்களை முடித்தேன். மிகவும் நன்றாக இருந்த அந்த காப் பியை மீண்டும் குடித்தேன். அங்கிருந்து புறப்படும்போது பொழுது நன்றாகப் புலர்ந்திருந்தது. மாரங்கோ நகரத்தைக் கடலிலிருந்து பிரித்த குன்றுகளுக்குமேல், வானம் இளம் சிவப்பாயிருந்தது. அவற் றைத் தாண்டி வந்த கடல் காற்று உப்பின் வாடையைத் தாங்கி வந் தது. ஒரு அழகான பகல்பொழுது அங்கே உருவாகிக்கொண்டிருந் தது. நான் கிராமப்புறத்திற்குச் சென்று வெகு நாட்கள் ஆகியிருந்த தால், இந்த அம்மா விவகாரம் மட்டும் இல்லாதிருந்தால் அங்கே உலவுவது எவ்வளவு சுகமாக இருந்திருக்கும் என்று உணர்ந்தேன்.

ஆனால் இல்லத்தின் முற்றத்தில் ஓங்கி வளர்ந்திருந்த ஒரு மரத்தி னடியில் காத்திருந்தேன். புத்துணர்ச்சியூட்டும் மண்ணின் வாசனை யைச் சுவாசித்துக்கொண்டிருந்த எனக்குத் தூக்கம் அறவே கலைந்து விட்டிருந்தது. அலுவலகத்தில் என்னுடன் வேலைசெய்யும் நண்பர்க ளின் நினைவு வந்தது. இதே நேரத்தில் அவர்கள் வேலைக்குப் போக எழுந்திருப்பார்கள்; என்னைப் பொறுத்தவரை எப்போதுமே மிகக் கடினமான நேரம் அது. இவற்றைப் பற்றி நான் சிந்தித்துக்கொண் டிருக்கையில் அந்தக் கட்டடத்தின் உட்புறத்திலிருந்து வந்த ஒரு மணியோசை என் கவனத்தைத் திருப்பியது. சன்னல்களுக்குப் பின் னால் காலை நேர அசைவுகள் தோன்றிப் பின்னர் அடங்கின. சூரி யன் வானத்தில் இன்னும் சற்று மேலே எழும்பியிருந்தது; என் பாதங் களின் சூடு உறைக்க ஆரம்பித்தது. முற்றத்தைக் கடந்து வந்த காவல்

காரன், இல்லத் தலைவர் என்னை அழைப்பதாகக் கூறினான், நான் அவரது அலுவலகத்திற்குச் சென்றேன். சில ஆவணங்களில் என் கையெழுத்தைப் பெற்றுக்கொண்டார். கோடு போட்ட கால் சட்டையுடன் கருப்பு உடை அணிந்திருந்தார் என்பதைக் கவனித்தேன். தொலைபேசியைக் கையிலெடுத்தார். என்னிடம் சொன்னார்: "அந்திமச் சடங்குகளுக்கு ஏற்பாடுசெய்திருந்த ஆட்கள் வந்து சற்று நேரமாகிறது. சவப்பெட்டியை நன்றாக மூடும்படி அவர்களுக்குச் சொல்லப்போகிறேன். அதற்கு முன்னால் கடைசியாக ஒரு முறை உங்கள் தாயாரைப் பார்க்க விரும்புகிறீர்களா?" "இல்லை," என்றேன். "பிஜாக், ஆட்களிடம் ஆரம்பிக்கலாம் என்று சொல்லுங்கள்," என்று தொலைபேசியில் குரலைத் தாழ்த்திப் பணித்தார்.

பிறகு, இறுதிச் சடங்குகளில் தான் கலந்துகொள்ளப்போவதாகத் தெரிவித்தார். நான் நன்றி கூறினேன். அவர் தன் மேசைக்குப் பின்னால் தன்னுடைய குட்டையான கால்களை ஒன்றன்மேல் ஒன்றைப் போட்டவாறு அமர்ந்திருந்தார். அன்றைய தினம் அலுவலில் இருக்கும் செவிலி, நான், அவர் மட்டுமே இருப்போம் என்று தெரிவித்தார். அவர்களுடைய விதிப்படி, இல்லத்தைச் சார்ந்த மற்றவர்கள் அடக்கத்துக்கு வரக் கூடாதாம். அவர்களுக்கு நீத்தார் கண்விழிப்பில் கலந்துகொள்ள மட்டுமே அனுமதி உண்டு. இது மனிதாபிமானம் கருதித்தான் என்று அவர் குறிப்பிட்டார். ஆனால், இந்த ஒரு சந்தர்ப்பத்தில் மட்டும், அம்மாவின் நண்பரான ஒரு முதியவருக்கு மட்டும் சவ ஊர்வலத்தில் கலந்துகொள்ள அனுமதியளிக்கப்பட்டிருந்தது: அவர் தோமா பெரே. இதைச் சொல்லும்போது இல்லத் தலைவர் புன்முறுவலுடன் சொன்னார். "இதில் பாருங்கள், இதுகூட ஒரு அசட்டுத்தனமான உணர்வுதான். ஆனால் அவரும் உங்கள் தாயாரும் எப்போதும் ஒன்றாகவே இருந்தார்கள். இங்கே எல்லோரும் அவர்களைக் கேலி செய்வார்கள்; பெரேயிடம் உங்கள் தாயாரைக் காட்டி, உங்கள் காதலி என்று சொல்வார்கள். அவர் சிரித்துக்கொள்வார், அதில் இருவருக்கும் ஒரு குஷி. திருமதி மெர்சோவின் மரணம் அவரை மிகவும் துயரப்படுத்தியிருக்கிறது. அவருக்கு அனுமதி மறுக்க முடியும் என்று என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடிய

வில்லை. இங்கே வரும் மருத்துவரின் ஆலோசனையின் பேரில் நேற்றிரவு நீத்தார் கண் விழிப்பில் கலந்துகொள்ளக் கூடாது என்று அவருக்குத் தடை விதித்திருந்தேன்.''

பிறகு, வெகு நேரம் ஒன்றும் பேசாமல் மௌனமாக இருந்தோம். இல்லத் தலைவர் எழுந்து சன்னல் வழியே வெளியே பார்த்தவாறு இருந்தார். திடீரென்று ''அதோ மாரங்கோவின் பாதிரியார் சொன்ன நேரத்துக்கு முன்பே வந்துவிட்டார்,'' என்றார். அதே ஊருக்குள் இருந்த தேவாலயத்துக்கு நடந்து செல்வதற்கு சுமார் முக்கால் மணி நேரம் ஆகுமென்று அறிவித்தார். இறங்கிவந்தோம். கட்டடத்தின் வாசலில் பாதிரியாரும் இரு பரிசாரகச் சிறுவர்களும் இருந்தனர். அதில் ஒருவன் கையில் ஒரு தூபக் கலசம். அதன் வெள்ளிச் சங்கிலி யின் நீளத்தைச் சரிசெய்துகொண்டு குனிந்தவாறு இருந்தார் பாதிரி யார். நாங்கள் அருகில் வரும்போது பாதிரியார் நிமிர்ந்தார். ''மகனே,'' என்று என்னை அழைத்து என்னிடம் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார். பிறகு அவர் உள்ளே போனார். நான் அவரைத் தொடர்ந்தேன்.

சவப்பெட்டியில் ஆணிகள் ஆழமாகச் செலுத்தப்பட்டிருந்ததும், அறையில் நான்கு கறுப்பர்கள் இருந்ததும் என் கண்ணில் சட்டெனப் பதிந்தன. அதே சமயம், கீழே வண்டி காத்திருக்கிறதென்றும், பாதிரி யார் ஜபங்களைச் சொல்ல ஆரம்பித்துவிட்டார் என்றும் இல்லத் தலைவர் சொன்னதைக் கேட்டேன். அதிலிருந்து எல்லாமே மடமட வென்று நடந்தன. ஆட்கள் ஒரு துணியை ஏந்திச் சவப்பெட்டியை நோக்கிச் சென்றார்கள். பாதிரியார், அவருடைய ஆட்கள், இல்லத் தலைவர், நான் எல்லோரும் வெளியே வந்தோம். வாசலுக்கு வெளியே எனக்குத் தெரிந்திராத ஒருத்தி இருந்தாள். திரு மெர்சோ என்று இல்லத் தலைவர் அவளிடம் சொன்னார். அவளது பெயரை நான் சரியாகக் கவனிக்கவில்லை. அந்தச் சடங்குகளுக்காக நியமனம் செய்யப்பட்டிருந்த செவிலி அவள் என்று மட்டும் புரிந்துகொண் டேன். புன்முறுவலற்ற, எலும்பும் தோலுமாக நீண்டு இருந்த முகத் தைச் சற்றே தாழ்த்தி வணக்கம் தெரிவித்தாள். நாங்கள் எல்லோரும் ஒதுங்கி நின்று சவப்பெட்டிக்கு வழிவிட்டோம். பின்னர், அதைத்

தூக்கிச் சென்றவர்களைத் தொடர்ந்து இல்லத்தை விட்டு வெளியே வந்தோம். வாசலில் ஒரு வண்டி நின்றிருந்தது. வர்ணம் தீட்டப் பட்டு, பளபளப்பாக இருந்த அந்த நீளமான வண்டி, பள்ளியில் இருக்கும் பேனாக் கூட்டினை நினைவூட்டியது. அதனருகே சவ ஊர் வலத்தை நடத்திச் செல்லும் அதிகாரி இருந்தார். விசித்திரமான உடை அணிந்திருந்த சிறிய உருவம். அருகே சற்று அசட்டுக் களை யுடன் ஒரு வயதானவர். அவர்தான் பெரே என்று தெரியவந்தது. அவர் தொப்பியின் உட்புறத்தில் வட்டமாக இருந்த ஒரு பட்டை யும், தொப்பியின் விளிம்பும் பஞ்சு போன்று இருந்தன. (சவப் பெட்டி, வாசலைக் கடக்கும்போது தொப்பியை எடுத்து அவர் மரி யாதை செலுத்தினார்.) இறுக்கமாக பூட்ஸைக் கவ்விக்கொண் டிருந்த கால் சட்டை; வெள்ளைச் சட்டையின் அகன்ற கழுத்துப் பட்டை; அதற்குச் சற்றும் பொருத்தமில்லாத மிகச் சிறிய கருப்பு டை முடிச்சு. இரு கருப்புப் புள்ளிகளாகத் தோன்றிய மூக்கின் அடிப் பாகத்தின் கீழே உதடுகள் துடித்துக்கொண்டிருந்தன. ஒட்டிவைத்துத் தையல் போட்டாற்போன்ற விசித்திரமான காதுகள், மென்மையான வெண் கேசத்திற்கு வெளியே ஆடிக்கொண்டிருந்தன.

வெளிறிப்போயிருந்த அவர் முகத்தில் அக்காதுகளின் ரத்தச் சிவப்பு எனக்கு வியப்பூட்டியது. அரசாங்க அதிகாரி எங்கள் அணி வகுப்பை ஒழுங்குபடுத்தினார். பாதிரியார் முதலில், அவருக்குப் பின்னே சவப்பெட்டி. அதைச் சுற்றி அந்த நான்கு ஆட்கள். பின்னால் இல்லத் தலைவரும் நானும், அணிவகுப்பின் முடிவில் பணிப்பெண், திரு பெரே.

வானம் முழுவதும் சூரிய ஒளி ஆக்கிரமித்துக்கொண்டிருந்தது. பூமியில் அதன் ஆதிக்கம் ஓங்கியது. வெப்பம் வேகமாக ஏறிக்கொண் டிருந்தது. அணிவகுப்பு நகருவதற்குமுன் எதற்காக அவ்வளவு நேரம் காத்திருந்தோம் என்று எனக்குப் புரியவில்லை. கருப்பு உடையி லிருந்த எனக்கு வெப்பம் தாங்க முடியவில்லை. தொப்பியால் தன் னைப் பாதுகாத்துக்கொண்டிருந்த அந்த முதியவர், மீண்டும் தொப் பியைக் கழற்றினார். அவர் பக்கம் லேசாகத் திரும்பி, அவரை நான் கவனித்துக்கொண்டிருந்தபோது இல்லத் தலைவர் என்னிடம்

அவரைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். மாலை நேரங்களில் அடிக்கடி என் தாயாரும், திரு பெரேயும் ஒரு பணிப்பெண்ணின் துணையுடன் அந்தக் கிராமம்வரை உலாவச் செல்வதுண்டு என்று அறிந்தேன். என்னைச் சுற்றியிருந்த கிராமப்புறத்தை நன்றாகப் பார்த்தேன். குன்றுவரை வானோக்கி வளர்ந்திருந்த சைப்ரஸ் மரங்களின் வரிசை; வளமாக இருந்த அந்தச் சிவந்த மண்; இங்குமங்குமாக இருந்த சுச்சிதமான வீடுகள்—இவற்றின் ஊடே அம்மாவை நான் புரிந்துகொள்ள முடிந்தது. இந்தப் பக்கங்களில் மாலை நேரம் ஒரு சோகமயமான, போர் நிறுத்தச் சூழலைப் போன்றுதான் இருந்திருக்க முடியும். இன்றோ, இந்நிலப்பரப்பைத் துடிதுடிக்கவைக்கும் அதிகமான சூரிய வெக்கை அதை மனிதாபிமானமற்றதாக, சக்தியற்றதாக ஆக்கியிருந்தது.

நாங்கள் அணியாக நகர ஆரம்பித்தோம். அப்போதுதான் பெரே சற்று நொண்டியபடி நடப்பதை நான் கவனித்தேன். கொஞ்சம் கொஞ்சமாகச் சவ வண்டியின் வேகம் அதிகரிக்க, அம்முதியவர் சற்றுப் பின்தங்க ஆரம்பித்தார். அந்த நான்கு ஆட்களில் ஒருவனும், சவ வண்டியை முன்னே போக விட்டு, சற்றுப் பின்வாங்கி என்னுடன் நடக்க ஆரம்பித்தான். உச்சி வானில் விரைவாக ஏறிய சூரியனின் வேகத்தைப் பார்த்து நான் வியப்படைந்தேன். வெகு நேரமாகவே அந்தச் சுற்றுப்புறங்களில் பூச்சிகளின் இரைச்சலும் செடிகொடிகளின் சலசலப்பும் ரீங்கரித்துக்கொண்டிருப்பதையும் கவனித்தேன். என் கன்னங்களில் வியர்வை வழிந்தோடிக்கொண்டிருந்தது. தொப்பி எதுவும் இல்லாததால் கைக்குட்டையால் விசிறிக்கொண்டேன். சவப்பெட்டியுடன் வந்த ஆட்களில் ஒருவன் ஏதோ சொன்னான். சரியாகக் கேட்கவில்லை. இது கையிலிருந்த கைக்குட்டையால் தனது தலையைத் துடைத்துக்கொண்டு வலது கையால் தொப்பியைத் தூக்கிப் பிடித்தவாறு இருந்தான். மறுபடியும் அவனிடம் என்ன என்று கேட்டேன். ஆகாயத்தைச் சுட்டிக்காட்டி, ஒரேயடியாகக் கொளுத்துகிறது என்று சொல்ல, நான் ஆமாம் என்றேன். சற்று நேரம் கழித்து ''உங்கள் அம்மாவா?'' என்று கேட்டான். மறுபடியும் ''ஆமாம்,'' என்றேன். ''வயதானவரா?'' எனக்குச் சரியாகத் தெரி

யாததால் ''ஏதோ ஓரளவு வயதானவர்தான்,'' என்று பட்டும் படாமலும் சொல்லிவைத்தேன். பிறகு அவன் மௌனமாகிவிட்டான். திரும்பிப் பார்க்கும்போது பெரே சுமார் ஐம்பது மீட்டர் பின்தங்கிவிட்டிருந்தார். தொப்பியைக் கையில் ஆட்டிக்கொண்டு அவசரஅவசரமாக முன்னேறிக்கொண்டிருந்தார். இல்லத் தலைவரையும் பார்த்தேன். தேவையற்ற எந்த அசைவுகளுமின்றி மிகக் கண்ணியமாக நடந்து வந்துகொண்டிருந்தார். நெற்றியில் முத்துமுத்தாக அரும்பிய சில வியர்வைத் துளிகளையும் துடைக்க அவர் முற்படவில்லை.

சவ ஊர்வலம் சற்று வேகமாகவே சென்றதாக எனக்குத் தோன்றியது. என்னைச் சுற்றிலும் இன்னும் அதே சூரிய ஒளியில் மூழ்கிய பளிச்சிடும் சூழல்தான். சூரிய வெளிச்சத்தின் பிரகாசம் பொறுக்க முடியாததாக இருந்தது. ஒரு குறிப்பிட்ட தூரத்திற்குப் புதிதாகப் போடப்பட்டிருந்த சாலையின் பகுதியை அப்போதுதான் கடந்தோம். உஷ்ணத்தில் தார் உருகிப்போயிருந்தது. அதில் கால்கள் பதிய, உருகிய தார் வெளியேறிப் பளபளத்துக்கொண்டிருந்தது. சவ வண்டியின்மேல் குதிரை ஓட்டியின் கரிய, மாட்டுத்தோலாலான தொப்பி, உருகிய தாரில் முக்கி எடுத்ததுபோல் இருந்தது. வெளிறிய நீலநிற ஆகாயம். சுற்றிலும் இருந்த, சலிப்பைத் தரும் கருமை, வண்டியின் அரக்குக் கருமை, அந்த வெயில், தோல், குதிரைச் சாணம், வார்னிஷ், தூபம் ஆகியவற்றின் ஒட்டுமொத்தமான வாடை, தூக்கமற்ற ஓரிரவின் களைப்பு—இவற்றால் என் பார்வை, எண்ணங்கள் எல்லாம் குழம்பியிருந்தன. மற்றும் ஒரு முறை திரும்பிப் பார்த்தபோது பெரே வெகு தொலைவில் கானல் அலைகளின் பின்னால் மறைந்திருப்பது போல் தோன்றி, சற்று நேரத்தில் என் பார்வையிலிருந்து மறைந்துபோனார். உற்றுப்பார்த்து அவரைத் தேடினேன். சாலையை விட்டு, குறுக்கே வயல்வெளியில் இறங்கிக்கொண்டிருந்தார். எனக்கு முன்னால் நாங்கள் போக வேண்டிய பாதை வளைந்து காணப்பட்டது. பெரேவுக்கு மிகவும் பழக்கப்பட்ட இடமாதலால், குறுக்கு வழியில் புகுந்து எங்களைப் பிடிக்கவே அவ்வாறு வந்தார் என்று புரிந்துகொண்டேன். திருப்பத்தில் எங்களுடன் சேர்ந்துகொண்டார். பிறகு மறுபடியும் பின்தங்கிக் காணாமல் போய்விட்டார். மறுபடி

யும் குறுக்கு வழி. இப்படியே பல முறைகள். எனக்கோ, நெற்றிப் பொட்டில் ரத்தம் கொதிப்பது போலிருந்தது.

பிறகு எல்லாமே ஒரு நிச்சய கதியில் இயல்பாகவும் மளமள வென்றும் நடந்து முடிந்ததில் இப்போது எனக்கு எதுவுமே நினை வில்லை, ஒன்றைத் தவிர; கிராமத்தில் நுழையும்போது அந்தச் செவிலி சற்றுப் பேசினாள். அவள் முகத்துக்குப் பொருத்தமில்லாத இனிமையான, துடிப்பான குரல். "மெதுவாகச் சென்றால் வெயிலில் காய வேண்டியிருக்கும். வேகமாகச் சென்றாலோ, வியர்த்துக் கொட்டி, தேவாலயத்துக்குச் சென்றதும் புழுங்கும். சளி பிடிக்கும்," என்றாள். அவள் சொன்னது சரிதான். வேறு வழியில்லை. அந்தப் பகல் பொழுதின் சில காட்சிகளை நினைவில் வைத்துக்கொண்டேன். உதாரணமாக, கடைசி முறையாக ஊர்வலத்தினுடன் பெரே சேர்ந்துகொண்டபோது அவருடைய முகம். அவருடைய நரம்புத் தளர்ச்சி, களைப்பு போன்ற உபாதைகளின் விளைவாகப் பெரிய பெரிய கண்ணீர்த்துளிகள் அவர் கன்னத்தில் வழிந்தன. ஆனாலும் சுருக்கங்கள் காரணமாக வேகமாக உருண்டோடவில்லை. ஆங் காங்கே தேங்கி, ஒன்றுசேர்ந்து, பாழடைந்த முகத்தில் நீரால் வார் னிஷ் செய்ததுபோலக் காணப்பட்டது. நினைவில் நின்ற மற்ற காட் சிகள்: தேவாலயம், நடைபாதையிலிருந்த கிராமத்தார், கல்லறை களின் மேலிருந்த சிவப்பு ஜெரேனியப் பூக்கள், பெரேயின் மூர்ச்சை (ஒடிந்துபோன பொம்மலாட்டப் பொம்மை என்று சொல்லத் தோன்றும்), அம்மாவின் சவப்பெட்டியின்மீது பரவியிருந்த ரத்தச் சிவப்பான மண்ணின் நிறம், அதோடு கலந்திருந்த வேர்களின் வெண் மையான சதை, மேலும்மேலும் ஆட்களின் கும்பல், குரல்கள், அந்தக் கிராமம், ஒரு காப்பிக் கடையின் முன் காத்திருந்தது, மோட் டாரின் இடைவிடாத இரைச்சல், அல்ஜேயின் விளக்குகளாலான கூட்டினுள் நான் சென்ற பேருந்து நுழைந்தபோது எனக்கு உண் டான மகிழ்ச்சி, குறைந்தது பன்னிரண்டு மணி நேரம் நன்றாகத் தூங்கப்போகிறேன் என்ற நினைப்பில் உண்டான நிம்மதி.

# 2

கண்விழித்தபோதுதான், நான் இரண்டு நாட்கள் விடுப்புக் கேட்டதற்கு என் முதலாளி ஏன் அப்படி முகம் சுளித்தார் என்று எனக்கு விளங்கியது. இன்று சனிக்கிழமை. அதை நான் எப்படியோ மறந்துவிட்டிருந்தேன். தூங்கி எழுந்த பின்தான் நினைவுக்கு வந்தது. ஞாயிற்றுக்கிழமையும் சேர்த்து ஒரேயடியாக நான்கு நாட்கள் வேலைக்கு வர மாட்டேன் என்பதில் அவருக்கு நிச்சயமாக மகிழ்ச்சி இருந்திருக்காது. அம்மாவின் சவ அடக்கம் இன்றைக்கு நடக்காமல் நேற்றே நடந்தது என் தவறல்ல. எப்படியிருந்தாலும் சனி, ஞாயிறு இரண்டு நாட்களும் விடுமுறையாக இருப்பதை அவர் ஒன்றும் செய்ய முடியாது. ஆனாலும் என் முதலாளி எப்படிப்பட்டவர் என்று புரிந்துகொள்ள எனக்கு இது ஒரு சந்தர்ப்பம்.

நேற்றைய பயண அலுப்பினால் படுக்கையை விட்டு எழுந்திருக்கவே சிரமமாக இருந்தது. முகச்சவரம் செய்துகொள்ளும் போது, இன்று என்ன செய்யலாம் என்று யோசித்தேன். கடலில் சென்று குளிக்கலாம். துறைமுகத்தில் உள்ள அரசாங்கக் குளியல் துறைக்கு டிராமில் போனேன். தண்ணீரில் எம்பிக் குதித்தேன். இளம் வயதினர் பலர் அங்கிருந்தனர். தண்ணீரில் மாரி கார்தோனாவைப் பார்த்தேன். முன்பு என் அலுவலகத்தில் தட்டெழுத்தராக இருந்த காலத்தில் எனக்கு அவள்மேல் நாட்டம் இருந்தது. அவளுக்கும்தான் என்று நினைக்கிறேன். ஆனால் சில நாட்களுக்குள் அங்கிருந்து போய் விட்டாள். பிறகு இருவருக்குமே நேரம் இருந்திருக்கவில்லை. நீரின் மேற்பரப்பில் மிதந்துகொண்டிருந்த ஒரு ரப்பர் மிதவைமேல் ஏற முயன்ற அவளுக்கு உதவும்போது அவள் மார்பகங்களின் மீது லேசாக உரசினேன். ரப்பர் மிதவைமீது அவள் குப்புறப் படுத்திருந்தாள். நான் நீரில் அமிழ்ந்திருந்தேன். அவள் என் பக்கம் திரும்பினாள்.

கண்களின் மேல் கேசம் வந்து விழ, அவள் சிரித்தாள். அந்த ரப்பர் மிதவை மேல் மெதுவாக ஏறி அவளருகில் சென்றேன். ரம்மியமான அந்தச் சூழலில் விளையாட்டாகச் சற்றே சரிந்து, என் தலையை அவள் வயிற்றின் மேல் வைத்துப் படுத்தேன். அவள் ஒன்றும் சொல்லவில்லை. நானும் அப்படியே இருந்தேன். வானம் முழுவதும் என் கண்களுக்குள் நீலமாகவும் பொன்னிறமாகவும் படர்ந்திருந்தது. பிடரியில், மாரியின் வயிற்றுப் பகுதி லேசாகத் துடிப்பதை உணர்ந் தேன். அந்த ரப்பர் மிதவைமேல் அரைத் தூக்கத்தில் வெகுநேரம் படுத்திருந்தோம். ஏறுவெயில் அதிகமாக, அவள் நீரில் குதித்தாள். நானும் தொடர்ந்தேன். நீந்திச் சென்று அவளைப் பிடித்த பின்பு, கையை அவள் இடுப்பைச் சுற்றிப் படர விட்டு இருவரும் ஒன்றாக நீந்தினோம். அவள் சிரித்துக்கொண்டேயிருந்தாள். கரையேறி, உட லைத் துடைத்துக்கொண்டிருக்கும்போது அவள் சொன்னாள், ''உங் களைவிட என் உடல்தான் வெயிலால் மிகவும் பழுப்பேறி யிருக்கிறது.'' அன்று மாலை சினிமாவுக்கு வர விரும்புகிறாளா என்று கேட்டேன். மறுபடியும் சிரித்துக்கொண்டே, நகைச்சுவை நடிகர் பெர்னான்டெல் படம் ஏதாவது இருந்தால் அதைப் பார்க்க மிகவும் விரும்புவதாகச் சொன்னாள். நாங்கள் உடையணிந்துகொண்டபின் என் கருப்பு டையைப் பார்த்து மிகவும் ஆச்சரியமடைந்ததுபோலக் காணப்பட்டாள். நான் துக்கம் ஏதேனும் அனுசரிக்கிறேனா என்றும் கேட்டாள். என் அம்மா இறந்துவிட்டாள் என்பதைத் தெரிவித்தேன். எப்பொழுது என்று அவள் கேட்டதால், ''நேற்றுத்தான்,'' எனச் சுருக் கமாகச் சொன்னேன். சற்றே பின்வாங்கிய அவள் வேறு ஏதும் கேட்க வில்லை. அம்மா இறந்தது என் தவறல்ல என்று கூறலாம்போல எனக் குத் தோன்றினாலும், ஏற்கனவே என் முதலாளியிடம் அவ்வாறே சொல்லியிருக்கிறேன் என்ற நினைவு வரவே நிறுத்திக்கொண்டேன். அப்படிச் சொல்வதில் அர்த்தம் எதுவும் இல்லை. எப்படியும் எல்லா ரிடமும் ஏதாவதொரு தவறு இருக்கத்தான் செய்கிறது.

மாலையில் மாரி எல்லாவற்றையுமே மறந்துவிட்டிருந்தாள். அவ் வப்போது நகைச்சுவையாக இருந்த படம் இறுதியில் ஒரே கேலிக் கூத்தாக மாறியது. அவளது கால் என் கால்மேல் பட்டவாறு இருந்தது.

நான் அவள் மார்பகங்களைத் தடவிக்கொடுத்தேன். படம் முடிவதற்குச் சற்றுமுன், அவளை முத்தமிட்டேன், ஆனால் அரைகுறையாக. வெளியே வந்த பிறகு என்னுடனேயே என் வீட்டுக்கும் வந்தாள்.

நான் விழித்துப் பார்த்தபோது மாரி புறப்பட்டுப் போயிருந்தாள். அத்தை வீட்டிற்குப் போக வேண்டுமேன்று ஏற்கனவே என்னிடம் சொல்லியிருந்தாள். அன்று ஞாயிற்றுக்கிழமை என்பதை நினைத்துப் பார்த்தபோது எனக்கு சுவாரஸ்யம் இல்லாமல் போய்விட்டது. ஞாயிற்றுக்கிழமை எனக்குப் பிடிக்காது. ஆக, மீண்டும் படுக்கைக்குத் திரும்பினேன். அங்கு மாரியின் கேசம் விட்டுச்சென்றிருந்த உப்பு வாடையைத் தலையணையில் தேடியவனாய்த் தூங்கிப்போனேன். பத்து மணிக்கு விழித்து, சிகரெட்டுகளைப் புகைத்தவாறு நடுப்பகல் வரை படுத்திருந்தேன். செலஸ்தினுடைய உணவு விடுதிக்குச் சென்று சாப்பிடப் பிடிக்கவில்லை. அவர்கள் ஏதாவது கேட்பார்கள், எனக்கு அது பிடிக்கவில்லை. சில முட்டைகளை வேக வைத்து வெறுமனே சாப்பிட்டேன். ரொட்டிகூட இல்லை. இருந்த ரொட்டியும் தீர்ந்துபோயிருக்க, மறுபடியும் கீழே இறங்கிப் போய் வாங்கிவரச் சோம்பல்.

சாப்பாட்டுக்குப் பிறகு, சலிப்படைந்துபோய் அறையில் வளைய வளைய வந்துகொண்டிருந்தேன். அம்மா இருந்தபோது இந்த வீடு இருவருக்குச் சரியாக இருந்தது. இப்போது அது என்னுடைய தேவைக்கும் மிகவும் பெரிதாக இருந்தது. உணவருந்தும் அறையில் இருந்த மேஜையை என்னுடைய அறைக்கு நகர்த்திவிட்டிருந்தேன். இப்போது நான் வசிப்பது முழுக்கமுழுக்க இந்த அறையில் தான்—சற்றே தொய்ந்துபோயிருந்த பிரம்பு நாற்காலி, பழுப்பேறிய கண்ணாடி அலமாரி, ஒப்பனை மேஜை, செம்பினால் ஆன கட்டில். வீட்டின் மற்ற பகுதியைப் பயன்படுத்துவதில்லை.

சிறிது நேரம் கழித்து ஏதாவது செய்ய வேண்டுமென்பதற்காக ஒரு பழைய செய்தித்தாளை எடுத்துப் படித்தேன். 'க்ருஷென் உப்பு' விளம்பரம் ஒன்றை வெட்டி எடுத்து ஒரு பழைய நோட்டுப் புத்தகத்தில் ஒட்டினேன். செய்தித்தாள்களில் என்னைக் கவர்ந்த அம்சங்களை வெட்டி எடுத்து இந்த நோட்டில்தான் ஒட்டி வைப்பேன். கைகளைக் கழுவியபின், கடைசியாக பால்கனிக்குச் சென்று அமர்ந்தேன்.

நான் குடியிருந்த பகுதியின் பிரதான தெருவைப் பார்த்ததாக அமைந்திருந்தது என் அறை. அன்று மாலைப் பொழுது அழகாக இருந்தது. நசநசவென்று நடைபாதைகளில் சிலர் அவசரமாகச் சென்றுகொண்டிருந்தார்கள். முதலில் நான் பார்த்தது, உலாவச் செல் லும் ஒரு குடும்பத்தினரை. கப்பற்படையினர் போன்ற உடை யணிந்த இரு சிறுவர்கள். முழங்காலுக்கும் சற்றுக் கீழே நீண்ட அரை நிஜார்கள். உடைகளின் விறைப்பால் அவர்கள் சற்று இயல்பாக இல்லாமல் இருந்தனர். அவர்களுடன் ரோஜா நிற ரிப்பனும் பள பளக்கும் கருப்புக் காலணியும் அணிந்திருந்த ஒரு சிறுமி. அவர் களுக்குப் பின்னால் அரக்கு வண்ணப் பட்டுடை அணிந்திருந்த, பருமனாக இருந்த அம்மா; சற்றே சோனியாக, குட்டையாக இருந்த அப்பா. அவரை நான் ஏற்கனவே பார்த்திருக்கிறேன். தட்டையான ஓலைத் தொப்பி, பட்டாம்பூச்சி போன்ற டை முடிச்சு, கையில் ஒரு பிரம்பு. அந்த வட்டாரத்தில் அவர் ஒரு பிரபலமான புள்ளி என்று மற்றவர்கள் ஏன் சொல்கிறார்கள் என்பது அவர் மனைவி சகிதமாக அவரைப் பார்த்தபோது எனக்குப் புரிந்தது. சற்று நேரம் கழித்து அந்த வட்டாரத்து இளைஞர்கள் அவ்வழியே சென்றனர். படியப்படிய வாரிய தலை. சிவப்பு டை, ஓரங்களில் அலங்கரிக்கப்பட்ட பாக் கெட்டுடன், நன்கு வளைத்து வெட்டப்பட்டிருந்த கோட்டு. சதுர முனைகள் கொண்ட காலணிகள். அவர்கள் அந்த ஊரின் மத்தியப் பகுதியில் இருந்த சினிமா அரங்குகளுக்குச் சென்றுகொண்டிருந்த னர் என்று தோன்றியது. இவ்வளவு சீக்கிரமாகப் புறப்பட்டு உரக்கச் சிரித்துக்கொண்டு டிராம் வண்டியைப் பிடிக்கச் சென்றது அதற் காகத்தான்.

அவர்கள் சென்ற பிறகு சிறிதுசிறிதாகக் கூட்டம் குறைந்து தெரு வெறிச்சோடியிருந்தது. நகரின் எல்லாக் கேளிக்கைகளும் ஆரம்பித் திருக்க வேண்டும். தெருவில் தென்பட்டதெல்லாம், கடை வைத் திருப்பவர்களும் சில பூனைகளுமே. வானம் மேகங்களற்று இருந் தாலும், தெரு ஓரமாக இருந்த அத்தி மரங்களின் மேலே பிரகாசமற்று இருந்தது. எனக்கெதிரிலிருந்த நடைபாதையில் சிகரெட் கடைக் காரர் உள்ளேயிருந்து ஒரு நாற்காலியை எடுத்துவந்து கதவுக்கு

எதிரில் போட்டு அதன் முதுகுப்புறமிருந்த பட்டையின் மேல் இரு கைகளையும் போட்டவாறு அமர்ந்தார். இதுவரை நிரம்பி வழிந்த டிராம் வண்டிகள் இப்போது சற்றுக் காலியாகவே சென்றன. சிகரெட் கடையின் பக்கத்திலிருந்த 'பியரோவின் இல்லம்' என்ற காப்பிக் கடையின் ஆளற்றுப்போயிருந்த அறையை ஒரு வேலைக்காரப் பையன் பெருக்கிச் சுத்தம்செய்துகொண்டிருந்தான். அன்று உண்மையிலேயே ஞாயிற்றுக்கிழமைத் தன்மை நிலவியிருந்தது.

நான் என் நாற்காலியை அந்தக் கடைக்காரர் செய்ததுபோலத் திருப்பிப் போட்டு அமர்ந்தேன். சௌகரியமாகவே இருந்தது. இரண்டு சிகரெட்டுகளைப் புகைத்தேன். உள்ளே சென்று சில சாக்லெட் துண்டுகளை எடுத்துவந்து ஜன்னலருகில் உட்கார்ந்து சாப்பிட்டேன். சற்று நேரத்தில் வானம் இருண்டுவரவே கோடை மழை பெய்யும் என்று தோன்றியது. ஆனால் சிறிதுசிறிதாக மேகமூட்டம் விலகியது. மழை பெய்யலாம் என்ற நம்பிக்கையை அளித்துச் சென்ற மேகங்களின் ஓட்டம் தெருவைச் சற்று இருளச் செய்திருந்தது. நான் வெகு நேரம் ஆகாயத்தைப் பார்த்தவாறே இருந்தேன்.

ஐந்து மணியளவில் டிராம் வண்டிகள் மிகுந்த இரைச்சலுடன் வர ஆரம்பித்தன. புறநகர் மைதானத்திலிருந்து திரும்பிவரும் பார்வையாளர்கள் அவற்றின் படிகளிலும், கைப்பிடிகளிலும் தொற்றிக்கொண்டு வந்தனர். பின்னால் வந்த டிராம் வண்டிகளில் இருந்த விளையாட்டு வீரர்களை அவர்கள் வைத்திருந்த தோல்பைகளிலிருந்து அடையாளம் தெரிந்துகொண்டேன். தங்கள் விளையாட்டு மன்றம் என்றுமே அழியாதென்று உரக்கக் கூச்சலிட்டுப் பாடிக்கொண்டு வந்தனர். அநேகர் என்னைப் பார்த்துக் கைகளை ஆட்ட, ஒருவன் மட்டும் கத்தினான்; ''அவர்களை நொறுக்கிவிட்டோம்.'' நானும் ''ஓகோ,'' என்று தலையசைத்தேன். இதற்குப் பிறகு வாகனங்கள் அதிகமாக வரத் தொடங்கின.

அன்றைய பொழுது இன்னும் சற்றுக் கழிந்திருந்தது. கட்டடங்களின் கூரைகளுக்குமேல், வானம் சிவப்பேறித் தெரிந்தது. பின் மாலைப் பொழுதும் தொடங்கவே, தெருக்களில் நடமாட்டம் அதிகரித்தது. உலாவச் சென்றவர்கள் கொஞ்சம்கொஞ்சமாகத் திரும்

பத் தொடங்கியிருந்தனர். அவர்களிடையே அந்த வட்டாரத்தின் பெரும் புள்ளியான அந்த மனிதரையும் பார்த்தேன். அந்தக் குழந்தைகள் அழுதவாறே பின்தொடர்ந்துகொண்டிருந்தன. அதே சமயம், அந்த வட்டாரத்திலிருந்த சினிமா அரங்குகள் ஜனத்திரளைத் தெருவில் கொட்டியிருந்தன. அவர்களிடையே, இளவட்டங்கள் வழக்கத்தைவிட அதிகமாகக் கைகளை ஆட்டிப் பேசிய வண்ணம் காணப்பட்டனர். அவர்கள் ஏதோ வீர சாகசப் படம் பார்த்துவிட்டு வருகிறார்கள் எனத் தோன்றியது. நகரின் மையப் பகுதியில் சினிமா பார்க்கச் சென்றவர்கள் சற்று நேரம் கழித்துத் திரும்பி வந்தனர். அவர்கள் சற்று இறுக்கமாகக் காணப்பட்டனர். அவ்வப்போது சிரித்தாலும் சற்று அயர்ந்திருந்தவர்களாகவும், ஏதோ நினைப்பில் மூழ்கியவர்களாகவும் தோன்றினார்கள். அவர்கள் எனக்கெதிரில் இருந்த நடைபாதையில் போய்க்கொண்டும் வந்துகொண்டும் இருந்தார்கள். அந்த வட்டாரத்தைச் சேர்ந்த தொப்பிகள் ஏதும் அணியாத சில இளம் பெண்கள் கூந்தலைத் தொங்கவிட்டுக் கைகோத்த வண்ணம் நின்றிருந்தனர். அங்கிருந்த சில இள வட்டங்கள் வேண்டுமென்றே அவர்களைக் கடந்து செல்லச் சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக்கொண்டு தமாஷாக ஏதாவது சொல்ல, அப்பெண்கள் தலையைத் திருப்பிச் சிரிக்கவும் செய்தனர். அவர்களில் எனக்குத் தெரிந்த பல பெண்கள் நான் இருந்த பக்கம் பார்த்துக் கையசைத்தனர்.

திடீரென்று பிரகாசமாக எரியத் தொடங்கிய தெருவிளக்குகள், முன்னிரவில் ஆகாயத்தில் தோன்றிய நட்சத்திரங்களை மங்க வைத்தன. ஜனத்திரளாகவும் ஒளித்திரளாகவும் இருந்த நடைபாதைகளைப் பார்த்துப்பார்த்து என் கண்கள் அயர்வடைந்திருந்தன. தெருவில் பரவியிருந்த ஈரமாக இருந்த கற்கள் விளக்கொளி பட்டு ஒளிர்ந்தன. அவ்வப்போது டிராம் வண்டிகளிலிருந்து பாய்ந்து வந்த ஒளிக்கற்றையில் பளபளக்கும் கூந்தல் அல்லது ஒரு புன்சிரிப்பு, அல்லது ஒரு வெள்ளி வளையல் மின்னியது. நேரம் ஆகஆக, டிராம் வண்டிகள் குறைய, மரங்கள், தெருவிளக்குகள் இவற்றின் மேல் இருளின் கருமை படர, அந்த வட்டாரத்தில் ஜன நடமாட்டம் குறைந்துகொண்டிருந்தது. ஆளரவம் அற்றுப்போயிருந்த அத்தெருவின்

குறுக்கே மறுபடியும் ஒரு பூனை மெதுவாகச் சென்றது. அப்போது தான் சாப்பிட நேரமாகிவிட்டதை நான் உணர்ந்தேன். நாற்காலியின் முதுகுப்பட்டையில் வெகு நேரம் சாய்ந்து உட்கார்ந்திருந்ததால் கழுத்து லேசாக வலித்தது. தெருவுக்கு இறங்கி வந்து சிறிது ரொட்டிமாவு வாங்கி வந்து சமைத்து, நின்றவாறே சாப்பிட்டு முடித்தேன். ஜன்னலருகே நின்று ஒரு சிகரெட் புகைக்க வேண்டும்போல் தோன்றியது. ஆனால் வெளியே பனிபெய்யத் தொடங்கிக் குளிராக இருந்தது. ஜன்னல் கதவுகளை மூடி விட்டுத் திரும்பும்போது நிலைக் கண்ணாடியில் மேசையின் ஒரு பகுதி, அதன் மேல் இருந்த ஸ்பிரிட் விளக்கு, அதனருகில் ரொட்டித் துண்டுகள் ஆகியவற்றைப் பார்த்தேன். மற்றுமொரு ஞாயிற்றுக்கிழமையும் ஒருவாறாகக் கழிந்து போய்விட்டது என்பதையும் என் அம்மா இப்போது அடக்கம் செய்யப்பட்டுவிட்டிருந்தாள் என்பதையும், மறுபடியும் நாளை முதல் என் அலுவலை நான் தொடர்வேன் என்பதையும் நினைத்துப் பார்த்தேன். மொத்தத்தில் எதுவுமே மாறியிருக்கவில்லை.

# 3

இன்று நான் அலுவலகத்தில் நிறைய வேலைசெய்தேன். என் முதலாளியும் என்னிடம் கனிவாக நடந்துகொண்டார். எனக்கு மிகவும் களைப்பாக இருக்கவில்லையா, என் அம்மாவுக்கு என்ன வயது என்றெல்லாம் விசாரித்தார். இதில் தவறு நேரக் கூடாது என்ற நினைவில், "சுமார் அறுபது வயது இருந்திருக்கும்," என்று சொன்னேன். அவர் ஏதோ ஆறுதல் அடைந்தது போலவும், அச்சம்பவம் நடந்து முடிந்த கதை என்று கருதுவது போலவும் ஏன் தோன்றினார் என்பது தான் எனக்குப் புரியவில்லை.

என் மேஜையில் சரக்குகள் அனுப்பியதற்கான பில்கள் குவிந்து கிடந்தன. அவற்றையெல்லாம் நான் பிரித்து அடுக்க வேண்டியிருந்தது. மதிய உணவுக்காக வெளியில் செல்லுமுன் கைகளைக் கழுவிக் கொண்டேன். மதியத்தில் எனக்குப் பிடித்தமானது இதுதான். மாலை வேளையில், நாள் முழுவதும் உபயோகப்படுத்தப்பட்டு ஒரே ஈரமாகப் போய்விடும் அந்தக் கைத்துண்டுச் சுருள் அருவருப்பை ஏற்படுத்தும். இதை நான் ஒரு முறை முதலாளியிடம் தெரிவித்தது உண்டு. இது வருந்தத் தக்கதுதான் என்று அவர் பதிலளித்தபோதிலும், அது அவருக்கு அவ்வளவு முக்கியமான விஷயமாக இருந்ததில்லை. பன்னிரண்டரை மணியளவில் அஞ்சல் பிரிவில் வேலைபார்க்கும் இம்மானுவேலுடன் அலுவலகத்தை விட்டுக் கிளம்பினேன். எங்கள் அலுவலகம் கடலுக்கெதிரில் இருந்தது. அங்கே துறைமுகத்தில் வெயிலில் காய்ந்துகொண்டிருந்த சரக்கு மூட்டைகளைப் பார்த்த வாறே சற்று நேரத்தைக் கழித்தோம். அப்போது இரைச்சலையும் பயங்கரச் சத்தத்தையும் எழுப்பியபடி ஒரு லாரி சென்றது. இம்மானுவேல் என்னைப் பார்த்து "ஓடிப் பிடிக்கலாமா," என்று கேட்கவும் ஓட ஆரம்பித்தேன். லாரி எங்களைத் தாண்டிச் சென்றிருந்தது. அதன்

பின்னால் இருவரும் ஓடினோம். இரைச்சலுடன் அது கிளப்பிய புழுதியில் நான் அமிழ்ந்துபோனேன். என்னால் வேறு எதையும் பார்க்க முடியவில்லை. அங்கிருந்த டிரெய்லர்கள், பளு தூக்கும் எந் திரங்கள் இவற்றின் மத்தியில் தாறுமாறாக நாங்கள் ஓடிய ஓட்டம், அடிவானத்தில் அசைந்துகொண்டிருந்த கப்பல்களின் கொடிக் கம் பங்கள், நாங்கள் ஓடிய பாதைக்கு அருகே இருந்த கப்பல்களின் அடித் தளங்கள் இவற்றைத் தவிர வேறெதுவும் எங்கள் கவனத்தில் இருக்க வில்லை. நான்தான் முதலில் தாவிப் பிடித்து லாரியில் குதித்து உட் கார்ந்தேன். பிறகு இம்மானுவேல் உட்கார உதவினேன். எங்களுக்கு மூச்சு வாங்கியது. துறைமுகத்தின் கரடுமுரடான தளத்தில் புழுதி, சூரிய வெப்பம் இவற்றினிடையே குலுங்கிக் குதித்துச் சென்றது லாரி. இம்மானுவேல் மூச்சுமுட்டச் சிரித்துக்கொண்டிருந்தான்.

வியர்வையில் குளித்தவாறு, செலஸ்தினுடைய உணவு விடு திக்கு வந்தோம். செலஸ்த் எப்போதும் போல அங்குதானிருந்தான் பெரிய தொப்பை, அதன் மேலிருந்த அங்கி, நரைத்துப்போயிருந்த மீசை. "சௌக்கியந்தானே" என்று கேட்டான். ஆமாம் என்றும் பசிக் கிறது என்றும் கூறினேன். விடுவிடுவென்று உணவருந்திவிட்டுச் சிறிது காப்பி அருந்தினேன். உணவுடன் ஏராளமாக ஒயின் குடித் திருந்ததால் பிறகு வீட்டுக்குச் சென்று சற்றுக் கண்ணயர்ந்தேன். தூங்கி எழுந்தவுடன் புகைபிடிக்க வேண்டும்போல் இருந்தது. நேர மாகிவிட்டிருந்ததால் டிராமைப் பிடிக்க ஓடினேன். பிற்பகல் முழு வதும் அலுவலகத்தில் வேலை செய்தேன். உள்ளே இருக்கும்வரை மிகவும் வெப்பமாக இருந்தது. மாலையில் வெளியே வந்து துறை முகத்தை ஒட்டியவாறு மெதுவாக நடந்து சென்றது மனதுக்கு இத மாக இருந்தது. வானம் பசுமையாக இருந்தது. நான் சந்தோஷப் பட்டேன். இப்படியே இருக்க வேண்டும்போலிருந்தாலும் இரவுச் சாப்பாட்டிற்காக உருளைக்கிழங்கு வேக வைக்க வேண்டியிருந்த தால் நேரே வீட்டிற்குச் சென்றேன்.

மாடிப்படிகளில் ஏறும்போது இருட்டாக இருந்தது. குறட்டில் எனக்கு அடுத்த குடியிருப்பில் இருந்த முதியவர் சலாமானோவின் மேல் முட்டிக்கொண்டேன். அவருடைய நாயும் அவருடன் இருந்

தது. எட்டு ஆண்டுகளாக நான் அவர்களை ஒன்றாகப் பார்க்கிறேன். அந்த ஸ்பானியல் நாய்க்கு ஒருவிதச் செந்நிறச் சருமநோய் என்று நினைக்கிறேன். அதனால் அது தன் ரோமத்தை இழந்து உடல் முழுவதும் தழும்புகளும், பழுப்பு நிறத் தடிப்புகளுமாகக் காணப்பட்டது. தனியாக அந்தச் சிறிய அறையில் அதனுடன் வாழ்ந்துகொண்டிருந்த காரணத்தினாலோ என்னவோ அந்த முதியவர் சலாமானோ அந்தக் கிழட்டு நாயைப் போலவே தோற்றமளித்தார். அவர் முகத்திலும் சிவப்பு நிறத் தடிப்புகள், ஆங்காங்கே காணப்பட்ட செம்பட்டை ரோமம். அந்த நாயோ தன் எஜமானரின் கூன்விழுந்த தோற்றத்தைப் பெற்றிருந்தது. தாழ்ந்து வளைந்த கழுத்து, முன்தள்ளிய நாசி, ஒரே இனத்தைச் சேர்ந்திருந்தாலும் ஒருவரையொருவர் வெறுப்பதுபோல் தோற்றமளித்தனர். காலை பதினோரு மணிக்கும், மாலை ஆறு மணி அளவிலும் தினசரி இருமுறை அம்முதியவர் அந்த நாயை உலாவ இட்டுச் செல்வார். எட்டாண்டுகளாக அவர்களது அந்த நிகழ்ச்சிநிரல் மாறவேயில்லை. லியோன் சாலை நெடுகிலும், அம்முதியவர் தடுமாறும் வகையில் அந்த நாய் அவரை இழுத்துச் செல்வதைப் பார்க்கலாம். அப்போதெல்லாம் அவர் அதை அடித்துத் திட்டுவார். அது பயந்துபோய்த் தரையோடு ஒட்டிக்கொள்ளும். இனி அவர்தான் அதை இழுத்துச்செல்ல வேண்டும். சற்று நேரத்தில் அந்தச் சம்பவத்தை மறந்துவிட்டு மறுபடியும் அந்த நாய் அவரை இழுத்துச் செல்ல, அவர் மறுபடியும் அதை அடித்துத் திட்டுவார். இறுதியில் இருவரும் நடைபாதையில் அப்படியே நின்று ஒருவரையொருவர் பார்த்தவண்ணம் இருப்பார்கள்—நாய் பயத்துடனும், அவர் வெறுப்புடனும், இது அன்றாட நிகழ்ச்சி. அந்த நாய் சிறுநீர் கழிக்க விரும்பும்போது அவர் பொறுத்திராமல் அதை இழுத்துக்கொண்டு போவார். அது சிறுசிறு சொட்டுகளாக ஒரு நீண்டகோடு இழுத்தவாறே செல்லும். எப்போதாவது அறையிலேயே அது சிறுநீர் கழித்துவிட்டு அவரிடம் உதை வாங்கும். இப்படியே எட்டு ஆண்டுகளாக நடந்துவருகிறது. செலஸ்த் என்னிடம் எப்போதும், ''இது என்ன கஷ்டம்,'' என்று சொல்வான். ஆனால், பார்க்கப்போனால் யாருக்குக் கஷ்டம் என்று எவருக்கும் தெரியாது. நான் அந்த முதியவரைப் படிக்கட்டில் சந்தித்தபோது, அவர் அந்த நாயைத் திட்டிக்கொண்

டிருந்தார். ''தேவடியாள் மகனே! மிருகமே!'' என்று அவர் கத்த, நாய் முனகிக்கொண்டிருந்தது. நான் ''வணக்கம்,'' என்றேன். அவர் விடாமல் நாயைத் திட்டிக்கொண்டிருந்தார். அப்படி அந்த நாய் என்னதான் செய்தது என்று நான் கேட்டேன். அவர் பதில் சொல்ல வில்லை. வெறுமனே, ''தேவடியாள் மகனே! மிருகமே,'' என்று மட்டும் சொல்லிக்கொண்டிருந்தார். அதை நோக்கிக் குனிந்து அவர் அதன் கழுத்துப் பட்டையைச் சரிசெய்துகொண்டிருப்பதாக நினைத்தேன். நான் சற்று உரக்கவே பேசினேன். மனதிற்குள் பொங்கும் கோபத்துடன் திரும்பிப் பார்க்காமலேயே ''எப்போது பார்த்தாலும் அது அங்கேயே நகராமல் இருக்கிறது,'' என்று எனக்குப் பதிலளித்தார். பிறகு நான்கு கால்களையும் பரப்பி முரண்டுசெய்துகொண்டிருந்த நாயை இழுத்துக்கொண்டு சென்றார். அது முனகிக்கொண்டிருந்தது.

அப்போது, அதே மாடியில் வசிக்கும் மற்றொருவனும் வந்தான். அவன் பெண்களை வைத்துப் பிழைப்பு நடத்துகிறான் என்று எங்கள் வட்டாரத்தில் பேசிக்கொள்வார்கள். ஆனாலும் அவனது தொழிலைப் பற்றிக் கேட்டால் 'கடை வைத்திருப்பவன்' என்று சொல்லி வந்தான். பொதுவாக அவனைக் கண்டால் யாருக்கும் பிடிக்காது. ஆனால் அவன் என்னிடம் அடிக்கடி பேசுவான். சில சமயம் என் வீட்டுக்கு வந்து சற்று இருந்துவிட்டுப் போவான். ஏனென்றால் அவன் சொல்வதை நான் கேட்டுக்கொண்டிருப்பேன். அவன் சொல்வதும் சுவாரஸ்யமாக இருப்பதாக எனக்குத் தோன்றும். மேலும் அவனுடன் பேசாமல் இருப்பதற்கு எந்தக் காரணமும் இருந்ததாக எனக்குப் படவில்லை. அவன் பெயர் ரேமோன் சேந்தேஸ். குள்ளமாக இருந்தான். பெரிய தோள்கள், குத்துச் சண்டைக்காரன் போன்ற மூக்கு, எப்போதுமே கச்சிதமாக உடையணிவான். முதியவர் சலாமானோவைப் பற்றிப் பேசும்போது அவனும் சொன்னான். ''சே, இது என்ன கஷ்டம். அது உனக்குத் தொந்தரவாக இல்லையா,'' என்றும் கேட்டான். நான் இல்லை என்றேன்.

நாங்கள் ஒன்றாகப் படியேறிச் சென்று, பிரிந்து செல்லும்போது அவன், ''என் வீட்டில் கொஞ்சம் பலகாரமும் ஒயினும் இருக்கிறது.

வந்து என்னுடன் ஒருவாய் சாப்பிட்டுவிட்டுப் போகலாமே,'' என்று அழைத்தான். நான் வீட்டுக்குச் சென்று சமைப்பதைத் தவிர்க்கலாம் என்ற எண்ணத்தில் அவனுடன் செல்ல ஒப்புக்கொண்டேன். ஒரே ஒரு படுக்கை அறையும் ஜன்னலற்ற ஒரு சமையல் அறையும் மட்டுமே அவனுக்கும் இருந்தன. அவனது கட்டிலின் மேற்புறத்தில் வெள்ளை, ரோஜா நிறங்களிலான தேவதையின் படமும், சில விளையாட்டு வீரர்களின் படங்களும், ஒன்றிரண்டு நிர்வாணப் பெண்களின் படங்களும் இருந்தன. அறை அழுக்காக இருந்தது. படுக்கை கலைந்து இருந்தது. அங்கிருந்த பெட்ரோல் விளக்கு ஒன்றை ஏற்றிவைத்துவிட்டு, பாக்கெட்டிலிருந்து ஒருவிதமான பிளாஸ்திரியை எடுத்துத் தனது வலது கையில் சுற்றி ஒட்டிக்கொண் டான். அது என்னவென்று நான் கேட்டேன். அவனை வம்புக்கிழுத்த ஒருவனுடன் சண்டை போட்டதன் விளைவு என்று அவன் சொன் னான்.

பிறகு அவன் சொன்னான், ''மெர்சோ, உங்களுக்குத் தெரியும், நான் கெட்டவன் இல்லை. ஆனால் கொஞ்சம் முன்கோபி. அந்த ஆள், 'நீ ஆண்பிள்ளையாக இருந்தால் டிராமை விட்டு இறங்கு' என்று சொன்னான். 'அட சும்மா இரு' என்று சொன்னேன். 'நீ ஆண் பிள்ளை இல்லை' என்று அவன் சொன்னான். அத்துடன் நான் கீழே இறங்கி, 'போதும் விடு, இல்லையென்றால் உடம்பு பழுத்துப் போகும்' என்று சொன்னேன். 'என்ன செய்வாய்?' என்றான். ஒரு உதை விட்டேன். ஆள் கீழே விழுந்துவிட்டான். சரி, தூக்கிவிடலாம் என்று பக்கத்திலே போனேன். விழுந்த நிலையிலேயே எட்டிஎட்டி உதைத்தான். நானும் விடாமல் முட்டியால் இரண்டு குத்து விட் டேன். அவன் முகமெல்லாம் ரத்தம். 'என்னப்பா, கணக்குத் தீர்ந்து போய்விட்டதா' என்று கேட்டேன். அவனும் 'சரிதான்' என்றான்.''

பேசிக்கொண்டே, சேந்தேஸ் பிளாஸ்திரிக் கட்டைச் சரிசெய்து கொண்டிருந்தான். நான் கட்டிலின் மேல் உட்கார்ந்திருந்தேன். அவன் சொன்னான், ''ஆனால் பாருங்கள், வம்புக்கு நானாகப் போக வில்லை. அவனாகத்தான் வந்தான்.''அவன் சொன்னது சரிதான் என்று எனக்குத் தோன்றியது. அதை அவனிடம் சொன்னேன். நான்

வாழ்க்கையைப் பற்றி நன்கு அறிந்திருந்தவன் என்பதாலும், அவனுக்கு நான் உதவ முடியும் என்பதாலும் இந்த விவகாரம்பற்றி என் ஆலோசனையைக் கேட்க விரும்புவதாகவும், இதிலிருந்து எங்களிடையே நட்பு உருவாகும் என்றும் கூறினான். நான் ஏதும் பேசாமல் இருக்க, அவன் மறுபடியும் தன் நண்பனாக இருக்க எனக்கு விருப்பமா என்று கேட்டான். எனக்கு எல்லாம் ஒன்றுதான் என்றேன். அவன் திருப்தியுற்றவன்போல் காணப்பட்டான். அவன் சாப்பிடுவதற்காக வைத்திருந்த 'புட்டிங்'கை எடுத்து அடுப்பில் வைத்துச் சமைக்கும்போது மேஜையில் கண்ணாடித் தம்ளர்கள், தட்டுகள், முள்கத்தி, கத்தி வகையறாக்கள், இரண்டு பாட்டில் ஒயின் ஆகியவற்றைப் பரப்பி வைத்தான். இருவருமே ஒன்றும் பேசவில்லை. பிறகு இருவருமே சாப்பிட உட்கார்ந்தோம். சாப்பிடும்போது அவன் தன் கதையைச் சொல்லத் தொடங்கினான். முதலில் சற்றுத் தயங்கினான். ''எனக்கு ஒரு பெண்ணைத் தெரியும்... அதாவது அவளை என் வைப்பாட்டி என்று சொல்லலாம்.'' அவனுடன் வம்புக்கு வந்தவன் அந்தப் பெண்ணின் சகோதரன். ரேமோன் அந்தப் பெண்ணை வைத்துக் காப்பாற்றிவந்ததாகச் சொன்னான். நான் ஒன்றும் சொல்லவில்லை. இருந்தபோதிலும் அந்த வட்டாரத்தில் தன்னைப் பற்றி என்ன பேசிக்கொண்டார்கள் என்பது தனக்குத் தெரியுமென்றும், இருந்தாலும் தன்னைப் பொறுத்தவரை தனக்கென்று ஒரு மனசாட்சி உண்டென்றும், தான் ஒரு கடை வைத்திருப்பவனென்றும் சொன்னான்.

ரேமோன் தொடர்ந்து பேசினான்: ''சரி என் கதைக்கு வருவோம். என்னவோ ஏமாற்றுவேலை நடப்பதாக எனக்குத் தோன்றியது.'' அவள் வாழ்க்கை நடத்துவதற்குப் போதுமான பண உதவியை அவன் செய்துவந்தான். அவள் வசித்துவந்த அறைக்கு வாடகை கொடுத்ததுடன் ஒரு நாளைக்கு இருபது ஃபிராங்க் சாப்பாட்டுக்காகக் கொடுக்கவும் செய்தான். ''வாடகை முன்னூறு ஃப்ராங்க், சாப்பாட்டுக்கு அறுநூறு ஃபிராங்க், அவ்வப்போது இரு காலுறைகள். ஆக மொத்தம் மாதாமாதம் ஆயிரம் ஃபிராங்க். அப்படியிருந்தும் அந்த ராணியம்மாள் வேலை ஒன்றும் செய்ய மாட்டாள். மாறாக நான் கொடுத்த

பணம் மிக அளவாகவே இருந்ததென்றும் அது அவளுக்குப் போதவில்லையென்றும் சொல்லிவந்தாள். நான் அவளிடம், 'நீ ஏன் தினம் அரை நாளாவது ஏதாவது வேலை செய்யக் கூடாது? சின்னச் சின்னத் தேவைகளுக்கெல்லாம் என்னைத் தொந்தரவு செய்யாமல் இருக்கலாமே? இந்த மாதம் நான் உனக்கு ஒரு செட் துணிமணிகள் வாங்கிக்கொடுத்திருக்கிறேன். ஒரு நாளைக்கு இருபது ஃப்ராங்க் கொடுக்கிறேன். வாடகை கட்டுகிறேன். நீயோ மத்தியான வேளை களில் உன் சிநேகிதிகளுடன் காப்பி குடித்துக்கொண்டு பொழுதைப் போக்குகிறாய். நீ அவர்களுக்கு காப்பியும் சர்க்கரையும் கொடுத்துக் கொண்டிருக்க, நான் உனக்குப் பணம் கொடுக்க வேண்டும், இல் லையா? நான் உன்னை நல்லபடியாகத்தான் நடத்துகிறேன். நீதான் என்னைக் கஷ்டப்படுத்துகிறாய்' என்றெல்லாம் சொன்னேன். ஆனா லும் அவள் ஒரு வேலையும் செய்யவில்லை. கொடுத்த பணம் போத வில்லை என்று மட்டும் புலம்பிக்கொண்டே இருந்தாள். அப்போது தான் நான் ஏமாற்றப்பட்டுவருவதாக அறிந்தேன்.''

பிறகு ஒருநாள் அவளது கைப்பையில் ஒரு லாட்டரிச் சீட்டு இருப்பதைப் பார்த்ததாகவும், அதை எப்படி அவள் வாங்கினாள் என்பதற்குச் சரிவர விளக்கம் சொல்லவில்லை என்றும் கூறினான். சில நாட்களுக்குப் பின் அவள் வீட்டில் அவன் கண்ணில் தென்பட்ட 'ஒரு அடகுச் சீட்டிலிருந்து' அவளுடைய இரு வளையல்களை அவள் அடகுவைத்திருந்த விஷயத்தைக் கண்டுபிடித்தான். அது வரையில், அவளிடம் வளையல்கள் இருந்ததே அவனுக்குத் தெரி யாது. ''அப்போதுதான் அவள் என்னை ஏமாற்றி வந்திருப்பது தெரிய வந்தது. அவளை விட்டுப் போய்விட்டேன். ஆனால் அதற்கு முன் னால் அவளை அடித்தேன். சில உண்மைகளை அவளிடம் எடுத்துச் சொன்னேன். அவளுடைய உடலின்பம் ஒன்றுதான் அவளுக்கு முக்கியமாக இருந்திருக்கிறது என்றும் சொன்னேன். பாருங்கள் மெர்சோ. நான் இதையும் சொன்னேன். 'உன்னை எவ்வளவு சந் தோஷமாக வைத்திருக்கிறேன் என்பதுபற்றி மற்றவர்கள் எவ்வளவு பொறாமைப்படுகிறார்கள் என்றெல்லாம் உனக்கு இப்போது தெரி யாது. அதெல்லாம் பிற்காலத்தில்தான் உனக்குப் புரியும்.'''

அவளுக்கு ரத்தக் காயம் ஏற்படும் வகையில் அவளை அடித்திருக்கிறான். அதற்கு முன்னால் அவளை அவன் அப்படி அடித்ததில்லை. ''எப்போதாவது அவளை நான் லோசாகத் தட்டுவது உண்டு. அன்பினால் என்றுகூடச் சொல்லலாம். அவள் அழுவாள். நான் சன்னல் திரைகளை இழுத்து மூடுவேன். எல்லாம் சரியாகிவிடும். ஆனால் இம்முறை நிஜமாகவே அடித்தேன். என்னைப் பொறுத்தவரை அது கூடப் போதாது என்றே சொல்லுவேன்.''

இந்த நிலைமையில் மற்றவர்களுடைய ஆலோசனை நனக்கு எவ்வளவு தூரம் தேவையாக இருந்ததென்று அவன் தெரிவித்தான். அங்கு எரிந்துகொண்டிருந்த விளக்கின் திரியைச் சரிசெய்வதற்காகப் பேசுவதைச் சற்று நேரம் நிறுத்தினான். நான் இன்னும் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். கிட்டத்தட்ட ஒரு லிட்டர் ஒயின் குடித்திருந்ததால் நெற்றிப்பொட்டுகளில் லேசான எரிச்சல் தொடங்கியிருந்தது. என்னுடைய சிகரெட்டுகள் தீர்ந்துபோய்விட்டதால் நான் ரேமோனின் சிகரெட்டுகளை எடுத்துப் புகைத்துக்கொண்டிருந்தேன். வெளியே ஓய்ந்துகொண்டிருந்த சுற்றுப்புற இரைச்சல்களைத் தாங்கியவாறு சென்றுகொண்டிருந்தன சில கடைசி டிராம் வண்டிகள். ரேமோன் மறுபடியும் பேசத் தொடங்கினான். 'அவளுடனான புணர்ச்சிக்காக இன்னமும் ஏங்கிக்கொண்டிருக்கும்' அவனது பலவீனம் அவனைத் துன்புறுத்தியது. ஆனாலும் அவளைத் தண்டிக்க விரும்பினான். முதலில் அவன் நினைத்தான், அவளை ஒரு ஓட்டலுக்குக் கூட்டிச்செல்வது. பிறகு 'அதிகாரிகளுக்கு' தெரியப்படுத்துவது; அவளை ஒரு விபச்சாரி என்று அறிவிக்க ஏற்பாடுசெய்வது. பிறகு வேறு ஒரு எண்ணமும் தோன்றியது. பெண்களை வைத்து வியாபாரம் நடத்தும் கூட்டத்திலிருந்து சில தோழர்களைச் சந்தித்து இதுபற்றி அபிப்பிராயம் கேட்டான். அவர்களால் ஏதும் சொல்ல முடியவில்லை. வைத்துக் காப்பாற்றுபவனையே ஏமாற்றும் பெண்ணை என்ன செய்ய வேண்டும் என்பதுகூடத் தெரியாமல் அவர்கள் அந்தத் தொழிலில் இருந்து என்ன பிரயோஜனம்? அதை அவன் அவர்களிடம் கூறியபோது அவர்கள் அவளை விபச்சாரி என்று சொல்லிச் சந்திக்கு இழுத்துவிடலாமே என்று யோசனை கூறி

னர். ஆனால் அவன் செய்ய விரும்பியது அது அல்ல. இது மிகவும் நன்றாக யோசித்துச் செயல்பட வேண்டிய காரியம். அதற்குமுன் அவன் என்னிடம் சில விஷயங்களைக் கேட்க விரும்பினான். அப்படிக் கேட்பதற்குமுன் அவன் இதுவரை என்னிடம் கூறியதைப் பற்றி நான் என்ன நினைக்கிறேன் என்பதைத் தெரிந்துகொள்ள விரும்பினான். இதுபற்றி எதுவும் தோன்றாவிட்டாலும் பொதுவாக எனக்கு இது சுவாரஸ்யமாகப் படுகிறது என்று நான் சொன்னேன். அவள் அவனுக்குத் துரோகம்செய்துவிட்டதாக நான் நினைக்கிறேனா என்று அவன் கேட்டான். அப்படித்தான் எனக்குத் தோன்றுவதாகக் கூறினேன். அப்படியானால் அவளைத் தண்டிப்பது சரிதானா என்றும், அவன் நிலைமையில் நான் இருந்தால் என்ன செய்திருப்பேன் என்றும் அபிப்பிராயம் கேட்டான். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் இப்படித்தான் செய்ய வேண்டுமென்று எவராலும் சொல்ல முடியாதென்றும், ஆனாலும் அவளைத் தண்டிக்க விழையும் அவனது மனநிலை எனக்கு நன்றாகப் புரிகிறதென்றும் சொன்னேன். நான் இன்னும் சிறிது ஒயின் குடித்தேன். அவன் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தவாறு மற்றுமொரு யோசனையை வெளியிட்டான். 'அவளை நன்றாக வசைபாடி, அதே சமயம் தன் தவறுகளை அவள் உணர்ந்து வருந்தும் வகையில்' அவளுக்கு ஒரு கடிதம் எழுத விரும்பினான். பிறகு அவள் திரும்பி வந்தவுடன் அவளுடன் கூடி, 'உடலுறவின் உச்சக்கட்டத்தில்' அவள் முகத்தில் காறி உமிழ்ந்து அவளை வெளியே துரத்துவான். இதுவும் ஒருவகையில் அவளுக்கு ஒரு தண்டனையாக அமையும் என்று எனக்குத் தோன்றியது. ஆனால் தன்னால் அம்மாதிரி ஒரு கடிதம் எழுத முடியாதென்று கருதிய ரேமோன், என்னால் அதை எழுத முடியும் என்று கருதினான். நான் ஏதும் பேசாதிருக்கவே, அப்போதே அக்கடிதம் எழுவது எனக்குச் சலிப்பாக இருக்குமா என்று அவன் கேட்க, நான் இல்லை என்றேன்.

கொஞ்சம் ஒயின் அருந்திவிட்டு எழுந்தான். அங்கிருந்த தட்டுகள், நாங்கள் மீதம் வைத்து ஆறிப்போயிருந்த பலகாரங்கள் ஆகியவற்றை ஒரு பக்கமாக ஒதுக்கி வைத்தான். நீண்ட கால உபயோகத்தினால் பளபளத்துப்போன கான்வாஸ் மேஜை விரிப்பை

மிகுந்த கவனத்துடன் துடைத்தான். அவனுடைய மேஜை டிராயரைத் திறந்து கட்டம் போட்ட ஒரு காகிதம், மஞ்சள் நிறக் கவர், சிவப்பு நிற மரத்தினாலான ஒரு சிறிய பேனா ஸ்டாண்ட, ஊதா நிற மை இருந்த ஒரு சதுர மைப்புட்டி ஆகியவற்றை எடுத்து வெளியே வைத்தான். அவன் பெயரை அவன் சொன்னதிலிருந்து அவள் மூர் இனத்தைச் சேர்ந்தவள் என்று புரிந்துகொண்டேன். நான் அக்கடிதத்தை எழுதி முடித்தேன். அதை எழுதுவதற்குத் தனிப்பட்ட சிரமம் ஏதும் எடுத்துக்கொள்ளவில்லை. இருந்தாலும் அவனைத் திருப்திப்படுத்த விரும்பினேன். ஏனெனில், அவனைத் திருப்திப்படுத்த கூடாது என்று நினைக்க எவ்விதக் காரணமும் இருக்கவில்லை. பிறகு அக்கடிதத்தை உரக்கப் படித்தேன். சிகரெட் புகைத்தவாறும் அவ்வப்போது தலையசைத்தவாறும் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு, மறுபடியும் அதைப் படிக்கச் சொன்னான். அவனுக்கு ரொம்பவும் திருப்தி. "அதுதான் நினைத்தேன். உனக்கு வாழ்க்கையைப் பற்றி நன்றாகத் தெரிந்திருக்கிறது," என்றான். அவன் 'நீ, வா, போ' என்று ஒருமையில் பேசத் தொடங்கிவிட்டான் என்பது அப்போது எனக்கு உறைக்கவில்லை. "இப்பொழுதிலிருந்து நீ என் உண்மையான நண்பன்," என்று அவன் சொன்னபோதுதான் எனக்கு அது உறைத்தது. அவன் திரும்பவும் அதைச் சொல்லவே, நானும் "சரிதான்," என்றேன். என்னைப் பொறுத்தவரை அவனுக்கு நண்பனாக இருப்பதும், இல்லாதிருப்பதும் எல்லமே ஒன்றுதான். ஆனாலும் அவனுக்கென்னவோ அதில் பரம சந்தோஷம். அந்தக் கடிதத்தின் உறையை மூடி ஒட்டினான். சிறிது ஒயின் அருந்தி முடித்தோம். பிறகு ஒன்றும் பேசாமல் புகைபிடித்தவாறே அமர்ந்திருந்தோம். வெளியே நிசப்தமாக இருந்தது. ஒரே ஒரு கார் மெதுவாகச் செல்லும் சத்தம் மட்டும் கேட்டது. "நேரமாகிவிட்டது," என்றேன் நான். ரேமோனும் அவ்வாறே நினைத்தான். நேரம் மிக விரைவாகக் கழிந்துவிட்டது என்று அவன் குறிப்பிட்டான். ஒருவிதத்தில் அது சரிதான் என்று எனக்குப் பட்டது. எனக்குத் தூக்கம் வந்தபோதிலும் இருந்த இடத்தை விட்டு எழுந்திருப்பதே சிரமமாக இருந்தது. நான் சோர்வடைந்திருப்பது போலக் காணப்பட்டிருக்க வேண்டும். ஏனென்றால் ரேமோன் என்னிடம் மனம் சோர்ந்துபோய்விடக் கூடாது என்று கூறினான்.

முதலில் அவன் ஏன் அப்படிச் சொன்னான் என்பது எனக்கு விளங்க வில்லை. பிறகு அவனாகவே என் அம்மா இறந்த சேதி தனக்குத் தெரியுமென்றும் அந்நிகழ்ச்சி இன்றில்லையென்றாலும் ஒருநாள் நடந்தே தீருமென்றும் கூறினான். என் கருத்தும் அதுதான்.

நான் புறப்படும்போது ரேமோன் உற்சாகமாக என் கையைக் குலுக்கியவாறு ஆண்கள் எப்போதும் ஒருவரையொருவர் நன்றாகப் புரிந்துகொள்கிறார்கள் என்றான். அவனது அறையை விட்டுப் புறப்பட்டுக் கதவைச் சாத்திய பிறகு, இருட்டில் அந்தப் படிக்கட்டில் சற்று நேரம் அப்படியே நின்றேன். அக்கட்டடமே அமைதியாக இருந்தது. சுருண்டிறங்கிய படிக்கட்டுகளின் ஆழத்திலிருந்து ஒரு இனம் தெரியாத, வெதுவெதுப்பான காற்று மேலெழும்பி வந்து கொண்டிருந்தது. என் காதோரங்களில் துடித்துக்கொண்டிருந்த ரத்த நாளங்களின் துடிப்பொலி தவிர வேறெதுவும் எனக்குக் கேட்க வில்லை. அசையாமல் நின்றுகொண்டிருந்தேன். அந்தக் கிழவர் சலா மானோவின் அறையில் மட்டும் நாய் முனகிக்கொண்டேயிருந்தது.

# 4

அந்த வாரம் முழுவதும் எனக்கு அலுவலகத்தில் நிறைய வேலை இருந்தது. ஒரே ஒருமுறை ரேமோன் என்னைப் பார்க்க வந்து, அக்கடிதத்தை அனுப்பிவிட்டதாகக் கூறினான். இரண்டு முறை இம்மானுவேலுடன் சினிமாவுக்குப் போனேன். அவனுக்கு எப் போதும் திரையில் என்ன நடக்கிறது என்று புரியாது. அவ்வப்போது அவனுக்கு விளக்கங்கள் தர வேண்டும். நேற்று சனிக்கிழமை. ஏற்கனவே திட்டமிட்டிருந்தபடி மாரி என்னைப் பார்க்க வந்தாள். சிவப்புவெள்ளைக் கோடு போட்ட அழகான ஆடை, தோலினால் ஆன காலணிகள் இவற்றுடன் இருந்தது என் ஆசையை அதிகப்படுத் தியது. ஆடையினூடே மார்பகங்களின் செழுமை தெரிய, வெயிலி னால் பழுப்பேறிய அவள் மலர்முகம் பொலிவுற்றிருந்தது. அல்ஜேயி லிருந்து சில கிலோமீட்டர் தொலைவில் இருந்த கடற்கரைக்கு பஸ் ஸில் சென்றோம். மண்டிக்கிடக்கும் புதரைத் தாண்டி இரு பக்கமும் பாறைகள் சூழ்ந்த மணல்வெளியினாலானது அந்தச் சிறிய கடற் கரை. மாலை நான்கு மணி; அவ்வளவாக வெயில் இல்லை. ஆனா லும் நீண்ட சோம்பலான சிறிய அலைகளுடன் கூடிய கடல்நீர் வெதுவெதுப்பாக இருந்தது. மாரி எனக்கு ஒரு சிறிய விளையாட்டு சொல்லிக்கொடுத்தாள். பொங்கிவரும் அலையை நீந்திக்கொண்டே வாயால் உறிஞ்ச வேண்டும். அந்த நுரையை வாயில் அடக்கிக் கொள்ள வேண்டும். பிறகு நீரில் மல்லாந்து படுத்தவாறு ஆகாயத்தை நோக்கி நுரையைப் பீச்சியடிக்க வேண்டும். அப்போது அது நுரையி னாலான வலைத் துணி போன்று காற்றில் கலக்கும்; அல்லது வெது வெதுப்பான பூமாரிபோல் முகத்தில் பொழியும். ஆனால் இந்த விளையாட்டில் வெகு விரைவிலேயே, உப்புநீர் என் வாயில் எரிச்ச லைத் தந்தது. அப்போது மாரி வந்து நீருக்கடியில் என் உடலோடு

ஒட்டிக்கொண்டாள். வாயை என் வாயுடன் சேர்த்துக்கொண்டாள். அவள் நாக்கு என் உதடுகளுக்குப் புத்துணர்ச்சி அளித்தது. அப்படியே அலைகளினூடே சற்று நேரம் கட்டிப் புரண்டோம்.

நாங்கள் கரையேறி உடை அணிந்துகொண்ட பிறகு மாரி தன் பளபளக்கும் கண்களால் என்னைப் பார்த்தாள். அவளை முத்தமிட்டேன். அதன் பிறகு இருவருமே ஒன்றும் பேசவில்லை. அவளை என்னுடன் அணைத்துக்கொண்டேன். அதன் பிறகு பஸ்ஸைப் பிடிக்கவும், என் வீட்டிற்குப் போகவும் என் படுக்கையில் விழவும் இருவரும் பரபரத்துக்கொண்டிருந்தோம். அறையில் ஜன்னல்களைத் திறந்தே வைத்திருந்தேன். எங்களுடைய பழுப்புநிற உடல்களின் மேல் கோடை இரவின் குளுமை சுகமாகத் தவழ்ந்துகொண்டிருந்தது.

இன்று காலை, மாரி என்னுடன் தங்கியிருந்தாள். இருவரும் ஒன்றாகச் சாப்பிடலாம் என்று அவளிடம் சொன்னேன். இறைச்சி வாங்கி வருவதற்காகக் கீழே இறங்கிச் சென்றேன். மேலே ஏறிவரும் போது ரேமோனின் அறையில் ஒரு பெண்ணின் குரல் கேட்டது. சில வினாடிகள் கழுத்து கிழவர் சலாமானோ தன் நாயைத் திட்ட ஆரம்பித்தார். அங்கிருந்த மரப்படிகளில் பூட்ஸ் சத்தமும், பிறாண்டும் சத்தமும் கேட்டன. பின்னர் "தேவடியாள் மகனே! மிருகமே!" என்ற குரல். கிழவரும் நாயும் வெளியே புறப்பட்டாகிவிட்டது. அந்தக் கிழவரைப் பற்றி மாரியிடம் சொன்னேன். அவள் சிரித்தாள். என்னுடைய இரவு உடைகளை அணிந்திருந்த அவள், சட்டையின் கைகளைச் சுருட்டிவிட்டிருந்தாள். அவள் சிரித்தபோது அவள் மீதிருந்த ஆசை இன்னும் அதிகரித்தது. சிறிது நேரம் கழித்து நான் அவளைக் காதலிக்கிறேனா என்று கேட்டாள். இது போன்ற கேள்வி அர்த்தமற்றதென்றும், நான் அவளைக் காதலிப்பதாக எனக்குத் தோன்றவில்லையென்றும் பதிலளித்தேன். அவள் சற்றே வருத்தமுற்றவள் போல் காணப்பட்டாள். ஆனாலும், சமைத்துக்கொண்டிருக்கும் போது, ஒன்றுமில்லாத ஒரு விஷயத்துக்கு அவள் மீண்டும் வசீகரமாகச் சிரித்தாள். அவளை முத்தமிட்டேன். அப்போதுதான் ரேமோனின் அறையிலிருந்து சண்டை நடக்கும் கூச்சல் கேட்டது.

முதலில் ஒரு பெண்ணின் கிறீச்சிடும் குரல் கேட்டது. பிறகு ரேமோன் கத்தினான். "எனக்குத் துரோகம் செய்கிறாய்... எனக்கு நீ துரோகம் செய்கிறாய். எனக்குத் துரோகம் செய்தால் என்ன ஆகும் என்று இன்றைக்குக் காட்டப்போகிறேன்." பிறகு, அமுங்கிய சில சப்தங்களைத் தொடர்ந்து அப்பெண்ணின் கூக்குரல் கேட்டது. பலமான அக்கூக்குரலின் விளைவாகப் படிக்கட்டுகளில் கூட்டம் கூடி விட்டது. மாரியும் நானும்கூட அறையை விட்டு வெளியே வந்தோம். அப்பெண் இன்னும் சத்தம் போட்டு அழுதுகொண்டிருந் தாள்; ரேமோன் அவளை அடித்துக்கொண்டிருந்தான். 'இது என்ன கொடுமை' என்று மாரி சொல்ல, நான் ஒன்றும் பதில் சொல்லாமல் இருந்தேன். போய் போலீஸ்காரனை அழைத்து வருமாறு என்னிடம் சொன்னாள். போலீஸைக் கண்டாலே எனக்குப் பிடிக்காது என் றேன். ஆனாலும் இரண்டாவது மாடியில் குடியிருந்த குழாய் பழுது பார்ப்பவன் ஒருவனுடன் ஒரு போலீஸ்காரன் ஏற்கனவே வந்து கொண்டிருந்தான். அவன் கதவைத் தட்டியவுடன் சத்தம் அடங்கி விட்டது. அவன் மறுபடியும் பலமாகக் கதவைத் தட்டினான். சற்று நேரத்தில், அந்தப் பெண் அழுதுகொண்டிருக்க, ரேமோன் கதவைத் திறந்தான். போலியான புன்னகையுடன் சிகரெட் புகைத்தவாறு நின் றிருந்தான். அந்தப் பெண் கதவருகே விரைந்து வந்து ரேமோன் தன்னை அடித்ததாகப் போலீஸ்காரனிடம் முறையிட்டாள். "உன் பெயரென்ன?" என்று கேட்டான் போலீஸ்காரன். ரேமோன் பதி லளித்தான். "என்னிடம் பேசும்போது வாயிலிருந்து சிகரெட்டை எடுத்துவிட்டுப் பதில் சொல்," என்றான் போலீஸ்காரன். ரேமோன் சற்றுத் தயங்கி, என்னைப் பார்த்துவிட்டு, பிறகு சிகரெட்டை ஒரு இழுப்பு இழுத்தான். உடனே போலீஸ்காரன் கையை நன்றாக ஓங்கி அவன் கன்னத்தில் சரியாக விழும்படி பலமாக ஓர் அறை விட்டான். சிகரெட் சற்றுத் தள்ளிப்போய் விழுந்தது. ரேமோன் வெறுப்புடன் முகத்தைச் சுளித்தபோதும் அப்போதைக்கு ஒன்றும் சொல்ல வில்லை. பிறகு பணிவான குரலில் அந்தச் சிகரெட் துண்டை எடுத் துக்கொள்ளலாமா என்று கேட்டான். அவன் எடுத்துக்கொள்ளலாம் என்று அறிவித்த போலீஸ்காரன், "இனிமேலாவது போலீஸ்காரன் என்றால் பொம்மலாட்டப் பாவை இல்லையென்று தெரிந்து

கொள்,'' என்றும் சொன்னான். அந்தப் பெண்ணோ அழுது கொண்டே மீண்டும் முறையிட்டாள்: ''இவன் என்னை அடித்து விட்டான். இவன் ஒரு மாமாப் பயல்.'' ரேமோன் போலீஸ்கார னிடம், ''ஐயா, ஒரு ஆண்பிள்ளையைப் பார்த்து மாமாப் பயல் என்று சொல்லலாமா? இது சட்டத்திலிருக்கிறதா?'' என்றான். போலீஸ் காரன் ''வாயை மூடுடா,'' என்று அவனை அடக்க, ரேமோன் அந்தப் பெண்ணைப் பார்த்து, ''இரு, இரு, உன்னைப் பிறகு கவனித்துக் கொள்கிறேன்,'' என்றான். மறுபடியும் அவனை அடக்கிய போலீஸ் காரன் அந்தப் பெண் போய்விட வேண்டும் என்றும், இன்ஸ்பெக்டர் கூப்பிடும்வரை ரேமோன் அறையிலேயே இருக்க வேண்டுமென் றும் சொன்னான். மேலும், உடம்பெல்லாம் நடுங்கும் அளவுக்குக் குடிபோதையில் இருக்க வெட்கமாக இல்லையா என்று ரேமோ னைக் கேட்டான். ''நான் குடிபோதையில் இல்லை, ஐயா,'' என் றான் ரேமோன். ''நீங்கள் இப்படி வந்து நிற்கும்போது, உங்கள் எதிரே இருப்பது எனக்குக் கொஞ்சம் நடுக்கமாக இருக்கிறது. அது கூட இருக்காதா?'' என்றான். பிறகு அவன் கதவைச் சாத்திக் கொள்ளவும் கூட்டம் கலைந்தது. மாரியும் நானும் சமையல்செய்து முடித்தோம். அவளுக்குப் பசி இல்லாததால் கிட்டத்தட்ட எல்லா வற்றையும் நானே சாப்பிட்டேன். அவள் ஒரு மணிக்குப் புறப் பட்டுச் சென்றாள். பிறகு நான் சற்றுத் தூங்கினேன்.

மூன்று மணியளவில் யாரோ கதவைத் தட்டினார்கள். ரேமோன் அறைக்குள் வந்தான். நான் படுத்தவாறே இருந்தேன். அவன் என் கட்டிலின் விளிம்பில் உட்கார்ந்தான். சற்று நேரம்வரை ஒன்றும் பேசவில்லை. அவன் விவகாரம் எந்த அளவில் இருக்கிறதென்று கேட்டேன். அவன் தான் செய்ய விரும்பியதைச் செய்ததாகவும், அத னால் அவள் அவனை அறைந்தாள் என்றும், அதற்குப் பின்னரே அவளைத் தான் அடித்ததாகவும் சொன்னான். பின்னர் நடந்தவற்றை நானே பார்த்திருந்தேன். ஆகவே அவளுக்கு இப்போது சரியான தண் டனை கிடைத்துவிட்டது என்று எனக்குத் தோன்றுவதாகவும், அது குறித்து அவன் திருப்தி அடையலாம் என்றும் சொன்னேன். அவனுக்கும் அது சரியென்று தோன்றியது. போலீஸ்காரன் இவனை

என்ன செய்தாலும் அவள் தண்டிக்கப்பட்டுவிட்டாள் என்பதை மாற்ற முடியாது என்று அவன் கருதினான். மற்றும், போலீஸைப் பற்றி அவனுக்கு நன்றாகவே தெரியும்; அவர்களை எப்படிச் சமாளிக்க வேண்டுமோ அப்படிச் சமாளித்துவிடுவான். போலீஸ்காரனை அவன் திருப்பி அடிப்பானென்று நான் எதிர்பார்த்தேனா என்று என்னைக் கேட்டான். நான் குறிப்பாக எதையும் எதிர்பார்க்கவில்லையென்றும், மேலும் போலீஸைக் கண்டால் எனக்குப் பிடிக்காது என்றும் சொன்னேன். ரேமோன் திருப்தியடைந்ததுபோல் காணப்பட்டான். வெளியே போய்வரலாமா என்று கேட்டான். நான் எழுந்து தலைவாரிக்கொள்ள ஆரம்பித்தேன். அவனுக்குச் சாட்சி சொல்ல நான் வர வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டான். எனக்கு எல்லாம் ஒன்றுதான் என்றும் ஆனால் என்ன சொல்ல வேண்டுமென்பது எனக்குத் தெரியாதென்றும் சொன்னேன். அந்தப் பெண் அவனுக்குத் துரோகம் செய்தாளென்று சாட்சி சொன்னால் போதும் என்றான். அவனுக்கு சாட்சிக்காரனாக இருக்க நான் ஒப்புக்கொண்டேன்.

வெளியே சென்றோம். எனக்கு அவன் சிறிது பிராந்தி வாங்கிக் கொடுத்தான். பிறகு 'பில்லியர்ட்ஸ்' ஆட அழைத்தான். அவனுக்குச் சமமாக விளையாடியும் தோற்றுப்போனேன். பிறகு, இரவு விடுதி ஒன்றுக்குச் செல்லலாம் என்று அழைத்தான். எனக்கு அது பிடிக்காது என்று சொல்லி மறுத்துவிட்டேன். எனவே மெதுவாக நடந்து வீட்டுக்குத் திரும்பினோம். தான் அந்தப் பெண்ணைத் தண்டிப்பதில் வெற்றி பெற்றுவிட்டது குறித்து எவ்வளவு தூரம் மகிழ்ச்சி அடைந்திருந்தான் என்று ரேமோன் சொல்லிக்கொண்டு வந்தான். என்னுடன் நல்ல மாதிரியாக அவன் நடந்துகொண்டது என் மனதுக்குப் பிடித்திருந்தது.

எங்கள் கட்டடத்தின் வாசலில் கிழவர் சலாமானோ நின்றுகொண்டிருந்தது தூரத்திலிருந்தே தெரிந்தது. அவர் படபடப்படைந்ததுபோலக் காணப்பட்டார். அருகில் வந்தபோது அவருடன் அவர் நாய் இருக்கவில்லை என்பதைக் கவனித்தோம். அவர் சுற்றுமுற்றும் பார்த்து, இருட்டில் வெகு தூரம்வரை ஊடுருவிப் பார்த்து,

விடாமல் ஏதோ முணுமுணுத்துக்கொண்டே மறுபடியும் தெரு முழு வதும் தன் சிறிய சிவப்புக் கண்களால் துழாவித் தேடியவாறு இருந்தார். என்ன ஆயிற்று என்று ரேமோன் அவரிடம் கேட்டபோது அவர் உடனே பதில் சொல்லவில்லை. எப்போதும்போல், "தேவடி யான் மகனே! மிருகமே!" என்று முணுமுணுப்பது மட்டும் லேசா கக் கேட்டது. அவர் படபடப்பு இன்னும் அடங்கவில்லை. நான் அவ ரிடம் அவருடைய நாய் எங்கே என்று மட்டும் கேட்டேன். அது போய்விட்டது என்று சுருக்கமாகப் பதிலளித்தார். பிறகு திடீரென்று சற்று உரக்க, படபடவென்று பேச ஆரம்பித்தார். "வழக்கம்போல் ராணுவப் பயிற்சி மைதானத்திற்கு அவனை அழைத்துப்போனேன். கேளிக்கை விளையாட்டுகள் நடந்துகொண்டிருந்த அந்த இடத்தில் ஒரு பெரிய சந்தைக் கூட்டமே இருந்தது. 'கண்கட்டு வித்தை அர சன்' என்ற ஒரு நிகழ்ச்சியைப் பார்ப்பதற்காக நான் சற்று நேரம் நின்றேன். புறப்பட நினைத்தபோது அந்த நாயை அங்கே காண வில்லை. இன்னும் சிறியதாக ஒரு கழுத்துப்பட்டை வாங்கி அதற்குப் போட வேண்டுமென்று ரொம்ப நாளாகவே நினைத்துக்கொண் டிருந்தேன். ஆனால் அந்த மிருகம் இப்படித் திடீர் என்று ஓடிப் போய்விடும் என்று நான் நினைக்கவேயில்லை."

ரேமோன் அவரிடம், அந்த நாய் எங்கேயாவது வழிதவறிப் போயி ருக்குமென்றும் பின்னர் தானாகவே திரும்பி வந்துவிடுமென்றும் சொன்னான். தங்கள் எஜமானரைக் கண்டுபிடிப்பதற்காகப் பல கிலோ மீட்டருக்குமேல் அலைந்திருக்கும் நாய்கள் பற்றிய கதை யெல்லாம் சொன்னான். என்ன சொல்லியும் அந்தக் கிழவர் இன்னும் கவலையுடன் படபடத்தவாறே இருந்தார். "ஆனால் அவர்கள் என் நாயைக் கொண்டுபோய்விடுவார்களே. வேறு யாராவது அதைக் கண்டுபிடித்துக் கொண்டுவந்தால்தான் உண்டு. அதுவும் அவ்வளவு சுலபமில்லை. அதன் சொறிசிரங்கைப் பார்த்தாலே வெறுப்பாக இருக்கும். எனக்கு என்னவோ நம்பிக்கையில்லை. நிச்சயம் போலீஸ்காரர்கள் அதைக் கொண்டுபோய்விடுவார்கள்." தெருநாய் களைப் பிடித்து அடைத்துவைத்திருக்கும் இடத்துக்குச் சென்று ஒரு குறிப்பிட்ட தொகை கொடுத்தால் அதைக் கொண்டுவந்துவிடலாம்

என்று சொன்னேன். அந்தத் தொகை மிகவும் அதிகமாக இருக்குமா என்று அவர் கேட்டார். எனக்குத் தெரியாதென்றேன். உடனே கோபத்தில் கத்தினார். "ஆமாம், அந்த மிருகத்தைப் பணம் கொடுத்து வாங்க வேண்டுமா? எப்படியோ செத்து ஒழியட்டும்." விடாமல் அதை அவர் திட்டிக்கொண்டே இருந்தார். ரேமோன் சிரித்தவாறே கட்டடத்திற்குள் நுழைந்தான். நானும் அவனைப் பின்தொடர்ந் தேன்; படிக்கட்டு ஏறிய பிறகு பிரிந்து சென்றோம். சற்று நேரம் கழித் துப் படிக்கட்டில் கிழவரின் காலடியோசை கேட்டது. அவர் கதவைத் தட்டினார். கதவைத் திறந்தபோது, வாசற்படியிலேயே நின்று கொண்டு, "மன்னிக்கவும், மன்னிக்கவும்," என்று சொல்லியவாறு தயங்கினார். நான் அவரை உள்ளே வரும்படி அழைத்தேன். பரவா யில்லை என்றவாறு அங்கேயே இருந்தார். தழும்புகளும், பொட்டு களுமாக இருந்த அவருடைய கிழட்டுக் கைகள் நடுங்க, குனிந்து தன் காலணிகளைப் பார்த்தவாறு இருந்தார். என்னை நிமிர்ந்து பார்க்காமலேயே கேட்டார். "சொல்லுங்கள் மிஸ்டர் மெர்சோ, அவர்கள் அதைக் கொண்டுபோய்விட மாட்டார்களே? என்னிடம் கொடுத்து விடுவார்கள் இல்லையா? இல்லையென்றால் நான் என்ன செய்வேன்?" தெருநாய்களை அடைத்துவைத்திருக்கும் இடத்தில் அதன் சொந்தக்காரர்கள் வந்து கேட்பார்கள் என்று எதிர்பார்த்து மூன்று நாட்கள் வைத்திருந்து, பிறகு அவர்களுக்கு எது சரியென்று தோன்றுகிறதோ அதைச் செய்வார்கள் என்று நான் சொன்னேன். மௌனமாக என்னைப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, பிறகு என்னிடம் விடைபெற்றுச் சென்றார். சலாமானோ கதவைச் சாத்திய பிறகும், அவர் மேலும்கீழும் நடக்கும் சத்தம் கேட்டது. அவருடைய கட்டில் கிறீச் சிட்டது. நடைவழியைத் தாண்டி வந்த விசித்திரமான ஒலியிலிருந்து அவர் அழுதுகொண்டிருந்தார் என்று புரிந்துகொண் டேன். ஏனோ எனக்கு அம்மாவின் ஞாபகம் வந்தது. நாளைக்கோ, சீக்கிரம் எழுந்திருக்க வேண்டும். எனக்குப் பசிக்கவுமில்லை; சாப்பிடாமலேயே படுக்கச் சென்றேன்.

# 5

ரேமோன் எனக்கு அலுவலகத்துக்கு போன் பண்ணினான். அடுத்த ஞாயிற்றுக்கிழமை அவன் நண்பன் ஒருவனுடன் (அவனைப் பற்றி ஏற்கனவே என்னிடம் சொல்லியிருந்தான்) அல்ஜேயிக்குப் பக்கத்திலுள்ள அவனுடைய கடலோரக் குடிலில் போய்த் தங்கலாம் என்று என்னை அழைத்தான். எனக்கு அதில் ஆட்சேபணையில்லை என்றும், ஆனால் நான் ஏற்கனவே அடுத்த ஞாயிற்றுக்கிழமை முழுவதும் என் சிநேகிதி ஒருத்தியுடன் இருப்பதாக வாக்களித்துவிட்டேன் என்றும் சொன்னேன். உடனே, என்னுடன் அவளையும் அழைப்பதாக ரேமோன் சொன்னான். அவனை அழைத்திருக்கும் அவன் நண்பனுடைய மனைவிக்கு ஆண்கள் மத்தியில் தனியாக இருக்காமல் இப்படி ஒரு துணை இருப்பது மகிழ்ச்சியாக இருக்குமென்று மேலும் கூறினான்.

நான் உடனே தொலைபேசியை வைத்துவிட நினைத்தேன். ஏனென்றால் நகரத்திலிருந்து யாராவது எங்களுக்கு போன் செய்தால் முதலாளிக்குப் பிடிக்காதென்று எனக்குத் தெரியும். ஆனால் ரேமோன் என்னைச் சற்றுப் பொறுத்திருக்குமாறு சொன்னான். ஞாயிற்றுக்கிழமை அழைப்புக்காக மட்டும் இருந்தால் அதைச் சொல்ல அன்று மாலைவரை காத்திருப்பானென்றும், வேறு ஒரு விஷயமாக எச்சரிக்கத்தான் இப்போது போன் செய்வதாகவும் சொன்னான். நாள் முழுவதும் அராபியர்களின் ஒரு சிறிய கூட்டம் அவனைத் தொடர்ந்து வந்திருக்கிறது. அவர்கள் மத்தியில் அவன் பழைய 'வைப்பாக' இருந்த பெண்ணின் சகோதரனும் இருந்திருக்கிறான். "இன்று மாலை நீ வீட்டிற்குப் போகும்போது அவனை வீட்டிற்குப் பக்கத்தில் பார்த்தால் எனக்கு எச்சரிக்கை செய்," என்றான். நானும் சரியென்று ஒப்புக்கொண்டேன்.

சற்று நேரத்தில் என் முதலாளி என்னைக் கூப்பிட்டார். போன் பேசுவதைக் குறைத்துக்கொண்டு வேலையைச் சரிவரச் செய் என்று சொல்வார் என்று ஒரு கணம் தோன்றியதால் எனக்கு வெறுப்பாக இருந்தது. ஆனால் அவர் அதற்காக என்னைக் கூப்பிடவில்லை. என்னிடம் ஒரு புதிய திட்டத்தைப் பற்றிப் பேச அழைத்ததாகச் சொன்னார். அத்திட்டம் இன்னும் முழுமை பெறவில்லை. எனினும் அதுபற்றி என் கருத்தை அறிய விரும்பினார். பாரிஸில் உள்ள பெரிய நிறுவனங்களுடன் நேரடியாகத் தொடர்புகொண்டு வர்த்தகம் செய்ய விரும்பி அங்கேயே, அதற்கான ஒரு அலுவலகத்தை நிறுவப்போவதாகவும், அங்கு போயிருந்து வேலை செய்ய எனக்குச் சம்மதமா என்றும் கேட்டார். இதன் மூலம் பாரிஸில் வசிக்கச் சந்தர்ப்பம் கிடைப்பதுடன் வருடத்தில் சில மாதங்கள் பிரயாணம் செய்யவும் வாய்ப்பிருக்கும். ''நீங்கள் இன்னும் இளைஞர்தான். இம்மாதிரி வாழ்க்கை உங்களுக்கு மகிழ்ச்சியாக இருக்குமே,'' என்றார். அவர் சொல்வது சரிதான் என்றாலும் என்னைப் பொறுத்தவரை எல்லாம் எனக்கு ஒன்றுதான் என்றேன். அப்படியானால் வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்படுவதில் எனக்கு விருப்பமில்லையா என்றார். யாருமே அவர்களுடைய வாழ்க்கையை ஒருபோதும் மாற்றிக் கொள்வதில்லை என்றும், ஏனென்றால் எல்லா வாழ்க்கையும் மதிக்கத் தக்கவைதான் என்றும், மேலும், இப்போதிருக்கும் என் வாழ்க்கையில் எனக்கு எந்தவித மகிழ்ச்சிக் குறைவுமில்லை என்றும் நான் பதிலளித்தேன்; அவர் அதிருப்தி அடைந்தவராகக் காணப்பட்டார். நான் எப்போதும் விட்டேற்றியாகப் பதில் சொல்வதாகவும், எனக்கு ஆசைகள் எதுவும் இல்லை என்றும், வர்த்தகத் துறையில் அது பலனளிக்காது என்றும் கூறினார். என் வேலைக்குத் திரும்பினேன். எனக்கு அவரை அதிருப்திப்படுத்த வேண்டுமென்ற எண்ணம் கிடையாது. இருந்தாலும் என் வாழ்க்கையை மாற்றிக்கொள்ளப் போதிய காரணங்கள் எதுவும் எனக்குப் புலப்படவில்லை. உண்மையில், நன்கு யோசித்துப்பார்த்தால், நான் ஒன்றும் மகிழ்ச்சியற்ற நிலைமையில் இருக்கவில்லை. மாணவனாக இருந்த நாட்களில் எனக்கு இது போன்ற பெரும் ஆசைகள் இருந்ததென்னவோ உண்மைதான்.

ஆனால் படிப்பை நிறுத்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டபோது இது போன்ற ஆசைகளுக்கு உண்மையான முக்கியத்துவம் எதுவுமில்லை யென்று மிக விரைவிலேயே புரிந்துகொண்டேன்.

அன்று மாலை மாரி என்னைத் தேடி வந்தாள். தன்னைத் திரு மணம் செய்துகொள்ள எனக்கு விருப்பமா என்று கேட்டாள். எனக்கு எல்லாம் ஒன்றுதான் என்றும் அவள் விருப்பப்பட்டால் செய்துகொள்ளலாம் என்றும் கூறினேன். அப்படியென்றால் நான் அவளைக் காதலிக்கிறேனா இல்லையா என்று அறிய அவள் விரும்பி னாள். நான் ஏற்கெனவே முன்பொரு முறை சொல்லியிருந்தபடி, இது போன்ற கேள்வி அர்த்தமற்றது என்றும் ஆனால் நான் அவளைக் காதலித்ததில்லை என்பதில் சந்தேகமில்லை என்றும் சொன்னேன். "அப்படியானால் ஏன் என்னை மணந்துகொள்ள வேண்டும்," என்று கேட்டாள். நான் அவளிடம் அதற்கு அவ்வளவு முக்கியத்துவம் இல்லை என்றும் அவள் விரும்பினால் மணம் செய்துகொள்ளலாம் என்றும் விளக்கமாகச் சொன்னேன். மேலும், அவள்தானே அதற்கு ஆசைப்பட்டாள். நான் வெறுமனே சரியென்று மட்டும்தான் சொன்னேன். திருமணம் என்பது முக்கியமான விஷயமில்லையா என்று கேட்டாள். "இல்லை," என்றேன். சற்று நேரம் மௌனமாக என்னைப் பார்த்தவாறு இருந்தாள். அவள் மறுபடியும் பேச ஆரம் பித்தாள். தன்னிடம் இருப்பதுபோல அதே அளவுக்கு ஈடுபாடு கொண்டுள்ள வேறு எந்தப் பெண்ணாவது என்னைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று கேட்டிருந்தாலும் இதே பதிலைத் தான் சொல்லியிருப்பேனா என்று அறிய அவள் விரும்பினாள். நான் இயல்பாகவே "ஆமாம்," என்றேன். பிறகு, அவள் என்னைக் காதலிக் கிறாளா என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டு என்னையும் கேட்டாள். அதுபற்றி எனக்கு ஒன்றும் தெரியாது என்று நான் சொன்னேன். இன்னும் சற்று நேர மௌனத்துக்குப் பிறகு, நான் மிகவும் விசித்திரமானவன் என்று முணுமுணுத்தாள். ஒருக்கால் அதனாலேயே அவள் என்னைக் காதலிக்கலாம். என்றாவது ஒருநாள் அதே காரணங்களுக்காகவே நான் அவளுடைய வெறுப்புக்கு ஆளாகலாம் என்றெல்லாம் கூறினாள். மேலே சொல்வதற்கு வேறு

ஒன்றும் இல்லாததால் நான் பேசாமலிருந்தேன். அவள் சிரித்துக் கொண்டே என் கைகளைப் பிடித்துக்கொண்டு என்னை மணம் செய்துகொள்ள விரும்புவதாகச் சொன்னாள். அவளுக்கு எப்போது விருப்பமோ அப்போது செய்துகொள்ளலாம் என்று நான் சொன் னேன். அப்படியே என் முதலாளி சொல்லியிருந்த திட்டத்தைப் பற்றி அவளிடம் சொன்னேன். மாரி பாரிஸைப் பற்றித் தெரிந்துகொள்ள ஆசைப்பட்டாள். நான் ஏற்கெனவே அங்கு வசித்திருந்திருக்கிறேன் என்று அவளுக்குத் தெரிவித்தேன். அந்த அனுபவம் எப்படியிருந்தது என்று கேட்டாள். ''ஒரே அசுத்தம், புறாக்களும், இருட்டான முற்றங்களும்தான் அங்கு இருக்கின்றன. அங்குள்ள மக்களின் சருமம் வெளுத்துப்போயிருக்கும்,'' என்றேன்.

பிறகு நாங்கள் இருவரும் நகரத்தின் பெரிய தெருக்களின் வழியே நடந்து சென்றோம். இந்நகரத்தின் பெண்கள் அழகாக இருந் தார்கள். மாரி இதைக் கவனித்தாளா என்று கேட்டேன். அவள் அதைக் கவனித்ததாகவும் என்னை அவள் புரிந்துகொண்டதாகவும் சொன்னாள். சற்று நேரம்வரை நாங்கள் ஒன்றும் பேசவில்லை. அவள் என்னுடன் இன்னும் சிறிது நேரம் இருக்க வேண்டும் என்று நான் விரும்பியதால், செலஸ்தினுடைய உணவு விடுதியில் ஒன்றாகச் சாப்பிடலாம் என்று அழைத்தேன். அவளுக்கு என்னுடன் வர ஆசை யாக இருந்தபோதிலும் அப்போது வேறு வேலை இருப்பதால் வருவதற்கில்லை என்று சொன்னாள். என் வீட்டுக்கு அருகே வந்து விட்டிருந்தோம். நான் அவளிடமிருந்து விடைபெற்றேன். அவள் என்னைப் பார்த்து, ''எனக்கு என்ன வேலை இருக்கிறதென்று கேட்கவில்லையே,'' என்றாள். எனக்கு அதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் இருந்தபோதிலும் ஏனோ அப்படிக் கேட்க வேண்டும் என்று தோன்றவில்லை. நான் அவ்வாறு கேட்காதது அவளுக்கு ஒரு குறையாகப்பட்டது போலிருந்தது. நான் அப்படியே அசடு வழிய நின்றுகொண்டிருக்க, மறுபடியும் சிரித்தவாறே என் மீது முழுவதுமாய்ச் சாய்ந்து தன் இதழ்களை எனக்குத் தந்தாள்.

நான் செலஸ்தினுடைய உணவு விடுதியில் சாப்பிட்டேன். நான் சாப்பிட ஆரம்பித்தவுடன் சிறிய உருவம் கொண்ட, விசித்திரமாகத்

தோன்றிய பெண் ஒருத்தி வந்து, எனக்கெதிரில் இருந்த நாற்காலியில் உட்காரலாமா என்று கேட்டாள். தாராளமாக உட்காரலாம். ஆப்பிள் போன்ற உருண்டையான முகம். பிரகாசமான கண்கள். லேசான குலுக்கலுடன் கூடிய அங்கங்கள். தனது சிறிய கோட்டைக் கழற்றிவிட்டு அமர்ந்து, அன்று சாப்பிட விசேஷமாக என்ன இருக் கிறது என்று அட்டையை உன்னிப்பாகப் படிக்க ஆரம்பித்தாள். பிறகு செலஸ்த்தைக் கூப்பிட்டுத் தனக்கு வேண்டியவற்றையெல் லாம் கொண்டுவருமாறு மடமடவென்றும், ஆனால் சுருக்கமாகவும் சொன்னாள். தான் முதலில் கேட்டது வரும்வரையில் தனது கைப்பையைத் திறந்து ஒரு சிறிய காகிதத் துண்டு, ஒரு பென்சில் முதலியவற்றை எடுத்து, பில்லின் மொத்தத் தொகையை முன்னதா கவே கூட்டிப் போட்டு, பிறகு ஒரு சிறிய பணப்பையை எடுத்து, சர் வருக்குக் கொடுக்கும் தொகையையும் சேர்த்து, சரியாகச் சில்ல ரையை எண்ணி, தனக்கு முன் வைத்தாள். முதலில் கொண்டுவரச் சொன்ன உணவு வந்தது. மடமடவென்று சாப்பிட்டு முடித்தாள். அடுத்தது வரும்வரையிலும் மறுபடியும் பையிலிருந்து ஒரு நீல நிறப் பென்சிலையும், அவ்வாரத்திய பத்திரிகை ஒன்றையும் வெளியே எடுத்து அதில் இடம்பெற்றிருந்த அவ்வாரத்திய வானொலி நிகழ்ச்சி களை மிகுந்த கவனத்துடன் பார்த்து ஒன்றன் பின் ஒன்றாக, அநேக மாக எல்லா நிகழ்ச்சிகளுக்கும் எதிரே பென்சிலால் குறியிட்டாள். அப்பத்திரிகையில் பத்துப் பன்னிரண்டு பக்கங்கள் இருக்கவே, அவள் சாப்பிட்டு முடிக்கும்வரை ஒரே கவனமாக இந்த வேலையைச் செய்துகொண்டேயிருந்தாள். நான் சாப்பிட்டு முடித்த பின்னும், அவள் இன்னமும் அதே ஈடுபாட்டுடன் பென்சிலால் குறித்துக் கொண்டிருந்தாள். பிறகு எழுந்து, ஒரு தானியங்கியைப் போன்ற கச்சிதமான அசைவுகளுடன் கோட்டை எடுத்து மாட்டிக்கொண்டு வெளியே சென்றாள். எனக்கு வேறு ஒரு வேலையும் இல்லாததால் நானும் சற்று நேரம்வரை அவளைத் தொடர்ந்து சென்றேன். நடை பாதையின் ஓரமாகவே வியக்கத் தக்க வேகத்துடனும் திடமாகவும் மடமடவென்று நடந்தாள். பாதையை விட்டு விலகவில்லை. திரும் பிப் பார்க்கவுமில்லை. அவளைத் தொடர முடியாமல் என் பார்வை யிலிருந்து அவள் மறைய, நான் என் வழிக்கே திரும்பினேன். அவள்

விசித்திரமானவள் என்று நினைத்தேன். ஆனால் வெகு சீக்கிரமே அவளை மறந்துவிட்டேன்.

என் அறையின் கதவருகில் கிழவர் சலாமானோ இருப்பதைப் பார்த்தேன். அவரை உள்ளே அழைத்துச்சென்றேன். அவர் நகராட்சி அலுவலகத்திற்குப் போய்ப் பார்த்துவிட்டு, நாய் அங்கு இல்லாததால் அது காணாமல் போயிருக்க வேண்டும் என்று சொன்னார். அங்கிருந்த சிப்பந்திகள் அந்த நாய் ஒருவேளை விபத்தில் சிக்கி இறந்திருக்கக்கூடும் என்று சொன்னார்கள். போலீஸ் அலுவலகத்தில் கேட்டால் அதுபற்றி ஏதாவது தெரியக்கூடுமா என்று சலாமானோ அவர்களிடமிருந்து அறிய விரும்பினார். தினமும் இது மாதிரி ஏதாவது நடந்துகொண்டுதான் இருக்குமென்றும் இதையெல்லாம் ஒன்று விடாமல் யாரும் கவனித்துக்கொண்டிருப்பதில்லை என்றும் பதில் சொன்னார்கள். பேசாமல் வேறு ஒரு நாயை எடுத்து வளர்க்கலாமே என்று நான் கிழவர் சலாமானோவுக்குச் சொன்னபோதிலும், அந்த ஒரு நாயுடன்தான் அவர் அவ்வளவு தூரம் பழகியிருந்தார் என்று அவர் சொன்னது எனக்கு நியாயமாகவே பட்டது.

நான் படுக்கையின் மேல் கால்களை மடக்கி உட்கார்ந்திருக்க, சலாமானோ மேஜைக்கு முன்னால் இருந்த நாற்காலியில் அமர்ந்திருந்தார். முழங்கால்களின் மேல் கைகளை ஊன்றியவாறு என்னை நோக்கி உட்கார்ந்திருந்தார். அதே பழைய, நைந்துபோன தொப்பி; பழுப்பேறிய மீசைக்குப் பின்னிருந்த வாய் வாக்கியங்களின் முடிவில் அசைபோட்டது. அது எனக்குச் சற்றுச் சலிப்பூட்டியது. ஆனாலும் எனக்கு வேறு ஒரு வேலையும் இருக்கவில்லை. தூக்கமும் வரவில்லை. ஏதாவது பேச வேண்டுமே என்று அவரது நாயைப் பற்றிக் கேள்விகள் கேட்டேன். அவர் மனைவி இறந்துபோன பிறகுதான் இந்த நாய் அவரிடம் வந்ததாகச் சொன்னார். அவருடைய திருமணமே காலந்தாழ்ந்து நடந்த ஒன்று. இளமையில் அவர் நாடக வாழ்க்கையை மேற்கொள்ள விரும்பினார். கட்டாய ராணுவச் சேவை செய்த நாட்களில் ராணுவ முகாமில் நடந்த நாடகங்களில் நடித்திருக்கிறார். ஆனாலும் இறுதியில் அவர் வாழ்க்கை ரயில்வேயில் பணிபுரிவதில்தான் கழிந்திருக்கிறது. அது குறித்து அவருக்கு

வருத்தம் ஏதும் இல்லை. சொல்லப்போனால் இப்போது சுமாரான பென்ஷன்கூட வருகிறது. மனைவியுடன் அவர் ஒன்றும் குறிப்பிடும் படி மகிழ்ச்சியாக இருக்கவில்லை. இருந்தாலும் அவர் அவளுடன் நடத்திய வாழ்க்கைக்கு நன்றாகப் பழக்கப்பட்டிருந்தார். அவள் இறந்த பிறகு அவர் மிகவும் தனியாக இருப்பதாக உணர்ந்தார். அப் போதுதான் அவருடன் வேலைசெய்த நண்பனிடமிருந்து இந்த நாய்க்குட்டியைக் கேட்டு வாங்கியிருந்தார். அப்போது அது மிகவும் சின்னக் குட்டியாக இருந்தது. முதலில் அதற்குப் புட்டியில் பால் கொடுக்க வேண்டியிருந்தது. ஆனாலும் ஒரு நாய் மனிதனைவிடக் குறைந்த காலமே வாழ்கிறது என்பதால் வெகு சீக்கிரமே இருவருமே ஒன்றாக மூப்படைந்துவிட்டனர். ''அந்த நாய்க்குக் கெட்ட குணம்,'' என்றார் சலாமானோ. ''அவ்வப்போது எங்கள் இருவருக்கும் சண்டை வரும். இருந்தாலும் ஒரு நல்ல நாயாக இருந்தது.'' அது ஒரு நல்ல ஜாதி நாய்தான் என்று நான் சொன்னபோது சலாமானோ திருப்தியடைந்ததுபோலக் காணப்பட்டார். ''ஆமாம்; அதற்கு நோய் வரும்முன் நீங்கள் பார்த்ததில்லை. அதனுடைய அழகே அதன் ரோமம்தான்,'' என்று சொன்னார். அதற்குச் சரும நோய் வந்ததி லிருந்து தினமும் காலையிலும் மாலையிலும் தவறாமல் அதற்குக் களிம்பு தடவிப் பாதுகாத்துவந்திருக்கிறார். ஆனால் அவர் கருத்துப் படி அதன் உண்மையான நோய், அது மூப்படைந்துவிட்டதுதான். மூப்பைக் குணப்படுத்த முடியாதே.

இப்படிப் பேசிக்கொண்டிருந்தபோது நான் கொட்டாவி விட் டேன். அந்தக் கிழவர் புறப்படுவதாக அறிவித்தார். அவர் இன்னும் இங்கு இருந்துவிட்டுப் போகலாம் என்றும் அவரது நாய்க்கு ஏற் பட்ட கதி எனக்கு மிகவும் சங்கடத்தைத் தந்தது என்றும் சொன் னேன். அவர் எனக்கு நன்றி தெரிவித்தார். என் அம்மாவுக்கு அவரு டைய நாயிடம் ரொம்பப் பிரியம் என்றும் சொன்னார். என் அம்மா வைப் பற்றிக் குறிப்பிடும்போது ''பாவம் உங்கள் தாயார்,'' என்று சொன்னார். அம்மா இறந்ததிலிருந்து நான் மிகவும் துக்கத்திலாழ்ந் திருந்திருக்க வேண்டுமென்பது அவர் அபிப்பிராயம். நான் பதில் ஏதும் சொல்லவில்லை. உடனே அவர் ஒருவித மனச்சங்கடத்துட

னும், படபடப்புடனும் சொன்னார்: என் தாயாரை முதியோர் இல்லத்தில் கொண்டுபோய்விட்டதற்காக அந்த வட்டாரத்தில் என்னைப் பற்றி ஒரு மாதிரியாகப் பேசிக்கொள்கிறார்கள் என்பது அவருக்குத் தெரியும்; இருந்தாலும் அவர் என்னைப் பற்றி நன்றாகவே புரிந்துகொண்டிருந்திருக்கிறார். நான் அம்மாவை உண்மையாகவே நேசித்தேன் என்பதும் அவருக்குத் தெரியும். நான் அவருக்குப் பதிலளிக்கையில்—ஏன்அப்படிச் சொன்னேன் என்று இதுவரை எனக்கே தெரியவில்லை—இதுபோன்றெல்லாம் அங்குள்ளவர்கள் என்னை எடைபோடுவார்கள் என்பது எனக்குத் தெரிந்திருக்கவில்லை என்றேன். ஆனாலும் அம்மாவை வைத்துப் பராமரிக்க என்னிடம் போதிய பண வசதி இல்லாததால் நான் செய்தது எனக்குச் சரியென்றே தோன்றியது. ''நீண்ட நாட்களாகவே என் அம்மாவுக்கு என்னிடத்தில் பேச எதுவும் இல்லை. இந்தத் தனிமை அவளுக்குச் சலிப்பூட்டியது,'' என்றேன். ''ஆமாம் முதியோர் இல்லத்தில் குறைந்தபட்சம் சில நண்பர்களாவது கிடைக்கலாம்,'' என்றார் அவர். பிறகு, தூக்கம் வருகிறது என்று சொல்லிப் புறப்படத் தயாரானார். இப்போது அவர் வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. இனி என்ன செய்வது என்று ஒன்றும் புரியாத நிலையில் இருந்தார். நான் அறிந்த நாள் முதலாக இன்றுதான் முதன்முறையாக என்னுடன் கைகுலுக்கக் கையை நீட்டினார், சற்றுத் தயக்கத்துடன். அந்தத் தோலில் முதுமையின் கீறல்களை என் கையில் உணர்ந்தேன். லேசாகச் சிரித்த அவர், புறப்படும்முன் சொன்னார், ''இன்றிரவு எந்த நாயும் குரைக்காதென்று நம்புகிறேன். எப்போதும் அது என்னுடைய நாய்தான் என்று நினைக்கத் தோன்றும்.''

# 6

அந்த ஞாயிற்றுக்கிழமை எழுந்திருக்கவே சோம்பலாக இருந்தது. மாரி வந்து, என்னைக் கூப்பிட்டு, பிடித்து உலுக்க வேண்டியிருந்தது. வெகு சீக்கிரமே கடலில் போய்க் குளிக்க வேண்டுமென்று நாங்கள் நினைத்திருந்ததால் எதுவும் சாப்பிடவில்லை. எனக்கு உடலே காலி யாக இருந்ததுபோல் உணர்ந்தேன்; லேசாகத் தலைவலி வேறு. சிக ரெட் கசப்பான சுவையைத் தந்தது. எனக்கு இன்னமும் 'இழவுக் களை' போகவில்லையென்று மாரி கிண்டல் செய்தாள். வெண்ணிற ஆடை. அவிழ்த்து விடப்பட்ட கூந்தல். அவள் அழகாக இருக்கிறாள் என்று நான் சொல்ல, அவள் மகிழ்ச்சியுடன் சிரித்தாள்.

கீழே இறங்கி வரும்போது ரேமோனின் அறைக் கதவைத் தட்டி னோம். தானும் வந்துகொண்டிருப்பதாக அவன் அறிவித்தான். எனக்கு ஏற்கனவே களைப்பாக இருந்ததாலும், அறையில் இருந்த போது வெனிஷியன் திரையைத் திறந்து வைக்காததாலும் தெருவில் இறங்கியவுடன் வெளியே பொசுக்கிக்கொண்டிருந்த பகல்நேர வெயில் முகத்தில் அறைவது போலிருந்தது. அன்றைய பொழுது நன்றாக இருக்கிறதென்று மீண்டும்மீண்டும் சொன்ன மாரி குதூகலத் துடன் குதித்துக்கொண்டிருந்தாள். நானும் காலையில் இருந்ததை விடத் தெம்பாக உணர்ந்தேன். பசியெடுக்கவும் ஆரம்பித்துவிட்டது. தன்னுடைய பளபளப்பான கான்வாஸ் பையையும், அதில் இருந்த எங்கள் இருவருடைய நீச்சல் உடை, துண்டு ஆகியவற்றையும் காண் பித்தவாறு இருந்த மாரியிடம் இதைச் சொன்னேன். இனிக் காத் திருப்பதைத் தவிர வேறு வழியில்லை. ரேமோன் கதவைச் சாத்தி விட்டு இறங்கி வரும் ஓசை கேட்டது. நீல நிறக் கால்சட்டையும் வெள்ளை அரைக்கைச் சட்டையும் அணிந்திருந்தான். அவன் அணிந்திருந்த ஓலைத் தொப்பி மாரிக்குச் சிரிப்பை மூட்டியது. கரிய

ரோமத்தின்கீழ் வெளுப்பாகத் தெரிந்தன அவனுடைய முன்னங் கைகள். எனக்கு அவை அருவருப்பூட்டின. விசில் அடித்தபடியே கீழே இறங்கி வந்த அவன், குதூகலமாக இருப்பதுபோல் தோன்றி னான். என்னிடம், "என்னப்பா சௌக்கியமா?" என்றான். புதிதாக அறிமுகமானவர்களுக்கு உண்டான மரியாதையோடு மாரியை அழைத்தான்.

அதற்கு முன் தினம்தான் போலீஸ் அலுவலகத்திற்குச் சென்று, ரேமோனுக்கு அந்தப் பெண் 'துரோகம்' செய்தாள் என்று சாட்சியம் சொல்லியிருந்தேன். ஒரு எச்சரிக்கையுடன் அவனை விட்டுவிட்டார் கள். நான் சொன்னதை யாரும் சரிபார்க்கவும் இல்லை. வாசலில் நின்று சற்று நேரம் பேசிக்கொண்டிருந்த பிறகு, பேருந்தில் செல்வது என்று முடிவு செய்தோம். கடற்கரை வெகு தொலைவில் இல்லை என்றாலும் பேருந்தில் சென்றால் சீக்கிரம் சென்றுவிடலாம். முன் கூட்டியே அங்கு சென்றால் தன் நண்பன் மகிழ்ச்சியடைவான் என்று ரேமோன் நினைத்தான். புறப்படும் முன் திடீரென்று ரேமோன் எங்களை எதிரே பார்க்கும்படி சைகை செய்தான். அங்கிருந்த ஒரு சிகரெட்டுக் கடையின் சன்னலின் மேல் சாய்ந்தவாறு சில அராபி யர்கள் நின்றுகொண்டிருந்தனர். மௌனமாக, ஆனால் அவர் களுக்கே உரித்தான தோரணையில் எங்களை ஏதோ கற்கள் அல்லது பட்டுப்போன மரங்கள் ஆகியவற்றைப் பார்ப்பதுபோல் பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்களில் இடமிருந்து இரண்டாவதாக இருந் தவன்தான் 'அந்த ஆள்' என்று ரேமோன் மெதுவாகச் சொன்னான். அந்த ஆள் சற்றே கவலையுடன் இருப்பதுபோல் தோன்றியது. எப்ப டியும் அது ஒரு முடிந்துபோன கதை என்று ரேமோன் சொன்னான். தனக்கொன்றும் புரியாததால் இதெல்லாம் என்ன என்று மாரி கேட்டாள். அந்த அராபியர்கள் ரேமோன்மீது கோபமாக இருக் கிறார்கள் என்று சொன்னேன். மாரி சீக்கிரம் புறப்படலாமே என் றாள். ரேமோனும் நிமிர்ந்தவாறே சீக்கிரம் புறப்பட வேண்டியது தான் என்று சொல்லிச் சிரித்தான்.

சற்றுத் தொலைவிலிருந்த பேருந்து நிறுத்தத்தை நோக்கி நாங்கள் நடந்தோம். அந்த அராபியர்கள் எங்களைத் தொடர்ந்து வரவில்லை

என்று ரேமோன் தெரிவித்தான். நான் திரும்பிப் பார்த்தேன். அவர்கள் இன்னும் அதே இடத்தில் இருந்தனர். நாங்கள் முன்பு நின்றுகொண் டிருந்த இடத்தை அதே அலட்சியத்துடன் பார்த்துக்கொண்டிருந் தனர். பேருந்தைப் பிடித்தோம். ஒருவாறாக நிம்மதியடைந்தாற் போல் காணப்பட்ட ரேமோன், விடாமல் மாரியிடம் ஏதோ சொல்லிச் சிரிப்பு மூட்டிக்கொண்டேயிருந்தான். அவனுக்கு அவளைப் பிடித்திருந்ததென்று தோன்றியது. ஆனால் அவள் அவ னுக்குக் கூடுமான வரை பதிலளிக்காமல் இருந்தாள். அவ்வப்போது சிரித்தவாறு அவனைப் பார்த்தாள்.

அல்ஜேயின் புறநகர்ப் பகுதிக்கு வந்ததும் பேருந்திலிருந்து இறங் கினோம். பேருந்து நின்ற இடத்திலிருந்து கடற்கரை தொலைவில் இல்லை. ஆனாலும் சற்று மேடாக இருந்த ஒரு திறந்தவெளிப் பிரதே சத்தைக் கடந்து, கடற்கரையை நோக்கி இறங்கிச் செல்ல வேண்டி யிருந்தது. இந்தப் பிரதேசத்தின் பாறைகள் பழுப்பாக இருந்தன. அங்கு மண்டிக்கிடந்த காட்டுப் பூக்களின் வெண்மை, வெயிலில் ஏற்கனவே தகதகக்கும் ஆகாயத்தின் நீல நிறப் பின்னணியில் மின்னியது. மாரி தன் கைப்பையை அப்பூக்களின் மீது வீசி, அவற் றின் இதழ்கள் சிதறித் தரையில் படர்வதைக் காண்பதில் உற்சாகம் கொண்டாள். பச்சை அல்லது வெள்ளை நிற வேலித் தடுப்புகளால் சூழப்பட்ட சில சிறிய வீடுகளின் இடையே இருந்த பாதை வழியாக இப்போது நாங்கள் சென்றோம். டேமாரிஸ் ஈச்ச மரங்களின் பின்னே சில வீடுகள் மறைந்திருக்க, வேறு சில வீடுகள், பாறைகளினிடையே தனித்து இருந்தன. இறக்கத்தில் வர ஆரம்பிக்கும்போதே சலனமற் றிருந்த கடற்பரப்பு தென்பட்டது. தொலைவில் உறங்கிக்கொண்டி ருந்த பெரிய மணல்மேடு நீரின் ஒளிப்பரப்பில் தெரிந்தது. அந்த அமைதியினூடே கீழேயிருந்து எழும்பிய ஒரு லேசான இயந்திரச் சத்தம் நாங்கள் இருக்கும் இடம்வரை கேட்டது. வெகு தொலைவில் மீன்பிடிக்கும் ஒரு விசைப்படகு மின்னிக்கொண்டிருந்த நீர்ப் பரப் பின்மேல் கவலையற்றுச் சென்றுகொண்டிருந்தது. பாறைகளின் இடையே பூத்திருந்த ஐரிஸ் பூக்களைப் பறித்தவாறே வந்துகொண் டிருந்தாள் மாரி. ஏற்கனவே சிலர் கடலில் குளித்துக்கொண் டிருந்ததை, கடலை நோக்கிச் சென்ற இறக்கத்திலிருந்து பார்த்தோம்.

கடலுக்கு வெகு அருகாமையில் ரேமோனின் நண்பனுடைய மரக்குடில் இருந்தது. அவ்வீட்டின் பின்பகுதி, பாறைமேல் சாய்ந் திருக்க, முன்பகுதியைத் தாங்கியிருந்த மரத்தூண்கள் ஏற்கனவே பாதித் தண்ணீரில் அமிழ்ந்திருக்க, அவற்றின்மீது கடலலைகள் மோதியவண்ணம் இருந்தன. ரேமோன் ஒவ்வொருவரையும் அறிமுகப்படுத்தினான். அவன் நண்பனுடைய பெயர் மாசோன். பரந்த மார்பு. விரிந்த தோள்கள். ஆள் வாட்டசாட்டமாக இருந்தான். உருவத்தில் சிறிய, சற்றுப் பருமனாக இருந்த அவன் மனைவி நல்ல மாதிரி. பேசும்போது பாரிஸ்காரி என்று தெரிந்தது. அவன் உடனே எங்களை உபசரித்து, சங்கோஜப்படாமல் இருக்கச் சொன்னான். அன்று காலையில்தான் அவன் பிடித்திருந்த மீன்களை வறுத்து வைத் திருந்தான். அந்தக் குடில் மிக அழகாகவே இருப்பதாக நான் சொன் னேன். அவன் சனி ஞாயிறு மட்டுமின்றி மற்ற விடுமுறை நாட்களை யும் கழிப்பதற்கு அங்கு தான் வருவதாகக் கூறினான். ''நானும் என் மனைவியும் இதிலெல்லாம் ரொம்பவும் ஒத்துப்போவோம்,'' என்றான். அப்போது அவன் மனைவியும் மாரியும் ஒன்றாகச் சிரித் தனர். எனக்குத் தோன்றியது—ஒருவேளை முதல் முறையாக இருக்க லாம்—நான் திருமணம் செய்துகொள்வேன் என்று.

மாசோன் கடலில் குளிக்க விரும்பினான். அவன் மனைவியும் ரேமோனும் வர விரும்பவில்லை. நாங்கள் மூவரும் இறங்கிச் சென் றோம். மாரி உடனே நீரில் குதித்தாள். நானும் மாசோனும் சற்று நேரம் காத்திருந்தோம். அவன் மெதுவாகப் பேசினான். மேலும், ஏதாவது ஒன்றைச் சொல்லும்போது அதைச் சொல்லிவிட்டுப் பிறகு, ''இன்னும் சொல்லப்போனால்,'' என்று தொடங்கி அவன் ஏற் கனவே சொன்னதைத் தவிரப் புதிதாக எதுவும் சொல்லாமல் அப் படியே பேசிக்கொண்டிருப்பதைக் கவனித்தேன். மாரியைப் பற்றிக் குறிப்பிடும்போது ''கவர்ச்சியான பெண்; இன்னும் சொல்லப் போனால் வசீகரமானவள்,'' என்றான். ஆனாலும் அவனுடைய இந்தக் குணாதிசயத்தை நான் அவ்வளவாக லட்சியம் செய்ய வில்லை. ஏனென்றால் இதமாக இருந்த வெயிலை அனுபவிப்பதில் ஆழ்ந்திருந்தேன். காலுக்கடியில் மணல் சுட ஆரம்பித்துவிட்டது.

தண்ணீரில் குதிக்க வேண்டும் என்ற ஆசையை இன்னும் சற்று நேரம் கட்டுப்படுத்தி வைத்திருந்தேன். அது முடியாமல் போகவே, ''என்ன குதிப்போமா?'' என்று மாசோனிடம் கேட்டேன். நான் தண்ணீரில் பாய்ந்தேன். அவன் மெதுவாக இறங்கிக் கால்களுக்குப் பிடிமானம் இல்லாமல் நீரில் அமிழ்ந்தான். கைகளை ஒன்றன்மேல் ஒன்றாகப் போட்டு ஏதோ மாதிரி அவன் நீந்திக்கொண்டிருக்க, நான் அவனை விட்டுவிட்டு மாரியோடு சேர்ந்துகொள்ள விரைந்தேன். குளுமை யான நீரில் நீந்துவது மனதுக்குப் பிடித்திருந்தது. மாரியும் நானும் வெகு தூரம் நீந்திச் சென்றோம். நீந்தும் அசைவுகளில் மட்டுமின்றி, திருப்தி அடைந்தவாறு இருந்த மனநிலையிலும் எங்களிடையே ஒரு ஒற்றுமை இருந்ததை உணர்ந்தோம்.

அலைகளைத் தாண்டிச் சென்றபின் நீரில் மல்லாந்து படுத்தபடி மிதந்தேன். வெயிலில் படுத்துக்கொள்வதற்காக மாசோன் கரையை நோக்கித் திரும்பி நீந்திச் செல்வதை நாங்கள் பார்த்தோம். தொலைவிலிருந்து பார்க்கும்போது பெரிய உருவமாகத் தெரிந்தான். சேர்ந்து நீந்தலாமா என்று மாரி என்னிடம் கேட்டாள். நான் அவளுக்குப் பின்னால் அவள் இடுப்பைப் பிடித்தவாறிருக்க, அவள், கைகளைத் துடுப்பாக்கி முன்னேற, நான் பின்னால் கால்களை உதைத்தவாறு அவள் முன்னோக்கிச் செல்ல உதவினேன். அந்தக் காலை நேரத்தில் நீரில் நாங்கள் அடித்து எழுப்பிய ஓசை நான் களைத்துப்போகும்வரை காதில் ரீங்கரித்தது. ஆகவே நான் மாரியை என் பிடியிலிருந்து விடுவித்து ஒரே சீராக நீந்திச் சென்று நன்கு சுவாசித்தவாறே கரையை அடைந்தேன். கரையில் மாசோனுக்கு அருகில் குப்புறப் படுத்துக்கொண்டேன். மணலில் முகத்தை வைத்துப்படுத்தேன்... ''எவ்வளவு சுகமாக இருக்கிறது,'' என்று நான் சொன்னதை மாசோனும் ஒப்புக்கொண்டான். சற்று நேரம் கழித்து மாரி வந்தாள். அவள் நீந்திக் கரை சேர்வதைப் பார்ப்பதற்காகப் பின்புறம் திரும்பினேன். கூந்தலைப் பின்புறம் ஒதுக்கிவிட்டிருந்த அவள், உப்பு நீரில் ஊறி மழமழப்பாக ஜொலித்தாள். என்னருகே, என்னோடு ஒட்டியவாறு படுத்துக்கொண்டாள். அருகாமையில் இருந்த அவள் உடல், வெயில் இவற்றின் கதகதப்பு ஒன்றுசேர நான்

அப்படியே கண்ணயர்ந்தேன். வானத்தை நோக்கியிருந்த என் முகத்தில் சூரிய ஒளிக்கற்றைகள் பட்டு என் வாயின் மீது படர்ந் திருந்த ஈரப்படலத்தை விலக்கின.

மாரி என்னை உலுக்கி எழுப்பியபோது மாசோன் வீடு திரும்பி விட்டானென்றும், சாப்பிட நேரமாகிவிட்டதென்றும் சொன்னாள். எனக்குப் பசியாயிருந்ததால் உடனே எழுந்து செல்ல ஆயத்த மானேன். ஆனால் மாரி உடனே, காலையிலிருந்து நான் அவளை முத்தமிடவில்லை என்று சொன்னாள். அது உண்மைதான். எனக்கும் ஆவலாகத்தான் இருந்தது. ''தண்ணீருக்குள் போகலாம் வா,'' என்று அழைத்தாள். நாங்கள் ஓடிச்சென்று முதலில் தென்பட்ட சிறிய அலைகளின் மீது தாவி விழுந்தோம். சற்று தூரம் நீந்திச் சென்ற பிறகு அவள் என் உடம்புடன் ஒட்டிக்கொண்டாள். அவள் கால்கள் என் கால்களுடன் பின்னிக்கொண்டன. எனக்கு அவள் மீதிருந்த ஆசை அதிகரித்தது.

நாங்கள் திரும்பி வந்தபோது மாசோன் ஏற்கனவே எங்களைக் கூப்பிட்டுக்கொண்டிருந்தான். நானும் எனக்கு அகோரப் பசியென்று சொல்ல, மாசோன் தன் மனைவியிடம் அவனுக்கு என்னை மிகவும் பிடித்திருக்கிறது என்று கூறினான். ரொட்டி சுவையாக இருந்தது. எனக்கு வைக்கப்பட்டிருந்த மீனையும் சாப்பிட்டு முடித்தேன். இறைச்சி, வறுத்த உருளைக்கிழங்குத் துண்டுகள் முதலியனவும் இருந்தன. பேசாமல் மடமடவென்று சாப்பிட்டோம். மாசோன் அடிக்கடி ஒயின் அருந்தியவாறு எனக்கும் தொடர்ந்து ஊற்றிக் கொடுத்துக்கொண்டிருந்தான்.

இறுதியில் காப்பி சாப்பிடும்போது எனக்கு லேசாகத் தலை கனத் தது. சிகரெட் அதிகமாகப் பிடித்துக்கொண்டிருந்தேன். ரேமோன், மாசோன், நான் மூவரும் ஆகஸ்டு மாதம் முழுவதையும், எல்லாச் செலவுகளையும் பகிர்ந்துகொண்டு, இங்கேயே சேர்ந்து கழிக்கலா மென்று பேசிக்கொண்டோம். மாரி திடீரென்று ''மணி என்ன தெரியுமா? பதினொன்றரை,'' என்றாள். எல்லோருக்குமே சற்று வியப்பாக இருந்தது. மாசோன், சற்று சீக்கிரமாகத்தான் சாப்பிட்டு விட்டோம் என்றான். மேலும், சாப்பாட்டு நேரம் என்பது எப்போது

பசிக்கிறதோ அப்போதுதான்; ஆகவே அதில் ஒன்றும் வியப் பில்லையே என்று சொன்னான். அதற்கு ஏன் மாரி சிரித்தாள் என்று எனக்குத் தெரியவில்லை. அவள் கொஞ்சம் அதிகமாகக் குடித்திருக்க வேண்டும். கடற்கரையோரமாகக் கொஞ்சம் உலாவிவிட்டு வரலாமா என்று மாசோன் என்னிடம் கேட்டான். "என் மனைவி எப்போதும் சாப்பிட்டவுடன் ஒரு குட்டித் தூக்கம் போடுவாள். எனக்கு அது பிடிக்காது. கொஞ்சமாவது நடக்க வேண்டும். உடலுக்கு அது நல்லதென்று நான் எப்போதும் அவளிடம் சொல்வேன். இருந் தாலும், அவள் இஷ்டப்படி அவள் இருக்கட்டுமே," என்றான். மாரி யும் அங்கேயே இருந்து திருமதி மாசோனுக்குப் பாத்திரங்களைக் கழுவி வைப்பதில் உதவப்போவதாகச் சொன்னாள். உருவத்தில் சிறிய அந்த பாரிஸ்காரியும் இது போன்ற சமயங்களில் ஆண்களை வெளியே அனுப்பிவிட வேண்டுமென்று சொன்னாள். நாங்கள் மூவரும் கீழே இறங்கி வந்தோம்.

உச்சிவெயில் மணற்பரப்பில் செங்குத்தாக விழ, கடற்பரப்பின் கூச வைக்கும் எதிரொளி பொறுக்க முடியாததாக இருந்தது. கடற் கரையில் யாரும் இல்லை. கரையோரப் பகுதியில் கடலை நோக்கி யிருந்த குடியிருப்பு வரிசைகளிலிருந்து, சாப்பிட உபயோகிக்கும் தட்டு முதலியவற்றின் ஓசை வந்துகொண்டிருந்தது. தரையிலிருந்து கிளம்பி மேலெழுந்து வந்த பாறைகளின் அனற்காற்றில் சுவாசிப்பது கடினமாக இருந்தது. ஏற்கனவே, ரேமோனும் மாசோனும் பேசிக் கொண்டிருந்த விஷயங்கள், அவற்றில் சம்பந்தப்பட்டவர்கள் எது வும் எனக்குத் தெரிந்திருக்கவில்லை.

அவர்களுக்குள் வெகு நாள் பழக்கம் இருந்திருக்கிறதென்றும், ஒரு காலத்தில் இருவரும் சேர்ந்தே வசித்திருக்கிறார்கள் என்றும் புரிந்துகொண்டேன். நாங்கள் நீர்ப்பரப்பின் விளிம்புவரை சென்று, அதன் நெடுக நடக்க ஆரம்பித்தோம். அவ்வப்போது எங்கள் கனத்த கான்வாஸ் காலணிகளை, பொங்கிவரும் சிறிய அலை நனைத்துச் சென்றது. நான் எதைப் பற்றியும் யோசனை செய்யவில்லை. ஏனென் றால் வெறுந்தலையில் காய்ந்துகொண்டிருந்த வெயிலின் உக்கிரத் தில் அரைகுறைத் தூக்க நிலையிலிருந்தேன்.

அப்போது ரேமோன் மாசோனிடம் ஏதோ சொன்னான். அதை நான் சரியாகக் கேட்கவில்லை. ஆனாலும் அதே சமயத்தில், கடற் கரையில் எங்களுக்கு வெகு தொலைவில் நீல நிற அங்கியணிந்த இரு அராபியர்கள் எங்களை நோக்கி வந்துகொண்டிருப்பதைக் கவனித் தேன். நான் ரேமோனைப் பார்க்க, அவன் 'அதே ஆள்தான்' என்றான். தொடர்ந்து நடந்தவாறு இருந்தோம். அவர்கள் எப்படி இவ்வளவு தூரம் நம்மைத் தொடர்ந்து வந்திருக்க முடியும் என்று மாசோன் கேட்டான். கடற்கரைக்கு எடுத்துச் செல்லும் பையுடன் பேருந்தில் ஏறியதை அவர்கள் பார்த்திருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. ஆனால் நான் ஒன்றும் சொல்லவில்லை.

மெதுவாக முன்னேறிக்கொண்டிருந்த அந்த அராபியர்கள் இப் போது இன்னும் அருகில் வந்துவிட்டிருந்தனர். எங்கள் போக்கில் மாறுதல் ஏதுமின்றி நாங்கள் சென்றுகொண்டிருந்தோம். ஆனாலும் ரேமோன், ''ஏதாவது தகராறு வந்தால், மாசோன், அந்த இரண் டாவது ஆளை நீ கவனித்துக்கொள். என்னுடைய ஆளை நான் கவனித்துக்கொள்கிறேன். மெர்சோ, வேறு எவனாவது வந்தால் அவன் உனக்கு,'' என்று சொல்லிக்கொண்டு வந்தான். நான் ''சரி,'' என்றேன். மாசோன் பாக்கெட்டுகளில் கைகளை விட்டவாறு வந்து கொண்டிருந்தான். கொதித்துக்கொண்டிருந்த மணல் எனக்கு இப் போது சிவப்பாகத் தோன்றியது. நாங்களும் அராபியர்களும் ஒரே சீராக முன்னேறிக்கொண்டிருந்தோம். எங்களிடையே இருந்த இடைவெளியும் ஒரே சீராகக் குறைந்துகொண்டே வந்தது. ஒரு வருக்கொருவர் சற்றுத் தொலைவிலேயே இருக்கும்போது அந்த அராபியர்கள் நின்றுவிட்டனர். நானும் மாசோனும் எங்கள் வேகத் தைச் சற்றே குறைத்தோம். ரேமோன் நேரே அவனுடைய ஆளை நோக்கிச் சென்றான். ரேமோன் அவனிடம் என்ன சொன்னான் என்று சரியாகக் கேட்கவில்லை. ஆனால் அவன், இவனை முட்டு வதுபோல் குனிந்தான். ரேமோன் உடனே ஒரு அடி கொடுத்து விட்டு, மாசோனைக் கூப்பிட்டான். மாசோன் உடனே, அவனுக் கென்று குறித்திருந்த ஆளை நோக்கிச் சென்று, தன் முழு பலத்துடன் இரண்டு முறை அடித்தான். அந்த அராபியன் நெடுஞ்சாண்

கிடையாகத் தண்ணீரில் குப்புற விழ, அலையோடு ஓடிவந்த நீர்க்குமிழிகள் அவன் தலையைச் சுற்றி வட்டமிட்டன. மற்றொரு புறம் ரேமோன் அவனுடைய ஆளை அடிக்க, அவன் முகத்தில் ரத்தம் கசிய ஆரம்பித்தது. ரேமோன் என் பக்கம் திரும்பி, ''இன்னும் என்னிடம் எப்படி வாங்கப்போகிறான் பார்,'' என்றான். நான் ''ஜாக்கிரதை, அவன் கத்தி வைத்திருக்கிறான்,'' என்று கத்தினேன். ஆனால் அதற்குள் ரேமோனின் கையிலும் வாயிலும் அவனது கத்தி விளையாடிவிட்டிருந்தது.

மாசோன் ஒரு அடி எடுத்து வைத்து முன்னே சென்றான். ஆனால் அதற்குள் எழுந்துவிட்டிருந்த மற்ற அராபியன், கத்தி வைத்திருந்தவனின் பின்னால் சென்று நின்றுகொண்டான். நாங்கள் அசையத் துணிவின்றி இருந்தோம். கத்திக்குப் பயந்திருந்த எங்கள்மீது வைத்த பார்வையை எடுக்காமலேயே அவர்கள் மெதுவாகப் பின்வாங்கினர். போதுமான இடைவெளி இருக்கிறதென்று தெரிந்தவுடன் சடாரென்று திரும்பி வேகமாக ஓடிவிட்டனர். நாங்கள் அசையாமல் நின்றுகொண்டிருந்தோம். வெயில் காய்ந்துகொண்டிருந்தது. ரத்தம் சொட்டும் கையை இறுக்கிப் பிடித்தவாறிருந்தான் ரேமோன்.

மேடேறிச் சென்றால் ஞாயிற்றுக்கிழமையைக் கழிக்க அங்கு வரும் ஒரு மருத்துவரைப் பார்க்கலாமென்று மாசோன் உடனே சொன்னான். ரேமோனும் உடனே அங்கு போக விரும்பினான். ஆனால் அவன் பேச முயலும்போதெல்லாம் வாயிலிருந்து ரத்தம் கொப்பளித்தவாறிருந்தது. நாங்கள் அவனைத் தாங்கியவாறு முடிந்த அளவு சீக்கிரம் எங்கள் இருப்பிடத்துக்கு வந்தோம். வந்தபின், ரேமோன் அது ஒன்றும் பலமான காயமல்ல என்றும், மருத்துவரிடம் அவனாகவே போக முடியும் என்றும் சொன்னான். அவன் மாசோனுடன் கிளம்பினான். என்ன நடந்ததென்பதைப் பெண்களுக்கு விவரமாகச் சொல்வதற்காக நான் பின்தங்கிவிட்டேன். திருமதி மாசோன் அழுதாள்; மாரியின் முகம் வெளிறிவிட்டது. எனக்கோ அவர்களுக்கு விவரமாகச் சொல்ல அலுப்பாக இருந்தது. கடைசியில் நானும் ஒன்றும் பேசாமல் கடலைப் பார்த்தவாறு சிகரெட் பிடித்துக்கொண்டிருந்தேன்.

சுமார் ஒன்றரை மணிக்கு ரேமோனும் மாசோனும் திரும்பி வந்தனர். ரேமோன் கையில் ஒரு கட்டும் வாய் ஓரத்தில் ஒரு ஒட்டுப் பிளாஸ்திரியும் போட்டிருந்தான். பயப்படும்படியாக ஒன்றுமில்லை என்று மருத்துவர் சொல்லியிருந்தார். இருந்தாலும் அவன் சோக மாகக் காணப்பட்டான். மாசோன் அவனைச் சிரிக்க வைக்க முயன் றான். ஆனால் ரேமோன் ஒன்றும் பேசவில்லை. இறங்கிக் கடற் கரைப் பக்கம் போகப்போவதாக அவன் சொன்னபோது, எந்தப் பக்கம் போகப்போகிறான் என்று நான் அவனைக் கேட்டேன். மாசோனும் நானும் அவனுடன் வரப்போவதாகவும் தெரிவித் தோம். அப்போது அவன் கோபமடைந்து எங்களைப் பார்த்துத் திட்டினான். அவனுக்கு விருப்பமில்லையெனில் விட்டுவிட வேண் டும் என்று மாசோன் சொன்னான். இருந்தபோதிலும் நான் அவ னைப் பின்தொடர்ந்தேன்.

வெகு நேரம் கடற்கரையில் நடந்துசென்றோம். வெயில் அப் போது பொசுக்கிக்கொண்டிருந்தது; மணலில் பாதியும் கடலில் பாதி யுமாகக் காய்ந்துகொண்டிருந்தது. ரேமோன், தான் எங்கே போக வேண்டுமென்பது தெரிந்துதான் போகிறான் என்று எனக்குத் தோன் றியது. ஒருவேளை என் எண்ணம் தவறாகவும் இருந்திருக்கலாம். கடற்கரையின் மறுகோடியில், பாறைகளுக்கு நடுவிலிருந்து மண லில் இறங்கி ஓடி வந்துகொண்டிருந்த ஒரு சிறு ஓடையின் அருகில் வந்தோம். அங்கே அந்த இரு அராபியர்களைப் பார்த்தோம். எண் ணெய்ப் பசை ஏறிய நீல அங்கி அணிந்து அவர்கள் படுத்திருந்தனர். மிகவும் அமைதியாக, திருப்தியடைந்தவர்கள்போல் காணப்பட்ட னர். எங்கள் வருகை அங்கே எந்த விதமான மாறுதலையும் ஏற்படுத்த வில்லை. ரேமோனைத் தாக்கியவன் பேசாமல் அவனையே பார்த்த வாறு இருந்தான். மற்றவன் ஒரு சிறிய புல்லாங்குழலைத் தொடர்ந்து ஊதிக்கொண்டிருந்தான். ஓரக்கண்களால் எங்களைப் பார்த்தவாறு அவனுடைய வாத்தியத்தில் அவனால் வாசிக்க முடிந்த மூன்றே மூன்று ஸ்வரங்களையே திரும்பத்திரும்ப முடிவில்லாமல் வாசித்துக் கொண்டிருந்தான்.

சற்று நேரம்வரை அந்த வெயில் மற்றும் அமைதி இவற்றோடு கூடிய மூன்று ஸ்வரங்கள், அந்த ஓடையின் சிறு சலசலப்பு இவற்றைத் தவிர வேறு எதுவும் அங்கே இருக்கவில்லை. பிறகு ரேமோன் துப்பாக்கி வைத்திருந்த பாக்கெட்டின் பக்கம் தன் கையைக் கொண்டு சென்றான். ஆனால் அவர்கள் இருவரும் அசையாமல், ஒருவரை ஒருவர் பார்த்தவண்ணம் இருந்தனர். புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருந்த அராபியனின் கால் விரல்களுக்கிடையில் மிகுந்த இடைவெளி இருப்பதைக் கவனித்தேன். ஆனால் ரேமோன், தன் எதிரியின் மீதிருந்த பார்வையை விலக்காமலேயே என்னிடம் கேட்டான். ''அவனைச் சுட்டுவிடட்டுமா?'' நான் வேண்டாமென்று சொன்னாலும், தானாகவே கொதிப்படைந்து கோபத்தில் அவனை நிச்சயம் சுட்டுவிடுவான் என்று எனக்குத் தோன்றியது. ''அவன் உன்னிடம் பேசக்கூட இல்லை; அப்படியிருக்க அவனைச் சுடுவது பேடித்தனம்,'' என்று மட்டும் நான் சொன்னேன். அந்த வெப்பம், அமைதி இவற்றின் ஆழத்திலிருந்து நீரின் சலசலப்பும், புல்லாங்குழலின் ஒலியும் மட்டும் கேட்டுக்கொண்டிருந்தன. பிறகு, ''சரி, அவனை வம்புக்கு இழுக்கிறேன்; அவன் பதில் சொல்வான். அப்போது அவனைச் சுட்டுவிடுகிறேன்.'' ''அது சரி. ஆனால் அவன் கத்தியை எடுக்காதவரை நீ சுடுவது சரியல்ல,'' என்றேன். ரேமோன் மறுபடியும் சற்றுக் கோபமடைந்தான். அந்த இரண்டாவது அராபியன் இன்னும் புல்லாங்குழல் வாசித்துக்கொண்டிருந்தான். அவர்கள் இருவரும் ரேமோனின் ஒவ்வொரு அசைவையும் பார்த்தவாறே இருந்தனர். நான் சொன்னேன் ''இதோ பார், துப்பாக்கியை என்னிடம் கொடுத்துவிட்டு ஒண்டிக்கு ஒண்டியாக அவனிடம் சண்டை போடு. இரண்டாமவன் குறுக்கிட்டாலோ அல்லது கத்தியை உருவினாலோ நான் அவனைச் சுட்டுவிடுகிறேன்.''

ரேமோன் துப்பாக்கியை என்னிடம் கொடுத்தபோது அதன் மீது சூரிய வெளிச்சம் பட்டுப் பளபளத்தது. இருந்தபோதிலும் எங்கள் மீது எல்லாமே கவிந்துகொண்டதுபோல், ஆடாமல் அசையாமல் நாங்கள் நின்றுகொண்டிருந்தோம். கண்ணிமைக்காமல் ஒருவரையொருவர் பார்த்தவாறே இருந்தோம். கடல், மணல், சூரியன்

இவற்றிடையே அனைத்தும் ஸ்தம்பித்துவிட்டிருந்தன; புல்லாங் குழல்; ஓடும் நீர். இவற்றின் இரட்டித்த நிசப்தம். இது போன்ற தருணத்தில் சுடலாம்; சுடாமலும் இருக்கலாம் என்று எனக்குத் தோன்றியது. ஆனால் அந்த அராபியர்களோ திடீரென்று பின்புற மாக நகர்ந்து பாறைக்குப் பின்னால் நழுவிச் சென்றனர். பிறகு ரேமோனும் நானும் திரும்பி வந்தோம். அவன் இப்போது சற்று இயல்பாக இருந்தான். திரும்பிப் போவதற்கு எந்த பேருந்தைப் பிடிக்க வேண்டும் என்றெல்லாம் பேசிக்கொண்டிருந்தான்.

நான் அவனுடன் மரக்குடில்வரை சென்றேன். அவன் மரப் படிகளின்மீது ஏற, நான் முதற்படியிலேயே நின்றுவிட்டேன். வெயில் மண்டையைப் பிளந்துகொண்டிருந்தது. படியேறிச் செல் வதற்கும், அங்கிருந்த பெண்களுக்கு முன்னால் இன்முகமாக இருப் பதற்கும் எடுத்துக்கொள்ளும் சிரமத்தை நினைக்கும்போது மலைப் பாக இருந்தது. ஆனால் அந்த வெயிலில், வானத்திலிருந்து பொழிந்து கொண்டிருந்த, கண்களைக் கூச வைக்கும் அனல் மழையின் கீழ் ஸ்தம் பித்து இருப்பது பொறுக்க முடியாததாக இருந்தது. இங்கேயே இருப்பதோ கிளம்பிச் செல்வதோ, எல்லாம் ஒன்றுதான். சற்றுத் தயங்கிவிட்டு, திரும்பி, கடற்கரையை நோக்கி நடக்க ஆரம்பித் தேன்.

இன்னும் வெயிலின் அதே சிவப்புப் பிரகாசம், கடல், வேக வேகமாக மூச்சிரைத்து, சிறு அலைகளால் மணற்பரப்பில் மோதிக் கொண்டிருந்தது. பாறைகள் இருந்த இடம் நோக்கி மெதுவாக நடந் தேன். வெயிலின் கடுமையில் நெற்றிப்பொட்டு தெறிப்பதுபோல் இருந்தது. வெப்பம் என்மேல் அழுந்தி, நான் முன்னேறிச் செல்வ தைத் தடுத்தது. அந்தக் கடுமையான அனல்காற்று என் முகத்தின்மீது வீசும்போதெல்லாம் பற்களைக் கடித்துக்கொண்டேன். கால்சட் டைப் பைக்குள் இருந்த முஷ்டியை இறுக்கிக்கொண்டேன். வெயி லுடனும் அதனால் விளைந்த மயக்கத்துடனும் போராடி வெற்றி பெறுவதற்காக என் நரம்புகளை முறுக்கேற்றிக்கொண்டிருந்தேன். மணலில் இருந்த கிளிஞ்சல் ஓடுகள், உடைந்த கண்ணாடித் துகள்கள் இவற்றிலிருந்து பீறிட்ட ஒளிக்கத்திகள் என்மேல் பாயும்போ தெல்லாம் என் தாடைகள் இறுகின. வெகு நேரம் நடந்தேன்.

தூரத்தில் கரிய பாறைக் கூட்டம் தெரிந்தது. அதைச் சுற்றிக் கடற் பிரதேசத்தின் மெல்லிய தூசி பட்டுப் பிரதிபலித்த ஒரு ஒளி வளை யம் கண்களைக் கூச வைத்தது. பாறைக்குப் பின்னால் இருந்த புத் துணர்வூட்டும் நீரோடையை நினைத்துக்கொண்டேன். அதனு டைய நீரின் முணுமுணுப்பை மீண்டும் கேட்க ஆசையாக இருந்தது; வெயில், அலைச்சல், பெண்ணின் அழுகை இவற்றையெல்லாம் விட்டு ஓடிவிட ஆசையாக இருந்தது; முடிவில் நிழலையும் நிழல் தரும் சுகத்தையும் தேட ஆசையாக இருந்தது. ஆனால் அருகில் சென்றபோதோ ரேமோனுடன் சண்டையிட்ட அந்த ஆளும் அங்கே திரும்பி வந்திருப்பதைப் பார்த்தேன்.

அவன் தனியாக இருந்தான். பிடரிக்கடியில் கைகொடுத்தவாறு மல்லாந்து படுத்திருந்தான். நெற்றிப் பாகம் மட்டும் பாறையின் நிழ லில் இருக்க, உடல் முழுவதும் வெயிலில் இருந்தது. அவனது நீல அங்கி வெயிலில் வெந்துகொண்டிருந்தது. எனக்கு அவனை அங்கே பார்த்தது சற்று வியப்பாகவே இருந்தது. என்னைப் பொறுத்தவரை அது முடிந்துபோன கதை. அதைப் பற்றி எதுவும் நினைக்காமல்தான் அங்கே வந்திருந்தேன்.

என்னைப் பார்த்த உடனேயே அவன் சற்று நிமிர்ந்து தன் அங்கி யின் பைக்குள் கையை விட்டான். நானும் கோட்டுப் பையிலிருந்து ரேமோனின் கைத்துப்பாக்கியைப் பற்றிக்கொண்டேன். மீண்டும் அவன் மெதுவாகப் பின்னோக்கி நழுவ ஆரம்பித்தான். ஆனால் பையிலிருந்து கையை மட்டும் எடுக்கவில்லை. எங்களிருவரி டையே சுமார் பத்து மீட்டர் இடைவெளி இருந்தது. பாதி மூடி யிருந்த அவன் விழிகளினூடே அவ்வப்போது அவன் பார்வையை யூகித்தேன். ஆனால் அனல் வீசிக்கொண்டிருந்த அந்தச் சூழ்நிலை யில் அவன் உருவம் என் கண் முன்னே அடிக்கடி நிழலாடியது. அலை களின் ஓசை நண்பகலில் இருந்ததைவிட மிகவும் ஈனமாக, மிகவும் மந்தமாக இருந்தது. அதே வெயில், மணற்பரப்பின் அதே பிரகாசம் தான் இங்கும் நீடித்துக்கொண்டிருந்தது. பழுக்கக் காய்ச்சிய உலோகக் கடலில் இரண்டு மணி நேரத்துக்கும் மேலாக நங்கூரம் பாய்ச்சியது போல் அசைவற்றிருந்தது அந்தப் பகல்பொழுது. தொடுவானத்தில்

கடந்து சென்ற சிறிய நீராவிக் கப்பலொன்றின் கரிய நிழல் என் பார்வையில் குறுக்கிட்டதாக உணர்ந்தேன். ஏனென்றால் அராபி யனை விட்டு என் பார்வை அகலவேயில்லை.

பேசாமல் திரும்பிச் சென்றுவிட்டால் இந்த விவகாரம் இத்துடன் முடிந்துவிடும் என்று எனக்குத் தோன்றியது. ஆனால் வெயிலில் தகித் துக்கொண்டிருந்த கடற்பரப்பு முழுவதும் என் பின்னிருந்து உந்தியது. அந்த நீரூற்றை நோக்கி ஓரிரு அடியெடுத்து வைத்தேன். அராபியன் நகராமல் இருந்தான். ஆனால் எங்களிடையே கணிசமான இடை வெளி இருந்தது. அவன் முகம் நிழலில் இருந்த காரணத்தாலோ என்னவோ அவன் சிரித்துக்கொண்டிருப்பதுபோல் தோன்றியது. நான் அப்படியே நின்றேன். வெயிலின் சூடு என் கன்னங்களில் ஏறிக்கொண்டிருந்தது. வியர்வைத் துளிகள் புருவங்களின் மேல் சேர ஆரம்பித்தன. என் அம்மாவை அடக்கம் செய்த தினத்தில் இருந்தது போன்ற அதே வெயில், அப்போது இருந்தது போலவே முன் நெற்றியில் ஒரே வலி. தோலுக்கு அடியில் ரத்த நாளங்கள் ஒன்று சேர்ந்து வெடித்துவிடுவதுபோல் துடித்தன. என்னால் இனியும் பொறுக்க முடியாத இந்தத் தகிப்பின் காரணமாக ஓரடி முன்னே எடுத்து வைத்தேன். அப்படி ஓரடி எடுத்து வைப்பதன்மூலம் வெயி லிலிருந்து தப்ப முடியாது என்றும், அது ஒரு மடத்தனமான செயல் தான் என்றும் தெரிந்திருந்தாலும் ஓரடி முன்னே எடுத்து வைத்தேன். ஒரே ஒரு அடிதான். இம்முறை இடத்தை விட்டு நகராமல் அந்த அராபியன் கத்தியை உருவி வெயிலில் என்முன் நீட்டினான். அதன் எஃகுப் பகுதியிலிருந்து பிரதிபலித்த ஒளிக்கற்றை, பளபளக்கும் ஒரு கத்தியின் நீண்ட நாக்குப்போல் பாய்ந்து வந்து என் நெற்றியைத் தாக் கியது. இதே சமயம் புருவங்களின் மீது கோத்திருந்த வியர்வைத் துளிகள் இமைகளின் மேல் சட்டென இறங்கவும், அங்கே ஒரு வெதுவெதுப்பான கனமான திரை விழுந்தது. கண்ணீராலும் உப் பாலும் ஆன இத்திரை என் கண்களை மறைத்துவிட்டிருந்தது. தாம் பாளமாகப் பளபளக்கும் சூரியன் நெற்றியில் தாக்குவதைப் பெரிதும் உணர்ந்தேன். இன்னும் சற்றுத் தெளிவற்ற நிலையில் என் முன்னே பீறிட்டுக்கொண்டிருந்த ஒளிக்கீற்றையும் உணர்ந்தேன். தகித்துக்

கொண்டிருந்த ஒளிக்கத்தி என் இமை முடியைச் சுட்டுப் பொசுக்கி, வலித்துக்கொண்டிருந்த என் கண்களில் ஊடுருவிப் பாய்ந்தது. அப்போதுதான் எல்லாமே சுழல ஆரம்பித்தது. கடலிலிருந்து கன மான, வேகமான காற்று வீசியது. ஆகாயம் அப்படியே குறுக்காகக் கிழிபட்டு அனல்மழை பெய்யும்போல் தோன்றியது. என் உடல் முழுவது சற்றே விறைக்க, துப்பாக்கியின் மீது என் பிடி இறுகியது. துப்பாக்கியின் விசை விடுபட, அதன் வழுவழுப்பான அடிவயிறு உள்ளங்கையில் அழுந்தியது. கிஞ்சித்தும் இரக்கமற்ற காதடைக்கும் அந்த ஒலியில்தான் எல்லாமே ஆரம்பமாயிற்று. ஒரே குலுக்கலில் வியர்வையையும் வெயிலையும் உதறித்தள்ளினேன். அந்தப் பகல் பொழுதின் சமனை அழித்துவிட்டேன் என்பதை உணர்ந்தேன். நான் ஆனந்தமாக இருந்த இக்கடற்கரையின் அசாதாரணமான அமைதி அழிந்துவிட்டது. அப்போது மறுபடியும் நான்கு முறை சுட்டேன். அசைவற்றிருந்த உடலில் சுவடேதும் தோற்றாமல் பதிந்தன தோட்டாக்கள். அதுவே என் துயரத்தின் வாயிற்கதவை நான் நான்கு முறை அடுத்தடுத்துத் தட்டியதுபோல் இருந்தது.

# 1

நான் கைதானவுடனேயே பலமுறை விசாரணைக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். ஆனால், அவையெல்லாம் நான் யார், எங்கிருந்து வந்தவன் போன்ற ஆதார விஷயங்களாகையால் வெகுநேரம் நீடிக்க வில்லை. முதலில் வழக்கைப் பதிவுசெய்யும் அதிகாரியிடம் சென்ற போது, என் விவகாரத்தில் யாருக்குமே எவ்வித அக்கறையும் இல்லா ததுபோலத் தோன்றியது. எட்டு நாட்களுக்குப் பிறகு என்னை விசா ரித்த மாஜிஸ்திரேட்டோ என்னை ஒருவித சுவாரஸ்யத்துடன் பார்த்தார். ஆரம்பத்தில் என் பெயர், முகவரி, தொழில், பிறந்த தேதி, பிறந்த இடம்பற்றி மட்டுமே விசாரித்தார். பிறகு நான் எனக்கு ஒரு வழக்கறிஞரை வைத்துக்கொண்டிருந்தேனா என்று கேட்டார். நான் அவ்வாறு செய்யவில்லை என்பதை உணர்ந்தேன். அப்படி ஒரு வழக் கறிஞரை நான் வைத்துக்கொள்வது கட்டாயம் தேவைதானா என்று அவரைக் கேட்டுத் தெரிந்துகொள்ள விரும்பினேன். ''ஏன்?'' என் றார் அவர். என்னுடைய விவகாரத்தில் எந்தவிதச் சிக்கலும் இல் லையே என்றேன் நான். சிரித்தவாறே அவர் சொன்னார்: ''நீங்கள் அப்படி நினைக்கிறீர்கள். ஆனால் சட்டம் என்று ஒன்று இருக்கிறது. நீங்களாக ஒரு வழக்கறிஞரை வைத்துக்கொள்ளாவிட்டால் நாங்கள் சட்டப்பூர்வமாக ஒருவரை நியமித்துவிடுவோம்.'' இது போன்ற நுணுக்கங்களை நீதிமன்றம் கவனித்துக்கொள்வதென்பது எனக்கு மிகவும் சௌகரியமாகத் தோன்றியது. அதை நான் அவரிடம் சொல் லவும் செய்தேன். அதை ஆமோதித்த அவர், சட்டம் கச்சிதமாகத் தான் இருக்கிறது என்று சொல்லி முடித்தார்.

முதலில் நான் அவரை அவ்வளவு பெரிதாக எடுத்துக்கொள்ள வில்லை. திரைச்சீலைகளால் மூடப்பட்டிருந்த ஓர் அறைக்கு அவர் என்னை வரச் செய்தார். அங்கிருந்த ஒரே ஒரு விளக்கின் ஒளியின்

கிழிருந்த, கை வைத்த நாற்காலியில் என்னை உட்கார வைத்து அந்த அறையின் நிழற்பகுதியின் இருட்டிலேயே அவர் நின்றவாறிருந்தார். இது போன்ற சூழ்நிலைகளின் வருணனைகளை ஏற்கனவே புத்தகங்களில் படித்திருந்த எனக்கு எல்லாமே ஒரு விளையாட்டுப் போல் தோன்றியது. சற்று நேரம் பேசிக்கொண்டிருந்த பின் ஒரு முறை அவரை நன்றாகவே பார்த்துவிட்டேன். திறம்படச் செதுக்கியது போன்ற உருவம். ஆழ்ந்த நீல நிறக் கண்கள், நீண்ட சாம்பல் நிற மீசை, அடர்ந்து வளர்ந்திருந்த வெண்கேசம். நல்ல உயரம். மிகவும் நியாயஸ்தராக, சொல்லப்போனால், நட்புணர்வு கொண்டவராகவும் இருப்பவர்போல் தோன்றியது. அவ்வப்போது அவர் வாய் மட்டும் சற்றுக் கோணியவாறு காணப்பட்டது. ஏதாவது நரம்புக் கோளாறாக இருக்க வேண்டும். கிளம்பும்போது அவருடன் கைகுலுக்க முற்பட்டேன். ஆனால் உடனே நான் ஒரு மனிதனைக் கொன்றுவிட்டவன் என்பது என் நினைவுக்கு வந்தது.

மறுநாள், ஒரு வழக்கறிஞர் என்னைப் பார்க்க, சிறைக்கு வந்தார். குள்ளமாகவும் பருமனாகவும் இருந்தார். சற்றே இளம் வயது; கவனமாக, படியப்படிய வாரிவிடப்பட்ட முடி. அன்று நல்ல வெயில். (நான் வெறுமனே ஒரு முழுக்கைச் சட்டை அணிந்திருந்தேன்). அவர் அந்த வெயிலிலும் சூட் அணிந்திருந்தார். கரிய சூட், விரைப்பான கழுத்துப் பட்டை, தடித்த வெள்ளைக் கோடு போட்ட விசித்திரமான டை. தன் கையிலிருந்த சிறிய பெட்டியை என் கட்டிலின் மேல் வைத்துவிட்டுத் தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டு, வழக்குப் கோப்புகளை நன்றாகப் படித்திருப்பதாகச் சொன்னார். இது கவனத்துடன் கையாளப்பட வேண்டிய ஒரு விவகாரம். இருந்தாலும், எனக்கு அவரிடம் முழு நம்பிக்கை இருக்குமேயானால் நிச்சயம் வெற்றி பெறுவார் என்று சொன்னார். நான் அவருக்கு நன்றி தெரிவித்தேன். "சரி, மடமடவென்று விஷயத்துக்கு வருவோம்," என்றார்.

என் படுக்கைமீது அமர்ந்த அவர், என் சொந்த வாழ்க்கையைப் பற்றிய தகவல்கள் எல்லாம் அவர்களுக்குத் தெரிந்திருந்தன என்று விளக்கினார். முதியோர் இல்லத்தில் அண்மையில் என் தாயார் இறந்துபோனது அவர்களுக்குத் தெரிந்திருக்கிறது. அதற்குப் பின்,

மாரங்கோ நகருக்குச் சென்று விசாரணை செய்திருக்கிறார்கள். அம்மாவின் அடக்கம் நடந்த அன்று நான் 'எவ்வித பாதிப்பும் காட்டாமல் இருந்ததாக' அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். என் வழக்கறிஞர் சொன்னார்: ''இதில் பாருங்கள். உங்களிடம் இதையெல்லாம்பற்றிக் கேட்பது எனக்குச் சற்று சங்கடமாகத்தான் இருக்கிறது. ஆனாலும் இது மிகவும் முக்கியமானது. அவர்கள் சொல் லும் உங்களுடைய 'பாதிப்பின்மைக்கு' மறுப்பாக நான் எந்த வாத மும் வைக்கவில்லையென்றால் அதுவே அவர்களுக்குச் சாதகமாகி விடும்.'' நான் அவருக்கு உதவ வேண்டுமென்று கேட்டுக்கொண் டார். அந்தச் சம்பவ தினத்தன்று எனக்கு வருத்தமாக இருந்ததா என்று கேட்டார். இந்தக் கேள்வி எனக்கு வியப்பையே தந்தது. இதே கேள்வியைக் கேட்க வேண்டிய நிலைமை எனக்கு ஏற்பட்டிருந்தால் நான் மிகவும் சங்கடப்பட்டிருப்பேன் என்ற தோன்றியது. இருந்த போதிலும் கொஞ்ச நாளாகவே என்னை நானே கேள்வி கேட்டுக் கொள்ளும் பழக்கத்தை விட்டுவிட்டேன் என்றும், ஆகவே நான் இதற்குப் பதில் சொல்வது கடினம் என்றும் சொன்னேன். நான் அம்மாவிடம் மிகுந்த அன்புடன் இருந்தேன் என்பதில் சந்தேக மில்லை. ஆனால் அதற்கு ஒன்றும் அர்த்தமில்லை. ஆரோக்கியமாக இருக்கும் யாருமே சில சமயங்களில் தமக்குப் பிடித்தமானவர்களின் மரணத்தை விழைவதுண்டு. இதை நான் சொன்னபோது வழக்கறி ஞர் என்னை இடைமறித்தார். மிகுந்த சங்கடத்துடன் காணப்பட்ட அவர், இது போன்ற வசனங்களை விசாரணை நீதிபதியிடமோ, அவையோரிடமோ, பார்வையாளர்களிடமோ சொல்ல மாட்டேன் என்று என்னை உறுதிகூறச் செய்தார். இருந்தபோதிலும், என் உட லுக்கு ஏற்படும் அசௌகரியங்கள் என் மனநிலையைப் பாதிக் கின்றன என்ற எனது குணாதிசயத்தைப் பற்றி அவருக்கு விளக்கி னேன். அம்மாவை அடக்கம்செய்த தினத்தில், நான் களைப்புற்றும் தூக்கக் கலக்கத்துடனும் இருந்தேன். ஆகவே என்ன நடந்தது என்பது எனக்குத் தெரியவில்லை. நிச்சயமாக என்னால் சொல்ல முடிந்தது ஒன்றுதான். அம்மா இறந்துபோகாமல் இருந்தால் நன்றாக இருந் திருக்கும். என் வழக்கறிஞருக்கு இதில் திருப்தி இல்லை. ''அது போதாது,'' என்று மட்டும் சொன்னார்.

சற்று நேரம் யோசித்தார். சம்பவ தினத்தன்று என் இயல்பான உணர்வுகளை நான் கட்டுப்படுத்தி வைத்திருந்தேன் என்று சொல்ல லாமா என்று கேட்டார். "முடியாது. ஏனென்றால் அது தவறு," என் றேன். நான் வெறுப்பைத் தோற்றுவித்ததுபோல் விசித்திரமாக என்னைப் பார்த்தார். பிறகு ஓரளவு விரோதப் பாங்குடன், எது எப்படியானாலும் அந்த முதியோர் இல்லத் தலைவரும் அங்குள்ள ஊழியர்களும் சாட்சி சொல்ல வருவார்கள் என்றும், அப்படி அவர் கள் சொல்வது எனக்கு மிகுந்த தொந்தரவை விளைவிக்கலாம் என் றும் கூறினார். அந்த விஷயத்துக்கும் என்னுடைய இந்த விவகாரத் துக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லையென்றும் நான் சொன்ன போது, சட்டம் சம்பந்தமான விஷயங்களுடன் எனக்குப் பரிச்சயம் இல்லை என்பது மிகவும் தெளிவாகத் தெரிகிறது என்று அவர் பதி லளித்தார்.

சற்றே எரிச்சலுடன் அவர் புறப்பட்டுச் சென்றார். அவரை இன் னும் சற்று நேரம் இருக்கச் செய்து அவர் ஆதரவை நான் விரும்பு கிறேன் என்றெல்லாம் விளக்கிச் சொல்ல வேண்டும் போலிருந்தது. என் தற்காப்புக்காக அவருடைய ஆதரவை நான் விழையவில்லை. சொல்லப்போனால் என்னுள் இயல்பாகத் தோன்றிய ஒரு ஆசைதான் அது. அவர் என்னுடன் இயல்பாக இருக்க முடியாதபடி நான்தான் நடந்துகொண்டேன் என்பதை உணர்ந்தேன். அவராலும் என்னைப் புரிந்துகொள்ள முடியாததால் என்மேல் சற்றே கோபமடைந்திருந் தார். நான் எல்லோரையும் போன்றவன்தான். முழுக்கமுழுக்க நான் எல்லோரையும் போன்றவன்தான் என்று அவரிடம் சொல்ல எனக்கு ஆசையாக இருந்தது. ஆனாலும் அப்படியெல்லாம் சொல்வதால் அடிப்படையில் பலன் ஒன்றும் இல்லை. மேலும், இத்தனையும் சொல்லச் சோம்பல்பட்டதால் அந்த எண்ணத்தையே கைவிட்டு விட்டேன்.

சற்று நேரம் கழித்து மறுபடியும் என்னை விசாரணை நீதிபதியின் அலுவலகத்துக்கு அழைத்துச் சென்றனர். அப்போது பகல் இரண்டு மணி. மெல்லிய திரைச்சீலையை ஊடுருவி வந்த வெளிச்சம் அறையை நிறைத்திருந்தது. உள்ளே வெப்பம் அதிகமாக இருந்தது.

என்னை உட்காரச் செய்து மிகவும் மரியாதை கலந்த கனிவோடு, 'எதிர்பாராத சூழ்நிலைகளின் காரணமாக' என்னுடைய வழக்கறிஞர் வர முடியாமல் போய்விட்டது என்று தெரிவித்தார். ஆனாலும் நான் விரும்பினால் என் வழக்கறிஞர் வந்து ஆஜராகும்வரை எந்தக் கேள்விக்கும் பதில் சொல்லாமல் இருக்க எனக்கு உரிமை உண்டு என்று கூறினார். என்னால் தனியாகவே எல்லாக் கேள்விகளுக்கும் பதில் சொல்ல முடியும் என்றேன். உடனே மேஜையிலிருந்த ஒரு பித்தானை விரலால் அழுத்தினார். நீதிமன்ற எழுத்தர்—இளைஞர்—என் பின்புறம் வந்து நின்றார்.

நாங்களிருவரும் எங்கள் நாற்காலிகளில் எதிரெதிரே நன்றாகப் பின்தள்ளி உட்கார்ந்துகொண்டோம். விசாரணை தொடங்கியது. நான் அதிகம் பேசாதவன், அழுத்தமானவன் என்ற அபிப்பிராயம் பரவலாக இருந்துவருகிறதென்றும், அதுகுறித்து நான் என்ன நினைத்தேன் என்றும் அவர் கேட்டார். "பொதுவாக, சொல்வதற்கென்று எனக்குப் பெரிதாக எதுவும் இருப்பதில்லை. ஆகவே பெரும்பாலும் நான் பேசாமலிருக்கிறேன்," என்றேன். முதன்முறை போலவே இப்போதும் புன்னகைத்தார். அது ஒரு மிகச் சிறந்த காரணம் என்பதை ஆமோதித்த அவர், "மேலும் அது அவ்வளவு முக்கியமான விஷயம் அல்ல," என்றார். சற்று நேரம் பேசாமல் என்னைப் பார்த்துக்கொண்டே இருந்தார். பிறகு திடீரென நிமிர்ந்து என்னிடம் சொன்னார், "நான் தெரிந்துகொள்ள விரும்புவது, உங்களைத்தான்." அவர் எந்த அர்த்தத்தில் அப்படிச் சொன்னார் என்பது எனக்குப் புரியவில்லை. நான் ஒன்றும் பேசாமலிருந்தேன். அவர் தொடர்ந்தார். உங்கள் செயலில் பல விஷயங்கள் எனக்கு இன்னும் புரியாத புதிராகவே இருக்கின்றன. அவற்றையெல்லாம் புரிந்துகொள்ள நீங்கள் எனக்கு உதவுவீர்கள் என நம்புகிறேன்." அதிலொன்றும் சிரமமில்லை என்றேன். சம்பவ தினத்தன்று நடந்ததை நினைவுபடுத்திச் சொல்லுமாறு என்னை வற்புறுத்தினார். நான் ஏற்கனவே அவரிடம் விவரித்திருந்ததைத் திரும்பவும் கூறினேன்: ரேமோன், கடற்கரை, குளியல், சண்டை, மறுபடியும் கடற்கரை, சிறிய ஓடை, வெயில், துப்பாக்கியின் ஐந்து தோட்டாக்கள். ஒவ்வொரு வாக்கியத்தின் முடிவிலும்

'உம்' போட்டுக்கொண்டே வந்தார். கீழே கிடந்த சடலத்தைப் பற்றி நான் சொல்லும்போது ''சரிதான்,'' என்று தலையசைத்தவாறே சொன்னார். எனக்கோ திரும்பத்திரும்ப அதே கதையைச் சொல்வது அலுப்பாக இருந்தது. நான் ஒருபோதும் இவ்வளவு பேசியதில்லை என்று எனக்குத் தோன்றியது.

சற்று நேர மௌனத்திற்குப் பிறகு எழுந்து நின்று, அவர் எனக்கு உதவிபுரிய விரும்புவதாகவும், என்மேல் அவருக்கு ஒருவித அக்கறை ஏற்பட்டுவிட்டதாகவும், கடவுள் புண்ணியத்தில் எனக்காக ஏதாவது செய்வாரென்றும் கூறினார். ஆனால் அதற்கு முன் சில கேள்விகளைக் கேட்க விரும்பினார். என் அம்மாவிடம் எனக்குப் பிரியம் இருந்ததா என்று எவ்விதப் பீடிகையும் இன்றிப் பளீரென்று கேட்டார். ''ஆமாம்,'' என்றேன் நான். ''எல்லோருக்கும் இருப்பதுபோலத்தான் எனக்கும்,'' இச்சமயத்தில் இதுவரை ஒரே சீராகத் தட்டச்சு செய்து கொண்டிருந்த அந்த எழுத்தர் திடீரென்று நிறுத்தி—ஏதோ தவறு செய்திருக்க வேண்டும்—சங்கடத்துடன் உருளையைப் பின்நகர்த்தித் தவறுகளைத் திருத்தினார். விசாரணை நீதிபதி வழக்கம்போல், அதற்கு முந்திய கேள்வியுடன் சம்பந்தமில்லாத அடுத்த கேள்வியைக் கேட்டார். ஐந்து குண்டுகளையும் சேர்ந்தாற்போல் ஒன்றன்பின் ஒன்றாகச் சுட்டேனா என்று கேட்டார். நான் கொஞ்சம் யோசித்தேன். முதலில் ஒருமுறைதான் சுட்டேன் என்றும், சில விநாடிகள் கழித்து நான்கு முறை சுட்டேன் என்றும் பிசகின்றிச் சரியாகச் சொன்னேன். ''முதல் முறைக்கும் இரண்டாவது முறைக்கும் இடையே எதற்காகக் காத்திருந்தீர்கள்?'' அவர் கேட்டார். மீண்டும் ஒருமுறை அந்தச் சிவந்த கடற்கரை என் கண்முன் தோன்றியது. மீண்டும் ஒரு முறை என் முன்நெற்றியில் வெயிலின் எரிச்சலை உணர்ந்தேன். ஆனால் இம்முறை பதில் எதுவும் சொல்லவில்லை. அப்போது நீடித்த மௌனமான இடைவெளியில் விசாரணை நீதிபதி நிம்மதியற்றுக் காணப்பட்டார். உட்கார்ந்து தலைமுடியைக் கோதியவாறு முழங்கைகளை மேஜைமேல் ஊன்றிக்கொண்டு என்னை நோக்கிச் சாய்ந்தவாறு விசித்திரமான தொனியில் என்னைப் பார்த்துக் கேட்டார்: ''தரையில் விழுந்துவிட்ட உடலின் மேல் மீண்டும் ஏன் சுட்டீர்கள்?

ஏன்?'' மறுபடியும் என்ன சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை. நெற்றியைக் கையால் அழுத்தித் தேய்த்தவாறு சற்றுக் குரலை மாற்றி மீண்டும் கேட்டார்: ''ஏன்? நீங்கள் என்னிடம் சொல்லித்தான் தீர வேண்டும்,'' என்றார். நான் தொடர்ந்து மௌனமாகவே இருந்தேன்.

திடீரென்று இருக்கையை விட்டு எழுந்து கால்களை எட்டிப் போட்டவாறு நடந்து அறையின் மற்றொரு கோடிக்குச் சென்றார். கோப்புகள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் அலமாரியிலிருந்து ஒரு இழுப்பறையை வெளியே இழுத்தார். அதிலிருந்து வெள்ளிச் சிலுவை ஒன்றை வெளியே எடுத்துக் கண் முன்னே ஆட்டியவாறு என்னை நோக்கி நடந்துவந்தார். உணர்ச்சிவசப்பட்டு நடுங்குவது போல் அவர் குரல் மாறியது. ''இது என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?'' என்று உரத்த குரலில் கேட்டார். ''ஓ, தெரியாம லென்ன,'' என்றேன். உடனே ஒரு ஆவேசம் தொனிக்கும் வகையில் மடமடவென்று பேசினார். அவருக்கு இறைவன்மேல் நம்பிக்கை இருக்கிறது. எந்த ஒரு மனிதனும் இறைவனால்கூட மன்னிக்கப்பட முடியாத அளவு குற்றம் செய்தவனாக மாட்டான். ஆனால் அந்த மன்னிப்பைப் பெற மனிதன் தன் குற்றத்துக்காக வருந்தி ஒரு குழந் தையின் ஆத்ம சுத்தியுடன் எதையும் வரவேற்கச் சித்தமாக இருக்க வேண்டும். அவர் உடல் முழுவதும் மேஜைமேல் வளைந்து குனிந் திருந்தது. அவருடைய அந்தச் சிலுவையை என் தலைக்கு மேலே மிக அருகில் ஆட்டிக்கொண்டிருந்தார். உண்மையைச் சொல்வதானால் அவருடைய தர்க்கத்தை என்னால் சரியாகப் புரிந்துகொள்ள முடிய வில்லை. காரணம், முதலாவதாக, எனக்கு ஒரே புழுக்கமாக இருந் தது; அடுத்தபடியாக அங்கு மொய்த்துக்கொண்டிருந்த பெரியபெரிய ஈக்கள் என் முகத்தின் மேல் வந்து உட்கார்ந்த வண்ணம் இருந்தன; மேலும், அவர் பயமுறுத்துபவராகத் தோன்றினார். பார்க்கப் போனால் குற்றவாளியாக இருக்கும் நிலையில் இப்படி நான் உணர் வது கேலிக்குரியது என்றும் உணர்ந்தேன். இருந்தபோதிலும் அவர் மேலும் தொடர்ந்து பேசிக்கொண்டிருந்தார். ஏறத்தாழ நான் புரிந்து கொண்டது இதுதான்; என்னுடைய ஒப்புதல் வாக்குமூலத்தில் ஒன்றே ஒன்றுதான் தெளிவற்றதாக இருந்திருக்கிறது. முதலில் சுட்ட

பிறகு இரண்டாவது குண்டைச் சுடுவதற்கு முன்னால் நான் எதற்காகக் காத்திருக்கிறேன்? அதுவரை நடந்ததெல்லாம் சரி. இது ஒன்று தான் அவருக்குப் புரியவில்லை.

எவ்வித முக்கியத்துவமுமற்ற அந்த ஒரு வாதத்தையே விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருப்பது தவறு என்று சொல்ல வாயெடுத்தேன். ஆனால் என்னைப் பேச விடாமல் இடைமறித்து, நன்றாக நிமிர்ந்து நின்று, கடைசி முறையாக வேண்டிக் கேட்பது போல், எனக்கு இறைவன்மேல் நம்பிக்கை உண்டா என்று கேட்டார். இல்லை என்றேன். வெறுப்புக் கலந்த கோபத்துடன் உட்கார்ந்துவிட்டார். அது சாத்தியமில்லையென்றும் இறைவனை நிராகரிக்கிறவன் உள்பட எல்லோருமே இறைவன்மேல் நம்பிக்கை கொண்டுள்ளனர் என்றும் கூறினார். அவருடைய அசைக்க முடியாத கொள்கை அதுதான். அதிலேயே அவருக்குச் சந்தேகம் ஏற்படுமானால், அவரது வாழ்க்கைக்கு ஒரு அர்த்தமே இல்லாமல் போய்விடும். ''என் வாழ்க்கைக்கு அர்த்தம் இல்லாமல் போய்விட வேண்டும் என்று விரும்புகிறீர்களா?'' என்று வினவினார். அதைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை, அதை நான் சொல்லவும் செய்தேன். ஆனால் அவரோ மேஜைக்குக் குறுக்கே இயேசுவின் உருவச் சிலையை என் கண்களுக்குக் கீழே நீட்டி, அர்த்தமற்ற முறையில் கத்தினார்: ''நான் ஒரு கிறிஸ்தவன். ஆம். உன்னுடைய தவற்றுக்காக இவரிடம் மன்னிப்புக் கேட்கிறேன். இவர் உனக்காக வருந்தியிருக்கிறார் என்பதை எப்படி உன்னால் நம்பாமல் இருக்க முடிகிறது?'' அவர் என்னிடம் 'நீ' போட்டுப் பேசத் தொடங்கிவிட்டார் என்பதைக் கவனித்தேன். இருந்தாலும் எனக்குப் போதுமென்றாகிவிட்டது. அறையினுள் வெப்பத்தின் கொடுமை மேன்மேலும் அதிகமாகிக்கொண்டேயிருந்தது. எனக்குக் கேட்கப் பிடிக்காததைப் பேசிக்கொண்டிருப்பவரிடமிருந்து தப்ப வேண்டுமென்று தோன்றினால், அவர் சொல்வதை ஆமோதிப்பதுபோல் இருந்துவிடுவேன். இப்போதும் அப்படியே இருந்தேன். அவர் வெற்றிபெற்றதுபோல் ''பார்த்தாயா, பார்த்தாயா. நீ நம்பிக்கை வைத்திருக்கிறாய். அவரிடம் பாவமன்னிப்புக் கேட்கப் போகிறாய்,'' என்று சொன்னபோது எனக்குச் சற்று வியப்பாக

இருந்தது. வேறு வழியில்லாமல் மீண்டும் ஒருமுறை "இல்லை," என்றேன். அவர் தன் நாற்காலியில் மீண்டும் அமிழ்ந்துபோனார்.

அவர் மிகவும் சோர்ந்துபோனதுபோல் காணப்பட்டார். சற்று நேரம் மௌனமாகவே இருந்தார். இதுவரை நாங்கள் பேசியதை எல்லாம் விடாமல் பதிவுசெய்துகொண்டு வந்த தட்டச்சு இயந்திரம் எங்கள் உரையாடலின் கடைசி வாக்கியங்களை இன்னும் அடித்துக் கொண்டிருந்தது. அவர் என்னை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார். பார்வையில் சிறிது வருத்தம் தென்பட்டது. லேசாக முணுமுணுத்தார். "உங்களைப்போல் இவ்வளவு இறுகிப்போன ஆத்மாவை நான் இதுவரை பார்த்ததில்லை. என்முன் வந்துள்ள குற்றவாளிகள் அனைவரும் கர்த்தரின் இந்தத் துன்பச் சின்னத்தின் முன் அழுதிருக்கிறார்கள்." அவர்கள் அழுததன் காரணம் அவர்கள் குற்றவாளிகளாக இருந்ததுதான் என்று சொல்ல வாயெடுத்தேன். ஆனால் நானும் அவர்களைப் போலத்தானே என்று தோன்றியது. இருந்தாலும் அந்த நிலையில் என்னை வைத்துப் பார்க்க என்னால் முடியவில்லை. விசாரணை முடிந்துவிட்டது என்பதை எனக்கு உணர்த்துவதுபோல் அவர் எழுந்திருந்தார். சோர்ந்து காணப்பட்ட நிலையில் என்னிடம் மீண்டும் ஒரே ஒரு கேள்வி கேட்டார். என் செய்கைக்காக நான் வருந்துகிறேனா? நான் சற்று யோசித்தேன். உண்மையில் வருத்தம் என்று சொல்ல முடியாது. ஒரு வகை மனச்சங்கடம் அடைந்தேன் என்றுதான் சொல்ல வேண்டும் என்று கூறினேன். நான் சொன்னதை அவர் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. ஆனால் அன்றைய சந்திப்பில் அதற்குமேல் ஏதும் நடக்கவில்லை. அதற்குப் பிறகும் விசாரணை நீதிபதியை நான் பல தடவை பார்க்க நேரிட்டது. ஆனால் அந்தச் சந்தர்ப்பங்களிலெல்லாம் என்னுடைய வழக்கறிஞரும் என்னுடன் வருவார். நான் ஏற்கனவே சொல்லியிருந்த வாக்குமூலத்திலிருந்து சில விளக்கங்கள் கேட்பதுடன் இந்தச் சந்திப்புகள் முற்றுப் பெறும். அல்லது வழக்கறிஞரும் விசாரணை நீதிபதியும் சில குற்றச்சாட்டுகளைப் பற்றி விவாதிப்பார்கள். ஆனால் இது போன்ற சமயங்களில் அவர்கள் என்னைப் பற்றி ஒருபோதும் கவலைப்பட்டதில்லை. கொஞ்சம்கொஞ்சமாக இவ்விசாரணைகளின் தொனியே

மாறிவிட்டது. விசாரணை நீதிபதிக்கு என்னிடம் அக்கறை இல்லை யென்றும், என்னுடைய விவகாரத்தைப் பொறுத்தவரை அவர் ஒருவிதமான முடிவுக்கு வந்துவிட்டாரென்றும் தோன்றியது. அதற் குப் பிறகு இறைவனைப் பற்றி என்னிடம் பேசவும் இல்லை. முதல் நாள் இருந்த அந்த ஆவேசமும் இல்லை. இதன் விளைவாக இப் போது எங்கள் சந்திப்புகளில் ஒருவித நட்புறவு தோன்ற ஆரம்பித்து விட்டது. சில கேள்விகள்; வழக்கறிஞருடன் கொஞ்சம் உரையா டல்; அன்றைய விசாரணை முடிந்துவிடும். விசாரணை நீதிபதி சொல்படி பார்த்தால் என் வழக்கு எப்படிச் செல்ல வேண்டுமோ அப்படிச் சென்றுகொண்டிருந்தது. சில சமயங்களில் உரையாடல் பொதுவான விஷயங்களைப் பற்றி இருந்தபோது என்னையும் அதில் சேர்த்துக்கொண்டார்கள். இப்போது என்னால் ஆசுவாசமாக இருக்க முடிந்தது. இது போன்ற சமயங்களில் யாருமே என்னைத் தொந்தரவு செய்யவில்லை. எல்லாமே அவ்வளவு இயல்பாக, அவ் வளவு சீராக, அவ்வளவு கச்சிதமாக நடந்துகொண்டிருந்ததால் 'அவர்கள் குடும்பத்தில் ஒருவனாகவே நான் ஆகிவிட்டது' போன்ற ஒரு அபத்தமான எண்ணம் எனக்கு ஏற்பட்டது. பதினோரு மாதங்கள் வரையிலான இந்த விசாரணையின்போது, ஒவ்வொரு முறையும் விசாரணை நீதிபதி தனது அறை வாசல்வரை வந்து என் தோள்களைத் தட்டிக்கொடுத்து, ''இன்று இத்துடன் முடிந்துவிட்டது, கர்த்தரின் எதிரி அவர்களே!'' என்று ஒருவித நட்புறவுடன் சொல்லும் சில அரிய கணங்களைத் தவிர வேறு எதுவுமே எனக்கு மகிழ்ச்சி தரவில்லை என்பது எனக்கே சற்று வியப்பாக இருந்தது. இதன் பின்னர் என்னை போலீஸாரின் பொறுப்பில் ஒப்படைத்துவிட்டார்கள்.

# 2

சில விஷயங்களைப் பற்றி நான் ஒருபோதுமே பேச விரும்புவ தில்லை; நான் சிறைக்கு வந்த சில நாட்களுக்குப் பிறகு, என் வாழ்க்கையின் இந்தப் பகுதிபற்றியும் நான் பேச விரும்பியிருக்க மாட்டேன் என்பதைப் புரிந்துகொண்டேன்.

நாட்கள் செல்லச்செல்ல இது போன்ற ஒரு வெறுப்புணர்ச்சிக்கு முக்கியத்துவம் ஏதும் இல்லை என்று தெரிந்துகொண்டேன். முதல் சில நாட்களில் நான் சிறைப்பட்டிருந்ததாகவே உண்மையில் நான் நினைக்கவில்லை. ஏதோ ஒரு புதிய சம்பவம் நிகழப்போவதற்காக வெறுமனே காத்துக்கொண்டிருந்தேன். மாரியின் முதல் வருகை— ஒரே ஒரு முறைதான் வந்தாள்—அதற்குப் பின்தான் எல்லாமே ஆரம்பித்தது. என்றைக்கு அவளுடைய கடிதம் வந்ததோ அன்றி லிருந்து, (அவள் என் மனைவியாக இல்லாததால் அவளை வர அனு மதிக்க மறுத்துவிட்டார்கள் என்று எழுதியிருந்தாள்) அந்த நாளி லிருந்துதான், சிறைக்கூண்டுதான் என் வீடு, அதற்குள்தான் என் வாழ்க்கை என்பதை உணர்ந்தேன். என்னைக் கைதுசெய்த தினத் தன்று ஒரு அறையில் தள்ளிப் பூட்டினார்கள். அங்கு ஏற்கனவே பல கைதிகள் இருந்தனர். அதில் பெரும்பாலானோர் அராபியர்கள். என் னைப் பார்த்தவுடன் சிரித்தார்கள். பிறகு நான் எதற்காக அங்கு வந்து சேர்ந்தேன் என்று கேட்டார்கள். ஒரு அராபியனைக் கொன்றேன் என்று சொன்னேன். மௌனமாகிவிட்டார்கள். சற்று நேரத்தில் இரவு விழுந்ததும், எனக்குக் கொடுக்கப்பட்ட விரிப்பைப் படுக்கும் முன் எப்படி உபயோகிப்பது என்று சொல்லிக்கொடுத்தார்கள். அதன் ஒரு முனையைச் சுருட்டி ஒருமாதிரியாகத் தலையணைபோல் உப யோகிக்கலாம். இரவு முழுவதும் என் முகத்தின்மீது மூட்டைப் பூச்சிகள் ஓடியவண்ணம் இருந்தன. சில நாட்களுக்குப் பிறகு ஒரு

சிறைக்கூண்டில் நான் தனித்து வைக்கப்பட்டேன். படுத்துக்கொள்வதற்கு மர பெஞ்சு ஒன்று அங்கிருந்தது; அதைத் தவிர, ஒரு கழிவுப் பெட்டியும் ஒரு தகரப் பாத்திரமும் மட்டுமே அங்கு இருந்தன. நகரத்தின் மேடான பகுதியில் இருந்தது அந்தச் சிறைச்சாலை. அதன் சிறிய சன்னல் வழியாக என்னால் கடலைப் பார்க்க முடிந்தது. ஒரு நாள் அந்தச் சன்னல் கம்பியில் தொங்கியவாறு வெளிச்சத்தை நோக்கிக் கண்களை இடுக்கிக் கூர்ந்து பார்த்துக்கொண்டிருக்கும் போது காவல்காரன் வந்து, என்னைப் பார்க்க யாரோ வந்திருக்கிறார்கள் என்று தெரிவித்தான். அது மாரியாக இருக்கும் என்று நினைத்தேன். அவளேதான்.

பார்வையாளர்களைச் சந்தித்துப் பேசும் கூடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டேன். ஒரு நீண்ட தாழ்வாரம், பிறகு ஒரு படிக்கட்டு, மீண்டும் ஒரு நீண்ட தாழ்வாரம். பெரிய சன்னல்கள் கொண்ட அந்தக் கூடம் வெளிச்சமாக இருந்தது. குறுக்கே வரிசையாகப் போடப்பட்டிருந்த கம்பிகள் கூடத்தை நீளவாக்கில் மூன்று பகுதிகளாகப் பிரித்தன. பார்வையாளர்களையும் கைதிகளையும் பிரித்த இரு வரிசைக் கம்பிகளுக்கிடையே சுமார் எட்டிலிருந்து பத்து மீட்டர் இடைவெளி இருந்தது. நான் மாரியைச் சந்தித்தேன். அவள் கோடு போட்ட உடைய அணிந்திருந்தாள். வெயிலினால் அவள் முகம் பழுப்பேறியிருந்தது. எனக்கு அருகே சுமார் பத்துக் கைதிகள். பெரும்பாலும் அராபியர்கள். மாரியைச் சுற்றிலும் ஆப்பிரிக்க முஸ்லிம் பெண்கள் இருந்தனர். மாரிக்கு இருபுறமும் இரு பெண்கள். மெல்லிய உதடுகளுடன் கருப்பு உடை அணிந்திருந்த ஒரு வயதான கிழவி; சிறு உருவம். நீண்ட முடிகளுடன் தடித்த உருவம் கொண்ட மற்றொரு பெண்; உரத்த குரலில் அதிக அங்க அசைவுகளுடன் பேசிக்கொண்டிருந்தாள். கம்பிகளுக்கிடையே இருந்த இடைவெளியினால் மிகவும் பிரிக்கப்பட்டுவிட்ட நிலையில் பார்வையாளர்களும் கைதிகளும் மிகவும் உரத்துப் பேச வேண்டியிருந்தது. அந்தக் கூடத்தில் நான் நுழைந்தபோது அந்த வெற்றுச் சுவர்களில் பட்டு எதிரொலித்த குரல்களும் அகன்ற சன்னல்களின் கண்ணாடிகளில் பட்டு அப்படியே பிரதிபலித்த, கண்கூச வைக்கும் ஒளிப்பிழம்பும்

ஒன்றுசேர, ஒருவித திக்பிரமை ஏற்பட்டது. எனது சிறைக்கூண்டு மித மான வெளிச்சத்தோடும், இதைவிட அமைதியாகவும் இருந்ததால், இந்தச் சூழ்நிலைக்குப் பழக்கப்படுவதற்குச் சில கணங்கள் ஆயின. ஒருவாறாக, பகல் பொழுதின் முழு வெளிச்சத்தில் ஒவ்வொரு முகத் தையும் தெளிவாகத் தனித்தனியாகப் பார்க்க முடிந்தது. அந்த இரு கம்பி வரிசைகளுக்கிடையே தாழ்வாரத்தின் கோடியில் ஒரு காவல் காரன் உட்கார்ந்திருப்பதைக் கவனித்தேன். பெரும்பாலான அரா பியக் கைதிகளும் அவர்களுடைய உறவினர்களும் தரையில் எதிரும் புதிருமாகக் குந்தியிருந்தனர். அவர்கள் குரலை உயர்த்திப் பேச வில்லை. அங்கிருந்த இரைச்சல்களுக்கு நடுவேயும் மெதுவான குர லில் பேசி ஒருவரையொருவர் எப்படியோ புரிந்துகொண்டனர். கீழ் மட்டத்தில் பரிமாறிக்கொள்ளப்பட்ட இந்த முணுமுணுப்பு அவர் கள் தலைகளுக்கு மேலே நடந்துகொண்டிருந்த பேச்சுவார்த்தை களுக்கு ஒரு ஆதார சுருதிபோல் தொடர்ந்து வந்துகொண்டிருந்தது. மாரியை நோக்கி நடக்கும்போது இவை எல்லாவற்றையும் மிக வேகமாகப் பார்த்துக் கவனித்துக்கொண்டே போனேன். ஏற்கனவே கம்பி வரிசைகளுடன் ஒட்டியவாறு நின்றுகொண்டிருந்த மாரி, என் னைப் பார்த்து, தன்னால் முடிந்தவரைக்கும் புன்னகைத்தாள். அவள் மிக அழகாகவே இருந்தாள். ஆனால் அதை எப்படி அவளிடம் சொல் வது என்று எனக்குத் தெரியவில்லை.

குரலை மிகவும் உயர்த்தி "என்ன, எப்படி இருக்கிறாய்? உனக்கு வேண்டியதெல்லாம் கிடைக்கிறதா?" என்று கேட்டாள். "ஓ, எல் லாம் கிடைக்கிறதே," என்றேன்.

பிறகு மௌனமானோம். மாரியின் சிரித்த முகம் மாறவே யில்லை. அந்தப் பருமனான பெண் எனக்கு அருகிலிருப்பவனைப் பார்த்து—அவன் அவள் கணவனாக இருக்க வேண்டும்—கத்திப் பேசினான். உயரமாக, வெண்ணிறக் கேசத்துடன், இனிய முகத் துடன் இருந்தான் அந்த ஆள். ஏற்கனவே தொடங்கப்பட்டிருந்த உரையாடலின் தொடர்ச்சிதான் அது.

மிக உரத்த குரலில் "மூன் அவனைப் பார்த்துக்கொள்ள மாட் டேன் என்று சொல்லிவிட்டாள்," என்றாள். "அப்படியா,"

என்றான் அவன். ''நீ வெளியே வந்ததும் அவனைத் திரும்ப அழைத்துக் கொள்வாய் என்று சொல்லியும் மறுத்துவிட்டாள். ''

ரேமோன் என் நலனைப் பற்றி விசாரித்ததாகத் தன் பங்கிற்கு மாரியும் கத்தினாள். நான் அதற்கு ''நன்றி,'' என்றேன். ஆனால் என் அருகில் உள்ளவன் ''அவன் நன்றாக இருக்கிறானா,'' என்று உரக்கக் கேட்டதில் என் குரல் அடிபட்டுவிட்டது. ''அவன் எப்போதையும் விட இப்போது நன்றாக இருக்கிறான்,'' என்று சிரித்தாள். எனக்கு இடது பக்கம் இருந்த மென்மையான கைகளுடைய இளைஞன் ஒன்றும் பேசவில்லை. அவனுக்கு எதிரில் ஒரு மெலிந்த கிழவி. இரு வரும் ஒருவரையொருவர் தீவிரமாக உற்றுப்பார்த்துக்கொண் டிருந்தனர் என்பதையும் கவனித்தேன். ஆனால் வெகு நேரம் அவர் களையே கவனிக்க முடியாதபடி மாரியின் குரல் உரக்கக் கேட்டது. ஓரளவு நான் நம்பிக்கையுடன் இருக்க வேண்டும் என்று அவள் சொன்னாள். 'சரி' என்றேன். சொல்லியவாறு அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். அவளுடைய உடைக்குள்ளிருந்த வாளிப்பான தோள்களை இறுகப் பற்றிக்கொள்ள வேண்டும் போலிருந்தது. அந்தத் துணியின் மென்மை என்னைக் கவர்ந்தது. இவற்றையெல் லாம் மீறி வேறு எதில் நம்பிக்கை வைக்க வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால், மாரி இவற்றைத்தான் குறிப்பிட்டிருக்க வேண்டும். ஏனென்றால் அவள் இன்னும் சிரித்தவாறேயிருந்தாள். பளிச்சிடும் அந்தப் பற்களின் வெண்மை, அவள் கண் இமைகளின் சிறு மடிப்பு—இவை மட்டுமே எனக்குத் தெரிந்தன. ''நீ நிச்சயம் விடுதலை ஆகி வருவாய். பிறகு நாம் மணந்துகொள்வோம்,'' என்று மறுபடியும் உரக்கச் சொன்னாள். ''உண்மையாகவா,'' என்று நான் கேட்டாலும் சும்மா ஏதோ சொல்ல வேண்டுமே என்றுதான் அப் படிச் சொன்னேன். அவள் மறுபடியும் வேகமாக, எப்போதும் போல் உரத்த குரலில் அது உண்மைதான் என்றும், எனக்கு விடுதலை அளித்துவிடுவார்கள் என்றும், நாங்கள் வழக்கம்போலக் கடலில் குளிக்கப் போகலாமென்றும் சொன்னாள். அவளருகில் இருந்த பெண் இன்னும் உரக்கக் கத்தினாள். சிறைச்சாலை அலுவலகத்தில் விட்டுச் செல்லும் கூடையில் என்னவெல்லாம் வைத்திருக்கிறா

ளென்று ஒரு பட்டியலே கொடுத்தாள். அதிக விலை கொடுத்து வாங்கியிருப்பதால் எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்க்க வேண்டுமாம். எனக்கு மற்றொரு புறத்தில் இருந்த கைதியும் அவன் அம்மாவும் இன்னும் ஒருவரையொருவர் பார்த்தவாறேயிருந்தனர். எங்கள் காலடியில் அந்த அராபியர்களின் முணுமுணுப்பு இன்னும் தொடர்ந்துகொண்டேயிருந்தது. வெளி உலகத்தின் வெளிச்சமெல்லாம் ஒன்றுதிரண்டு சன்னலைத் தாக்குவதுபோல் இருந்தது.

எனக்கு இருப்புக்கொள்ளவில்லை. இந்த இடத்தை விட்டுப் போய்விடலாம் என்றே எனக்குத் தோன்றியது. அந்த இரைச்சல் என்னை மிகவும் பாதித்தது. ஆனால் மற்றொருபுறம் மாரி இருக்கும் வரை மகிழ்ச்சியாக இருக்கலாமே என்று தோன்றியது. இது போன்று எவ்வளவு நேரம் கழிந்திருக்கும் என்று எனக்குத் தெரியவில்லை. தன் அலுவலக வேலையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்த மாரி, இடைவிடாத புன்முறுவலுடன் காணப்பட்டாள். முணுமுணுப்புகள், கத்தல்கள், பேச்சுவார்த்தைகள் எல்லாம் குறுக்கும்நெடுக்குமாக அலைபாய்ந்த வண்ணம் இருந்தன. எனக்கருகில் ஒருவரை ஒருவர் பார்த்தவாறு மட்டுமே இருந்த அந்த இளைஞனும் முதியவளும் மாத்திரம் அங்கே ஒரு மௌனத் தீவு. கொஞ்சம்கொஞ்சமாக அராபியர்களைத் திரும்ப அழைத்துச்சென்றனர். முதல் அராபியன் செல்ல ஆரம்பித்ததுமே, அநேகமாக எல்லோருமே மௌனமாகிவிட்டனர். அந்த முதியவள் கம்பிகளுக்கு மிக அருகில் நெருங்கி வந்தாள். அதே சமயம் அவளுடைய மகனிடம் ஒரு காவல்காரன் சைகை செய்தான். ''வரட்டுமா அம்மா,'' என்றான் அவன். அவள் கம்பிகள் வழியாகக் கையை நீட்டி, விடைபெறுவதுபோல் சைகைசெய்தாள். மெதுவான சற்றே நீடித்த சைகை.

அவள் புறப்பட்டுப் போகும்போது, கையில் தொப்பி ஒன்றை ஏந்தியவாறு ஒருவன் உள்ளே நுழைந்து அவள் இருந்த இடத்திற்கு வந்தான். அவனுக்கு ஒரு கைதியைச் சுட்டிக்காட்டினர். கூடம் மீண்டும் அமைதியாகிவிட்டதால் அவர்கள் இருவரும் உணர்ச்சிகரமாக, ஆனால் தாழ்ந்த குரலில் பேசிக்கொண்டார்கள். எனக்கு வலது பக்கத்தில் இருந்தவனை அழைத்துச்செல்ல ஆட்கள் வந்துவிட்டனர்.

இனியும் கத்திப் பேச வேண்டிய அவசியம் இல்லை என்பதை உண ராதவள்போல் அவன் மனைவி உரக்கச் சொன்னாள். ''உடம்பைப் பார்த்துக்கொள். ஜாக்கிரதை.'' பிறகு என் முறை வந்தது. மாரி எனக்கு முத்தமிடுவதுபோல் சைகை செய்தாள். அவளுடைய பார் வையிலிருந்து நான் மறைவதற்கு முன்னர் ஒருமுறை திரும்பிப் பார்த்தேன். அவள் அசையாமல் இருந்தாள். கம்பிகளின் மேல் அழுத் திய முகம். கோணலான, சங்கடமான அதே சிரிப்பு.

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகுதான் அவள் எனக்குக் கடிதம் எழுதினாள். அதற்குப் பிறகுதான் நான் ஒருபோதுமே பேச விரும்பாத விஷயங்கள் நடக்க ஆரம்பித்தன. எதையும் மிகைப் படுத்திச் சொல்லக் கூடாதுதான்; மேலும், அங்கிருந்த மற்றவர் களைவிட அந்தச் சிறைவாசம் எனக்கு எளிதாகவே இருந்தது. இருந்தாலும், சிறைவாசத்தின் ஆரம்பக் கட்டத்தில் எனக்கு மிகவும் சிரமமாக இருந்தது, சுதந்திரமான மனிதன் ஒருவனுக்கு இருக்கும் எண்ணங்களே எனக்கும் இருந்ததுதான். உதாரணமாக, கடற்கரைக் குச் சென்று தண்ணீரில் இறங்க வேண்டும்போல் ஒரு ஆசை வரும். என் கால்கள் மணலில் பதிந்தவுடன் வந்து மோதும் முதல் அலை களின் ஓசை, தண்ணீருக்குள் இறங்கும்போது ஏற்படும் உணர்வு, அப்போது தோன்றும் விடுதலை உணர்வு—இவற்றைக் கற்பனை செய்துபார்க்கும்போது என் சிறைக்கூண்டின் சுவர்கள் எவ்வளவு என்னை நெருக்கியிருக்கின்றன என்பது திடீரென்று நினைவுக்கு வரும். ஆனாலும், இந்த நிலைமை சில மாதங்கள் வரைதான் நீடித்தது. அதன் பிறகு ஒரு கைதியின் மனத்தில் எழும் எண்ணங்கள் மட்டுமே இருந்தன. முற்றத்தில் தினமும் உலவச் செல்வதற்கு, அல்லது என் வழக்கறிஞர்கள் வருகைக்குக் காத்திருப்பேன். மற்ற நேரங்களை எப்படிக் கழிப்பது என்று நன்றாகவே தெரிந்துவைத்திருந்தேன். அப்போதெல்லாம் நான் அடிக்கடி நினைப்பதுண்டு: ஒரு மரப்பொந் திலேயே என் வாழ்நாட்களைக் கழிக்க வேண்டிய நிர்ப்பந்தம் என்று ஏற்பட்டிருக்குமேயானால், அப்போதுகூட அங்கிருந்து தெரியும் சிறிய ஆகாய மலரைப் பார்த்துக்கொண்டிருப்பதற்குப் பழக்கப்பட் டிருப்பேன். எப்போதாவது பறந்து மறையும் பறவைகளுக்காகவோ,

தவழ்ந்து செல்லும் மேகங்களைப் பார்ப்பதற்காகவோ காத்துக் கொண்டிருப்பேன்—இப்போதெல்லாம் என் வழக்கறிஞரின் விசித் திரமான 'டை'களைச் சந்திப்பதற்காகக் காத்திருக்கிறேனே, அது போல; மற்றொரு உலகத்தில் வாரக் கடைசியில் மாரியுடன் கூடி யிருப்பதற்காகச் சனிக்கிழமைவரை பொறுத்திருந்தேனே, அது போல. ஆக, நன்றாக யோசித்துப்பார்த்தால் இது ஒன்றும் ஒரு காய்ந்துபோன மரப்பொந்து அல்ல. என்னைவிட மோசமானவர்கள் எவ்வளவோ பேர் இருந்தார்கள். ஆம், அதுவும் அம்மாதான் சொல்லு வாள்—அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்பாள்—போகப் போக எல் லாமே பழகிப்போய்விடும்.

ஆனாலும் சாதாரணமாக நான் இவ்வளவு தூரம் யோசித்துக் கொண்டிருக்கவில்லை. முதல் சில மாதங்களுக்கு மிகவும் சிரம மாகத்தான் இருந்தது. இருந்தாலும் அதை வெல்ல நான் எடுத்துக் கொண்ட முயற்சிகளிலேயே நேரம் ஒருவாறாகக் கழிந்தது. உதார ணமாக, ஒரு பெண் துணை வேண்டுமென்ற ஏக்கம் என்னை வாட்டி யது. என் இளமைக்கு அது ஒரு இயல்பான ஏக்கம்தான். குறிப்பாக மாரியை மட்டுமே நான் எப்போதும் நினைத்துக்கொண்டிருக்க வில்லை. ஏதாவது ஒரு பெண்ணைப் பற்றி, ஏன், எனக்குத் தெரிந் திருந்த எல்லாப் பெண்களைப் பற்றியும், அவர்களோடு நான் உறவு கொள்ள நேர்ந்த எல்லாச் சந்தர்ப்பங்களைப் பற்றியும் நான் நினைத் துப்பார்க்கப்பார்க்க என் சிறைக்கூண்டு முழுவதும் அவர்களே, அவர் களுடைய முகங்களே இருப்பதுபோல் தோன்றியது. என் ஆசைக் கனவுகள் என் அறையை நிரப்பின. இது ஒரு வகையில் என்னை நிதானம் இழக்கச் செய்தது. ஆனாலும் மற்றொரு வகையில் வெற்று நேரத்தை விரட்டியடிக்க உதவியது.

எனக்குக் கொஞ்சம்கொஞ்சமாகச் சிறைத் தலைமைக் காவலா ளியுடன் நட்பு ஏற்பட ஆரம்பித்தது. சாப்பாட்டு வேளையின்போது சமையற்காரனுடன் வரும் அவர்தான் முதலில் பெண்களைப் பற்றி என்னிடம் பேச ஆரம்பித்தார். இங்கு வரும் எல்லோருடைய முதல் புகாரும் இதுதான் என்றார். நானும் மற்றவர்களைப் போலத்தான் என்று அவரிடம்சொல்லி, இது மிகவும் நியாயமற்ற செயல் என்

றேன். ''நன்றாக இருக்கிறதே. அதற்காகத்தானே உங்களைச் சிறை யில் போடுவது,'' என்றார் அவர். ''அதற்காகவா? ஏன்?'' என்றேன். ''ஆமாம், பின், சுதந்திரம் என்றால் என்ன? உங்கள் சுதந்திரத்தை இங்கே பறித்துவிடுகிறார்கள்,'' என்று அவர் சொன்னார். அதைப் பற்றி நான் ஒருபோதும் நினைத்துப்பார்த்ததில்லை. ''அதுவும் சரி தான். இல்லாவிட்டால் தண்டனை எங்கேயிருந்து வரும்?'' என் றேன். அப்போது அவர், ''பார்த்தீர்களா. நீங்கள் நன்றாகப் புரிந்து கொள்கிறீர்கள். ஆனால் மற்றவர்கள்... எப்படியோ அவர்களும் கடைசியில் தாங்களாகவே சுயதிருப்தியைத் தேடிக்கொள்கிறார் கள்,'' என்றார். பிறகு அவரும் போய்விட்டார்.

சிகரெட்டுகள் பறிபோனது மற்றொரு வேதனை. நான் சிறைச் சாலைக்குள் நுழைந்ததும் என் வார்ப்பட்டை, காலணிகளின் நாடாக்கள், டை, சட்டைப்பைகளில் இருந்த எல்லாவற்றையும், குறிப்பாக, சிகரெட்டுகளை எடுத்துவைத்துக்கொண்டார்கள். சிறைக்கூண்டுக்கு வந்து சேர்ந்தவுடன் அவற்றையெல்லாம் திருப் பித் தரும்படி கேட்டேன். ஆனால், அவர்களுடைய விதிப்படி அது தடைசெய்யப்பட்டு இருந்ததென்று சொன்னார்கள். முதல் சில நாட் கள் மிகவும் கஷ்டமாக இருந்தது. எனக்கு மிகவும் கடினமாக இருந் ததே இதுதான் என்றும் சொல்லலாம். என் படுக்கையின் மரப்பலகை யிலிருந்து ஒரு துண்டுக் கட்டையைப் பிய்த்து அதைக் கடித்துக் கொண்டே இருந்தேன். நாள் முழுவதும் பித்த வாந்தி வருவதுபோல் சங்கடப்படுத்திக்கொண்டேயிருந்தது. மற்றவர்களை ஒன்றும் செய் யாத இது போன்ற சிறு விஷயங்களெல்லாம் ஏன் என்னிடமிருந்து பறிக்கப்பட வேண்டுமென்று எனக்குப் புரியவில்லை. வெகு நாட் களுக்குப் பிறகுதான் இதுவும் எனக்குக் கொடுக்கப்பட்ட தண்டனை யின் ஒரு பகுதி என்று புரிந்தது. ஆனால் அதற்குள் புகைபிடிக்கும் பழக்கம் ஏற்கனவே என்னிடமிருந்து மறைந்துவிட்டிருந்ததால், அதற்குப் பின்னும் அது எனக்கு ஒரு தண்டனையாக இருக்கவில்லை.

இதுபோன்ற அசௌகரியங்களைத் தவிர, நான் வேறு வகையில் அதிகமாகத் துன்புற்றிருக்கவில்லை. எனக்கு இருந்த ஒரே பிரச் சினை; நேரத்தை எப்படிக் கழித்துத் தீருவது? கடந்த காலத்தை

நினைவுகூர்ந்துபார்க்கக் கற்றுக்கொண்டதிலிருந்து இந்தப் பிரச்சி னையும் எனக்கு அவ்வளவாக இருக்கவில்லை. சில சமயங்களில் நான் முன்பு வசித்துவந்த அறையை நினைத்துக்கொண்டேன். என் கற்பனையில் என்னுடைய அறையின் ஒரு மூலையிலிருந்து தொடங்கிப் பார்வையை ஒரு சுற்று விட்டு, அப்போது என் மனக் கண்முன் தோன்றிய பொருள்களையெல்லாம் கணக்கெடுத்தவாறு திரும்பி அதே மூலைக்கே வந்தேன். முதலிலெல்லாம் இந்தப் பொழுதுபோக்கு வேகமாக முடிந்துவிடும். பிறகு ஒவ்வொரு தட வையும் நான் இப்படிச் செய்தபோது என் கற்பனையும் நீண்டு கொண்டே போயிற்று. அங்கிருந்த ஒவ்வொரு மரச் சாமானும், அதன் மேலிருந்த ஒவ்வொரு பொருளும் அதன் ஒவ்வொரு சிறு அம் சமும் எனக்கு நினைவுக்கு வந்தன. ஒவ்வொரு சிறு ஒடுக்கல், நசுக் கல், கீறல், பிய்ந்துபோன சிறு துண்டுகள், அவற்றின் நிறம்—இவை யெல்லாம் சிறிதுசிறிதாக நினைவுக்கு வந்தன. அதே சமயத்தில் என் கணக்கெடுப்பில் எதுவும் விட்டுப்போகாமலிருக்கவும், முழுமை யாக அவற்றை நினைவுபடுத்திப்பார்க்கவும் முயன்றேன். இவ் வாறு சில வாரங்களின் முடிவில் என் படுக்கை அறையிலிருந்த பொருள் களைப் பட்டியலிடுவதிலேயே பல மணி நேரத்தை என்னால் கழிக்க முடிந்தது. இப்படியாக நினைத்துப்பார்க்கப்பார்க்க, எவ்வளவோ மறந்துபோன, அல்லது சரியாகக் கவனிக்கப்படாத அம்சங்கள் எனக் குத் தெரியவந்தன. ஒருவன் வெளியுலகில் முழுமையாக ஒருநாள் வாழ்ந்திருந்தால் போதும்; அவனால் நூறு வருடங்கள்கூட சிறையில் இருக்க முடியும் என்று அப்போதுதான் புரிந்துகொண்டேன். அலுப் புத் தட்டாமல் இருக்கப் போதுமான நினைவுகள் அவன் வசம் இருக் கும். ஒருவிதத்தில் பார்த்தால், இது ஒரு செளகரியம் என்றே சொல்ல லாம்.

மேலும், தூக்கம் என்று ஒன்று இருக்கிறதே! முதலிலெல்லாம் இரவுகளில் நான் சரியாகத் தூங்கவில்லை. பகலிலோ அறவே முடிய வில்லை. போகப்போக இரவுகளில் நன்றாகத் தூங்கினேன். பக லிலும்கூட ஓரளவு தூங்கினேன். இன்னும் சொல்லப்போனால், கடைசி சில மாதங்களாக ஒரு நாளைக்குப் பதினாறு முதல் பதி

ணெட்டு மணி நேரம் தூங்கினேன். மீதி இருந்த ஆறு மணி நேரத்தைக் கழிக்க இருக்கவே இருக்கிறது சாப்பாடு, அன்றாடக் கடன்கள், என் நினைவுகள். இவை தவிர செக்கோஸ்லோவாக்கியாவில் நடந்த சம்பவம் பற்றிய செய்தி ஒன்றும் என் நேரத்தைக் கழிக்க உதவியது.

ஒருநாள், என் ஓலைப் படுக்கைக்கும் கட்டிலின் மரப் படுக்கைக்கும் இடையே ஒரு பழைய செய்தித்தாளின் ஒரு பகுதி ஒட்டப்பட்டிருந்ததைப் பார்த்தேன். பழுப்பேறி இருந்தாலும் அதை ஒருவாறாகப் படிக்க முடிந்தது. மேலே சற்றுக் கிழிந்துபோயிருந்த அந்தத் தாளில் காணப்பட்ட ஒரு கொலை பற்றிய அந்தச் செய்தியிலிருந்து அது செக்கோஸ்லோவாக்கியாவில் நடந்திருக்க வேண்டுமென்று தெரிந்தது. செக்கோஸ்லோவாக்கியாவின் கிராமத்திலிருந்து ஒருவன் பணம் சம்பாதிக்க வேண்டி வெளியூருக்குச் சென்றிருக்கிறான். இருபத்தைந்து வருடங்களுக்குப் பிறகு தன் மனைவி, குழந்தையுடன் செல்வந்தனாகச் சொந்த ஊருக்குத் திரும்பியிருக்கிறான். அந்த ஊரில் தங்கும் விடுதி ஒன்றை அவனுடைய தாயாரும், சகோதரியும் நடத்திவந்திருக்கிறர்கள். அவர்களை வியப்பில் ஆழ்த்த வேண்டுமென்று மனைவியையும் குழந்தையையும் வேறு ஒரு இடத்தில் தங்க வைத்துவிட்டு இவனுடைய தாயார் நடத்தும் விடுதிக்குச் சென்றிருக்கிறான். அந்தத் தாயார் தன் மகனை அடையாளம் கண்டுகொள்ளவில்லை. இவனும், விளையாட்டாக அங்கேயே ஒரு அறை எடுத்துத் தங்கியிருக்கிறான். தன்னிடம் உள்ள பணத்தைக் காண்பித்தும் இருக்கிறான். அப்பணத்தை அபகரிக்க வேண்டுமென்று அவன் தாயாரும் சகோதரியும் அன்றிரவு அவனைச் சுத்தியால் அடித்துக் கொன்றுவிட்டு, அவன் உடலை அங்குள்ள ஆற்றில் தூக்கி எறிந்துவிட்டிருக்கிறார்கள். மறுநாள் காலை அங்கு வந்த அவன் மனைவி என்ன நடந்திருக்கிறது என்று தெரியாமல் அவன் யாரென்று தெரியப்படுத்துகிறாள். தாயார் தூக்கிட்டுக்கொள்கிறாள். சகோதரி கிணற்றில் குதித்துவிடுகிறாள். இந்தச் செய்தியை நான் பல்லாயிரம் தடவை படித்திருப்பேன். ஒரு விதத்தில் பார்த்தால், இது ஒரு நம்ப முடியாத சம்பவம்; மற்றொரு விதத்தில் இயற்கையானது தான். எப்படியானாலும், இது அந்த மனிதனுக்கு வேண்டியதுதான்

என்றே எனக்குத் தோன்றியது. இது மாதிரி விபரீதமாக விளையாடக் கூடாது.

தூக்கம், நினைவுகள், செய்தியைப் படிப்பது, இருளும் ஒளியும் மாறிமாறி வருவதைப் பார்ப்பது—இவ்வாறாக என் நேரம் கழிந்தது. சிறைவாசத்தில் காலப் பரிமாணத்தைப் பற்றிய பிரக்ஞையே இல் லாமல் போய்விடுகிறதென்று நான் எங்கோ படித்திருக்கிறேன். ஆனால் என்னைப் பொறுத்தவரை இதற்கு எந்த அர்த்தமும் இருக்க வில்லை. எந்த அளவுக்கு நாட்கள் நீண்டோ, குறுகியோ இருக்கிற தென்று எனக்கு உண்மையிலேயே புரியவில்லை. வாழ்ந்துபார்க் கையில் மிக அதிகமாக நீடித்திருப்பதுபோல் தோன்றினாலும், எந்த இடத்தில் ஒரு காலப் பொழுது முடிந்து மற்றொரு காலப்பொழுது தொடங்குகிறது என்று தெரியாத நிலையில் அவை ஒன்றோ டொன்று கலந்திருந்தன. காலப்பொழுது என்ற சொல்லுக்கே பொரு ளற்றுப் போய்விட்டிருந்தது. நேற்று, நாளை போன்ற சொற்கள் மட்டுமே எனக்கு அர்த்தமுள்ளவையாகத் தோன்றின.

ஒருநாள் சிறைக் காவலாளி என்னிடம் வந்து, நான் அங்கு வந்து ஐந்து மாதங்களாகிறது என்று சொன்னபோது நான் அதை நம்பி னேன். ஆனால் நான் அதைப் புரிந்துகொள்ளவில்லை. என்னைப் பொறுத்தவரை அந்தச் சிறையில் எனக்காக விடிந்தது ஒரே பொழுது தான் என்றும், நான் செய்தது ஒரே வேலைதான் என்றும் உணர்ந் தேன். அன்று, சிறைக் காவலாளி சென்ற பிறகு என்னுடைய சாப் பாட்டுப் பாத்திரத்தில் என் முகத்தைப் பார்த்துக்கொண்டேன். என் முகம் மிகவும் இறுக்கமாக இருந்ததுபோல் எனக்குத் தோன்றியது. அதைப் பார்த்துச் சிரிக்க முற்பட்டேன். அப்பாத்திரத்தை என் கண் முன்னால் ஆட்டிப்பார்த்தேன். மறுபடியும் சிரித்தேன். ஆனால் இன்னும் அதே கடுமையான, சோகமான முகம். அப்போதுதான் சூரி யன் மறைந்து பகல்பொழுது முடிய ஆரம்பித்திருந்தது. பெயரற்ற இந்த ஒரு காலப்பொழுதைப் பற்றிப் பேச நான் விரும்பவில்லை. சிறைச்சாலையின் ஒவ்வொரு அடுக்கையும் கடந்து வந்த, மௌன மான சவஊர்வலம் போன்ற அந்த அந்தி வேளையின் ஓசைகள். என் சிறைக்கூண்டின் கம்பிச் சன்னல் அருகே சென்று அன்றைய அந்திம

ஒளியில் மறுபடியும் என் முகத்தைப் பார்த்துக்கொண்டேன். அந்த உலோகப் பரப்பில் தெரிந்தது என் முகத்தின் பிம்பம் கடுமையாகவே இன்னும் இருந்தது. இதில் ஆச்சரியம் என்ன? அந்த நேரத்தில் நானும் அப்படித்தானே இருந்தேன். ஆனால், அதே சமயம், ஏன், பல மாதங்களுக்குப் பிறகு, முதல் முறையாக என் குரலின் ஒலியைத் தெளிவாகக் கேட்டேன். இவ்வளவு நாட்களாக நான் தன்னந்தனியாகவே பேசிக்கொண்டிருந்திருக்கிறேன் என்பதையும் உணர்ந்தேன். அப்போதுதான் என் அம்மாவின் அடக்கத்தின்போது அப்பணிப்பெண் சொன்னது நினைவுக்கு வந்தது. ஆம். எதிலிருந்துமே தப்பித்துவிட முடியாது. சிறைக்குள்ளே மாலைப் பொழுது எப்படி இருக்குமென்று யாராலும் கற்பனைசெய்துபார்க்க முடியாது.

# 3

ஒரு கோடைக் காலம் போய் மற்றொரு கோடைக் காலம் விரைவில் வந்துவிட்டிருந்தது. இம்முறை கோடையின் முதல் ஒளிக்கிரணங்களுடன் என் வாழ்விலும் புதிதாக ஏதாவது நிகழும் என்றே கருதினேன். என் வழக்கு பெஞ்சு கோர்ட்டின் கடைசித் தொடருக்கு ஒத்திவைக்கப்பட்டிருந்தது. சாதாரணமாக, இத்தொடர் ஜூன் மாதக் கடைசியில் முடிவடையும். என் வழக்கில் குறுக்கு விசாரணை ஆரம்பித்த அன்று வெளியே சூரிய வெளிச்சம் பளிச்சென்று அடித்துக் கொண்டிருந்தது. இவ்விசாரணை இரண்டு அல்லது மூன்று நாட்களுக்குமேல் நீடிக்காது என்று என்னுடைய வழக்கறிஞர் குறிப்பிட்டிருந்தார். அவர் சொன்னார்: ''அதுவுமில்லாமல், இம்முறை இங்கு வந்துள்ள உங்களுடைய வழக்குக்கு அவ்வளவு முக்கியத்துவம் இல்லை. அதற்கு அடுத்தாற்போலேவே தந்தையைக் கொன்ற ஒருவரின் வழக்கு விசாரணை இருக்கிறது.''

காலை ஏழரை மணிக்கு என்னைக் கொண்டுசெல்ல வந்தார்கள். சிறைச்சாலையின் வண்டி ஒன்று என்னை நீதிமன்றத்திற்குக் கொண்டுசென்றது. இருளின் வாடை சூழ்ந்திருந்த ஒரு சிறிய அறைக்குள் இரு காவலாளிகள் என்னை இட்டுச்சென்றனர். நாங்கள் அமர்ந்திருந்த இடத்திற்குப் பக்கத்தில் ஒரு கதவு; அதன் பின்னாலிருந்து பலவித சத்தங்கள்; ஒருவரையொருவர் கூப்பிடும் குரல்கள்; நாற்காலிகளை இழுத்துப்போடும் சத்தங்கள். நான் வசித்த பகுதியில் ஏதாவது விழா நடக்கும்போது அங்கு நடக்கும் இசை நிகழ்ச்சியின் முடிவில் எல்லோரும் நடனம் ஆடுவதற்காக நாற்காலிகளை அப்புறப்படுத்தி ஒழுங்குசெய்யும்போது இதே போன்ற இரைச்சல் ஏற்படுவதை நினைத்துக்கொண்டேன். நீதிமன்றம் கூடும்வரை காத்திருக்க வேண்டியதுதான் என்று அந்தக் காவலாளிகள் கூறினர்.

அவர்களில் ஒருவன் என்னிடம் சிகரெட் ஒன்றை நீட்ட, நான் வேண்டாமென்று மறுத்தேன். சற்று நேரத்திற்குப் பின் எனக்கு 'பய மாக' இருக்கிறதா என்று கேட்டான். இல்லையென்றேன். ஆனால் ஒரு வழக்கு விசாரணை எப்படி நடக்கிறதென்று பார்க்க வேண்டும் போல் இருந்தது. இதுவரை அப்படிப் பார்க்கச் சந்தர்ப்பம் ஒரு போதும் நேர்ந்ததே இல்லை. ''உண்மைதான்,'' என்றான் இரண்டா மவன். ''ஆனால் அதுவும் அலுப்பில்தான் முடியும்.''

சற்று நேரம் கழித்து அந்த அறையில் சிறு மணியோசை கேட்டது. அப்போதுதான் என் கைவிலங்கை அகற்றினார்கள். கதவைத் திறந்து குற்றவாளிக் கூண்டில் என்னை ஏற்றினார்கள். நீதிமன்ற அறையே வெடித்துவிடும்போல் கூட்டம். திரைச்சீலைகள் இழுத்து விடப்பட் டிருந்தாலும் அங்குமிங்கும் ஊடுருவிப் பாய்ந்தது சூரிய ஒளி; அந்த அறையில் ஏற்கனவே மூச்சுமுட்டும்படி இருந்தது. கண்ணாடிச் சன் னல்கள் மூடியிருந்தன. நான் உட்கார்ந்தேன்; இருபுறமும் காவலாளி கள். அப்போது எனக்கு எதிர் வரிசையில் இருந்த முகங்களைப் பார்த்தேன். எல்லோரும் என்னைப் பார்த்தவாறு இருந்தனர். அவர் கள் ஜுரிகள் என்று தெரிந்துகொண்டேன். ஆனால் அவர்கள் ஒரு வருக்கொருவர் எந்த விதத்தில் வேறுபட்டிருந்தனர் என்று எனக்குத் தெரியவில்லை. என் மனத்தில் தோன்றியது ஒரே ஒரு காட்சிதான்: ஒரு டிராம் வண்டியில் இருக்கைகளின் ஒரு வரிசைக்கு முன் நான் இருக்கிறேன். அங்குள்ள அறிமுகமற்ற பயணிகள், புதிதாக உள்ளே வந்த பயணியைக் கிண்டல்செய்ய அவனிடம் ஏதாவது அகப்படுமா என்று துருவிப் பார்த்துக்கொண்டிருக்கின்றனர். இதுவும் ஒரு அசட்டுத்தனமான உவமைதான் என்று எனக்குத் தெரியும். ஏனென் றால் அவர்கள் தேடிக்கொண்டிருந்தது கிண்டலை அல்ல; குற் றத்தை. இருந்தபோதிலும், இவை இரண்டுக்கும் அவ்வளவு ஒன்றும் வித்தியாசம் இல்லை. எனக்கு என்னவோ அப்படித்தான் தோன்றி யது.

மேலும், மூடிய அறையிலிருந்த அந்தக் கூட்டத்தினால் எனக்குத் தலைசுற்றியது. அறையைச் சுற்றி ஒரு நோட்டம்விட்டும், எனக்குத் தெரிந்த முகங்கள் எதுவும் இருக்கவில்லை. முதலாவதாக, இங்குள்ள

அனைவரும் என்னைப் பார்க்க வந்திருக்கிறார்கள் என்பதை என்னால் நம்ப முடியவில்லை. சாதாரணமாக யாரும் என்னிடம் அவ்வளவு அக்கறைகொண்டிருந்ததில்லை. கூட்டத்தின் இவ்வளவு சலசலப்புக்கும் நான்தான் காரணம் என்பதைப் புரிந்துகொள்வதற்கே நான் சிரமப்படவேண்டியிருந்தது. காவலாளியிடம், ''என்ன கூட்டம்!'' என்றேன். எல்லாம் பத்திரிகையாளர்கள்தான் என்று சொன்ன அவன், ஜுரிகளின் பெஞ்சுக்குக் கீழ்வரிசையில் அமர்ந்திருந்த ஒரு சிறு கூட்டத்தைச் சுட்டிக்காட்டினான். ''அதோ அவர்கள்தான்,'' என்றான். ''யார்?'' என்று கேட்டேன். ''பத்திரிகையாளர்கள்,'' என்றான் மறுபடியும். அவர்களில் ஒருவரை அவனுக்குத் தெரிந்திருந்தது. அவனை அப்போதுதான் பார்த்த அவரும் இருக்கையை விட்டு எழுந்து எங்களை நோக்கி வந்தார். சற்றே வயதான அவர், முகத்தை அப்போது கடுமையாக வைத்துக்கொண்டிருந்தாலும், அன்பானவர் போல் தோன்றினார். காவலாளியின் கையை அன்போடு பற்றிக் குலுக்கினார். அப்போது அங்கிருந்த எல்லோரும் ஒருவரையொருவர் சந்தித்துக்கொள்வதும், கூப்பிட்டுக்கொள்வதும், பேசிக்கொள்வதுமாக இருந்தனர் என்பதைக் கவனித்தேன். பொழுதுபோக்கு மன்றத்தில் சமூகத்தின் ஒரே மட்டத்தில் உள்ள அதன் அங்கத்தினர்கள் ஒருவரையொருவர் சந்திப்பதில் மகிழ்ச்சி கொள்வதைப் போல் இருந்தது அக்காட்சி. அங்கு நுழைந்த ஒரு வேற்று மனிதனைப் போல், அதற்குச் சற்றும் பொருந்தாதவன்போல் நான் இருப்பதாக ஒரு விசித்திரமான எண்ணம் தோன்றியது. இருந்தாலும், அந்தப் பத்திரிகையாளர் புன்னகைத்தவாறு என்னைப் பார்த்துப் பேசினார். எல்லாம் நல்லபடியாக நடக்குமென்று தான் நம்புவதாகச் சொன்னார். நான் நன்றி தெரிவித்தபின் மேலும் தொடர்ந்தார். ''உங்களுக்குத் தெரியுமா, உங்கள் வழக்கைப் பற்றிக் கொஞ்சம் நன்றாகவே எழுதியிருக்கிறோம். கோடைக் காலம் பத்திரிகைகளுக்குக் கொஞ்சம் மந்தமான காலம். உங்கள் வழக்கு ஒன்று இருந்தது. அப்புறம் தந்தையைக் கொன்றவரின் அந்த வழக்கு. இந்த இரண்டையும் விட்டால் வேறு எதுவுமே இல்லை.'' பிறகு, தான் இருந்த திசையில் தன் கூட்டத்தில் இருந்த ஒருவரைச் சுட்டிக்காட்டினார். சிறிய உருவம்; ஆனாலும் நன்றாகக் கொழுத்த

முயலைப் போல் தோற்றமளித்த அவர், பெரிய வட்ட வடிவமான கறுப்புக் கண்ணாடியை அணிந்திருந்தார். பாரிஸ் பத்திரிகை ஒன்றின் விசேஷ நிருபர் அவர் என்றும் தெரிவித்தார். "உங்கள் விவகாரத் துக்காக அவர் வரவில்லை. இருந்தாலும் தந்தையைக் கொலை செய்தவர் வழக்கைப் பற்றி எழுத அவர் இங்கு வந்திருப்பதால், அப் படியே உங்கள் வழக்கைப் பற்றியும் எழுதச் சொல்லிக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்," என்றும் சொன்னார். மறுபடியும் ஒருமுறை நன்றி சொல்ல வாயெடுத்தேன். ஆனால் அசட்டுத்தனமாக இருக்கு மென்று தோன்றியது. தோழமையுடன் கையசைத்து என்னிட மிருந்து விடைபெற்றார். இன்னும் சற்று நேரம் வெறுமனே காத் திருந்தோம்.

கறுப்பு அங்கி அணிந்த என் வழக்கறிஞர் மற்ற வழக்கறிஞர் களுடன் வந்து சேர்ந்தார். பத்திரிகையாளர்கள் இருந்த இடம் நோக் கிப் போய் அவர்களுடன் கைகுலுக்கினார். நீதிமன்றத்தின் மணி ஒலிக்கும்வரை அவர்கள் வேடிக்கையாகப் பேசிச் சிரித்த வண்ணம் இருந்தார்கள். பிறகு, எல்லோரும் விரைந்து சென்று அவரவர் இருக் கையில் அமர்ந்தனர். என் வழக்கறிஞர் என்னை நோக்கி வந்து கைகுலுக்கினார். என்னிடம் கேட்கப்படும் கேள்விகளுக்குச் சுருக்க மாகப் பதில் சொல்ல வேண்டும், நானாக முந்திக்கொண்டு எதுவும் சொல்லக் கூடாது, மற்ற எல்லாவற்றையும் அவர் பார்த்துக் கொள்வார் என்றெல்லாம் ஆலோசனைகள் வழங்கினார்.

எனக்கு இடது பக்கத்தில் ஒரு நாற்காலி பின்னுக்கு இழுக்கப் படும் சத்தம் கேட்டது. ஒல்லியாக, உயரமான ஒருவர் உள்ளே நுழைந்தார். சிவப்பு உடை, மெல்லிய சங்கிலியில் மாட்டியிருந்த ஒற்றைக் கண்ணாடி. உட்காரும்போது தன் அங்கியை அடித்து விட்டுக்கொண்டார். அவர்தான் அரசாங்க வழக்கறிஞர். நீதிமன்ற எழுத்தர் ஒருவர் நீதிமன்றம் துவங்கிவிட்டதை அறிவித்தார். அதே சமயம், நீதிமன்றத்தின் அறையில் இரண்டு மின்விசிறிகள் ரீங்கார மிட ஆரம்பித்தன. கறுப்பு உடையில் இருவர், சிவப்பு உடையில் ஒருவருமாக மூன்று நீதிபதிகள் உள்ளே நுழைந்தனர். அவர்கள் கைக ளில் காகிதக் கட்டுகள். சற்றே உயர்ந்திருந்த மேடையை நோக்கி

அவர்கள் வேகமாகச் சென்றனர். சிவப்பு உடையணிந்திருந்தவர் நடுவில் இருந்த நாற்காலியில் அமர்ந்து, தன் தலையிலிருந்த தொப்பியை மேஜைமேல் வைத்துவிட்டுத் தன் சிறிய வழுக்கைத் தலையை ஒரு கைக்குட்டையால் துடைத்தவாறு அன்றைய நடவடிக்கைகள் தொடங்கிவிட்டதென்று அதிகாரபூர்வமாக அறிவித்தார்.

பத்திரிகையாளர்கள் கைகளில் பேனாவுடன் தயாராக இருந்தார்கள். அவர்கள் எல்லோரும் அலட்சியமாக, கேலிசெய்யும் பாவனையுடன் காணப்பட்டார்கள். ஆனால் அவர்களில் ஒருவன் மட்டும் பேனாவைத் தனக்கு முன்னால் மேஜைமீது வைத்துவிட்டு என்னையே பார்த்த வண்ணம் இருந்தான். அவர்களிலேயே அவன்தான் மிகவும் இளைஞனாக இருக்க வேண்டும். சாம்பல் நிறக் கோட்டு, முழுக் கால்சட்டை, நீல நிற டை அணிந்திருந்தான். சற்றுக் கோணலான முகம்; அவனது தெளிவான நீல நிறக் கண்கள், என்னவென்று திட்டவட்டமாகச் சொல்ல முடியாத ஒருவிதப் பார்வையுடன் என்னையே கூர்ந்து ஆராய்ந்துகொண்டிருந்தன. நான் என்னாலேயே பார்க்கப்படுவது போன்ற ஒரு விசித்திரமான உணர்வு ஏற்பட்டது. இதனாலோ, அல்லது நீதிமன்றத்தின் நடைமுறை எனக்குப் பரிச்சயம் இல்லாததாலோ என்னவோ இதற்குப் பிறகு நடந்தது எதையுமே என்னால் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை: ஜூரிகளைச் சீட்டுக்குலுக்கிப் போட்டுத் தேர்ந்தெடுத்தது; என் வழக்கறிஞர், அரசாங்க வழக்கறிஞர், ஜூரிகள் ஆகியோரிடம் தலைமை வகித்த நீதிபதி கேட்ட கேள்விகள் (கேள்வி கேட்கப்படும்போது ஜூரிகள் அனைவரும் தலையை ஒரே மாதிரியாக நீதிபதி பக்கம் திருப்பினர்): குற்றப்பத்திரிகையை மடமடவென்று படித்தது; அதில் என்னால் புரிந்துகொள்ள முடிந்த இடங்கள்; ஆட்களின் பெயர்கள்; அதன்பின் என் வழக்கறிஞரிடம் கேட்கப்பட்ட வேறு புதிய கேள்விகள்.

இப்போது தலைமை வகித்த நீதிபதி, சாட்சிகளை அழைக்கப் போவதாக அறிவித்தார். நீதிமன்ற எழுத்தர் படித்த பெயர்கள் என் கவனத்தை ஈர்த்தன. இதுவரை தெளிவற்றுத் தெரிந்த கூட்டத்தின் நடுவிலிருந்து முதியோர் இல்லத் தலைவர், முதியோர் இல்லக் காவல்

காரன், அங்கிருந்த கிழவர் தோமா பெரே, ரேமோன், மாசோன், சலாமானோ, மாரி என்று ஒருவர்பின் ஒருவராக எழுந்து, பக்க வாட்டில் நகர்ந்து ஒரு கதவு வழியாகச் சென்று மறைவதைப் பார்த்தேன். மாரி என்னைப் பார்த்துக் கவலையுடன் கையசைத்துச் சைகை செய்தாள். இந்தப் பெயர் வரிசையில் கடைசியாக செலஸ்த்தின் பெயர் படிக்கப்படும்வரை நான் யாரையுமே கவனிக்காமல் இருந்தது எனக்கே வியப்பாக இருந்தது. அவன் எழுந்தபோது அவனருகில் அந்த உணவு விடுதியில் நான் கண்ட அந்த அழகிய இளம்பெண் இருப்பதைப் பார்த்தேன். ஆண்கள் அணியும் கோட்டு ஒன்றை அணிந்திருந்த அவள், கச்சிதமாக, தீர்மானமான தோரணையில் அமர்ந்திருந்தாள். என்னை மிகவும் உன்னிப்பாகப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஏன் அப்படிப் பார்த்துக்கொண்டிருந்தாள் என்று யோசிக்க எனக்கு அவகாசம் இல்லாத நிலையில் நீதிபதி பேச ஆரம்பித்தார். வழக்கு சம்பந்தமான குறுக்கு விசாரணை இனிமேல்தான் ஆரம்பிக்கப்போகிறது என்றும், கூட்டத்தை அமைதியாக இருக்கும்படி மீண்டும்மீண்டும் சொல்லிக்கொண்டிருக்க முடியாதென்றும் சொன்னார். அவரைப் பொறுத்தவரை, புறநிலை நோக்கோடு அவர் கருத விரும்பும் இந்த வழக்கின் விசாரணைகளைப் பாரபட்சமின்றி நடத்திச்செல்லவே இங்கு இருந்தார். ஜுரிகளின் முடிவு நியாய உணர்வுடன் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும். பார்வையாளர்களிடையே எந்த ஒரு சிறு குழப்பம் ஏற்பட்டாலும் அவர்கள் வெளியேற்றப்படுவார்கள்.

வெப்பம் அதிகரித்துக்கொண்டே இருந்தது. நீதிமன்றத்திலிருந்த பார்வையாளர்கள் செய்தித்தாள்களால் விசிறிக்கொண்டிருந்தனர். காகிதத்தின் சரசரவென்ற ஒலி இடைவிடாமல் கேட்டுக்கொண்டிருந்தது. தலைமை வகித்த நீதிபதி, எழுத்தரைப் பார்த்து சைகை செய்ய, அவர் மூன்று ஓலை விசிறிகளைக் கொண்டுவந்து கொடுத்தார். மூன்று நீதிபதிகளும் அவற்றை உடனடியாக உபயோகிக்க ஆரம்பித்தனர்.

என்னிடம் விசாரணை உடனே ஆரம்பித்தது. தலைமை நீதிபதி நிதானமாக என்னிடம் கேள்விகள் கேட்டார். அவருடைய தோர

ணையில் ஒரு நட்புறவின் சாயலும் இருந்ததாகத் தோன்றிற்று. மறுபடியும், என் பெயர், வயது, வேலை போன்ற வழக்கமான விவரங்கள் கேட்கப்பட்டன. இது எனக்கு ஒருவித எரிச்சலைத் தந்தாலும் அதுதான் முறை என்று கருதினேன். ஏனென்றால் இது போன்ற விஷயத்தில் ஆள் மாறாட்டம் நடந்துவிடக் கூடாது. பிறகு, தலைமை நீதிபதி நான் என்ன செய்துவிட்டிருந்தேன் என்று விவரிக்க ஆரம்பித்தார்; மூன்று வாக்கியங்களுக்கு ஒருமுறை என்னைப் பார்த்து, "அப்படித்தானே," என்றும் கேட்டுக்கொண்டேயிருந்தார். என் வழக்கறிஞர் சொல்லியிருந்தபடி, ஒவ்வொரு தடவையும் "ஆமாம், கனம் நீதிபதி அவர்களே," என்றேன். நீதிபதி ஒவ்வொரு சிறு விவரத்தையும் விளக்கமாகச் சொல்லிக்கொண்டுவந்ததால் நீண்டு கொண்டே போயிற்று. அவர் சொல்லச்சொல்ல, பத்திரிகையாளர்கள் எழுதிக்கொண்டே இருந்தார்கள். அவர்களிடையே அந்த இளம் பத்திரிகையாளர், இயந்திரகதியில் இயங்கும் அந்த இளம் பெண் இருவரின் பார்வை என்மீது படர்ந்துகொண்டிருப்பதை உணர்ந்தேன். அந்த டிராம் வண்டியின் பெஞ்சு வரிசை இன்னும் தலைமை நீதிபதி பக்கம் திரும்பியவாறே இருந்தது. அவரோ ஒருமுறை இருமிவிட்டு, காகிதக் கட்டை ஒரு முறை புரட்டிவிட்டு, விசிறிக்கொண்டே என் பக்கம் திரும்பினார்.

வழக்கிற்குச் சம்பந்தமில்லாததுபோல் தோன்றக்கூடிய, ஆனாலும் நெருங்கிய தொடர்புள்ள சில கேள்விகளை என்னிடம் கேட்கப்போவதாக அவர் அறிவித்தார். அம்மாவைப் பற்றிக் கேட்கப்போகிறார் என்று புரிந்துகொண்டேன். அது எனக்கு எவ்வளவு அலுப்பைத் தந்ததென்பதையும் அதே சமயத்தில் உணர்ந்தேன். நான் ஏன் அம்மாவை முதியோர் இல்லத்தில் விட்டிருந்தேன் என்று கேட்டார். அம்மாவை என்னிடம் வைத்துக்கொண்டு தக்க முறையில் காப்பாற்றப் போதிய பண வசதி இல்லாததால் என்றேன். அது என்னைப் பாதித்ததா என்று அவர் கேட்க, நானோ என் அம்மாவோ ஒருவரிடமிருந்து ஒருவர் எதையுமே எதிர்பார்க்கவில்லையென்றும், மற்றவர்களிடமிருந்தும் எதையுமே எதிர்நோக்கவில்லையென்றும், நாங்கள் இருவருமே எங்களுடைய புதிய வாழ்க்

கைக்குப் பழக்கப்பட்டுவிட்டிருந்தோம் என்றும் பதிலளித்தேன். இதற்குமேல் இதுபற்றி எதுவும் கேட்க விரும்பவில்லை என்று சொன்னார். பிறகு, அரசாங்க வழக்கறிஞர் என்னிடம் ஏதாவது கேட்க விரும்புகிறாரா என்றும் கேட்டார்.

அரசாங்க வழக்கறிஞர் எனக்குப் பக்கவாட்டில் திரும்பியபடி, என்னைப் பார்க்காமலேயே, கனம் நீதிபதி அவர்களின் அனுமதி யுடன் ஒரு கேள்வி கேட்க விரும்பினார். அந்த அராபியனைக் கொல்ல வேண்டும் என்ற எண்ணத்துடன்தான் நான் மீண்டும் அந்த ஓடைப் பக்கம் சென்றேனா? ''இல்லை,'' என்றேன். ''அப்படி யானால் துப்பாக்கியை இவர் ஏன் வைத்திருக்க வேண்டும்? குறிப் பாக அதே இடத்துக்கு ஏன் வர வேண்டும்?'' அது தற்செயலாக நடந்த ஒரு நிகழ்ச்சி என்றேன். ஒரு மோசமான தோரணையில் ''இப் போதைக்கு அவ்வளவுதான்,'' என்று அறிவித்தார். அதற்குப் பிறகு எல்லாமே சற்றுக் குழப்பமாக இருந்தது. குறைந்தபட்சம் என்னைப் பொறுத்தவரை. சில ஆலோசனைகளுக்குப் பிறகு, நீதிமன்றம் இத் துடன் கலைகிறது என்றும் மீண்டும் பிற்பகல் சாட்சி விசாரணைக் காகக் கூடும் என்றும் தலைமை நீதிபதி அறிவித்தார்.

எனக்கு எதுவுமே யோசிக்க நேரம் இருக்கவில்லை. என்னைச் சிறைச்சாலை வண்டியில் ஏற்றிச் சிறைச்சாலைக்கு அழைத்துச் சென் றனர். அங்கு நான் சாப்பிட்டேன். நான் சோர்வுற்றிருக்கிறேன் என்பதை உணர்வதற்கு முன்பே, வெகு சீக்கிரமே என்னைக் கொண்டுசெல்ல ஆட்கள் வந்துவிட்டனர். பழையபடி எல்லாம் மீண்டும் தொடங்கியது. அதே இடம், அதே முகங்கள். ஒரே ஒரு வித்தியாசம், வெயில் இன்னும் அதிகமாகி இருந்தது. மாயாஜால வித்தைகளில் நடப்பதுபோல ஜூரிகள், என் வழக்கறிஞர், அரசாங்க வழக்கறிஞர், சில பத்திரிகையாளர்கள்—அனைவரும் ஆளுக்கொரு ஓலை விசிறி வைத்துக்கொண்டிருந்தனர். அந்த இளம் பத்திரிகை யாளனும், அந்தக் குள்ளமான பெண்ணும் இன்னும் அங்கேயே இருந்தார்கள். ஆனால் அவர்கள் விசிறிக்கொண்டிருக்கவில்லை; பேசாமல் என்னையே பார்த்துக்கொண்டிருந்தனர்.

என் முகத்தில் வழிந்த வியர்வையைத் துடைத்துவிட்டுக்கொண்டேன். அம்மா இருந்த இல்லத்தின் தலைவரைக் கூப்பிட்ட போதுதான், நான் இருந்த இடம், என் நிலைமை நினைவுக்கு வந்தது. என்னைப் பற்றி அம்மா ஏதாவது முறையிட்டிருந்தாரா என்று அவரிடம் கேட்கப்பட்டதற்கு, ஆமாம், என்றும், அப்படிப் பார்த்தால் அந்த இல்லத்தில் இருந்த எல்லோருமே அவர்களுடைய சுற்றத்தாரைப் பற்றி ஏதாவது குறைசொல்லிக்கொண்டுதான் இருந்தார்கள் என்றும் சொன்னார். தலைமை நீதிபதி அவரிடம், இல்லத்தில் சேர்க்கப்பட்டது குறித்து என் அம்மா குறை ஏதும் சொல்லியிருக்கிறாரா என்று குறிப்பாகக் கேட்டார். மறுபடியும் ஆமாம் என்ற அவர் இம்முறை அதற்குமேல் எதுவும் சொல்லவில்லை. மற்றொரு கேள்விக்குப் பதில் அளிக்கையில் என் அம்மாவின் இறுதிச் சடங்கு நடந்த அன்று நான் அமைதியாக இருந்தது அவருக்கு மிகுந்த வியப்பை அளித்தது என்றார். அமைதியாக என்று எந்த அர்த்தத்தில் சொன்னார் என்று கேட்கப்பட்டது. இல்லத் தலைவர் குனிந்தவாறு தன் காலணியின் நுனியையே பார்த்தவாறிருந்தார். நான் அம்மாவைப் பார்க்க விரும்பவில்லையென்றும், நான் ஒரு தடவைகூட அழவில்லை என்றும், அம்மாவை அடக்கம் செய்தவுடன் ஒரு நிமிடம்கூடக் கல்லறை அருகில் தயங்கி நிற்காமல் உடனே சென்றுவிட்டேன் என்றும் தெரிவித்தார். மேலும், ஒரு விஷயம் அவரை வியப்பில் ஆழ்த்தியிருந்தது: அம்மாவின் வயது எனக்குத் தெரிந்திருக்கவில்லை என்று இடுகாட்டுப் பணியாள் ஒருவன் அவரிடம் சொல்லியிருந்தான். தொடர்ந்து சற்றுநேரம் அங்கு மௌனம் நிலவியது. இல்லத் தலைவர் குறிப்பிட்டதெல்லாம் என்னைப் பற்றிதானா என்று தலைமை நீதிபதி கேட்டார். அவர் ஏன் அப்படிக் கேட்டார் என்று இவருக்குப் புரியாததால், தலைமை நீதிபதி "சட்டப்படி நான் அப்படித்தான் கேட்க வேண்டும்," என்றார். பிறகு அவர் அரசாங்க வழக்கறிஞரைப் பார்த்து இந்த சாட்சிக்காரரிடம் ஏதாவது கேட்க விரும்புகிறாரா என்று கேட்டார். அதற்கு அவர், "இல்லை. இல்லை. இது போதும்," என்றார். என்னைப் பார்த்தவாறு அவர் அப்படிச் சொன்னபோது தென்பட்ட பூரிப்பு, வெற்றிப் பெருமிதம் ஆகியவற்றைப் பார்க்கும் போது, பல வருடங்களுக்குப் பிறகு, முதல்முறையாக, அழ

வேண்டும் போன்ற அசட்டுத்தனமான ஒரு ஆசை என்னுள் தோன்றியது. ஏனென்றால் இங்குள்ள மனிதர்கள் என்னை எவ்வளவு தூரம் வெறுத்தார்கள் என்பதை உணர்ந்தேன்.

ஜூரிகள், என் வழக்கறிஞர் ஆகியோர் ஏதாவது விசாரிக்க விரும்புகிறார்களா என்று கேட்ட பிறகு தலைமை நீதிபதி முதியோர் இல்லத்தில் காவல்காரனை அழைத்தார். மற்றவர்களைப் போலவே அவனுக்கும் எல்லா விதச் சடங்குகளும் நடந்து முடிந்தன. சாட்சிக் கூண்டுக்கு வரும்போது அவன் என்னைப் பார்த்துவிட்டு, பார் வையை வேறுபுறம் திருப்பிக்கொண்டான். அவனிடம் கேட்கப் பட்ட கேள்விகளுக்குப் பதிலளித்தான். அம்மாவைப் பார்க்க நான் விரும்பவில்லை. நான் புகைபிடித்துக்கொண்டிருந்தேன். தூங்கி னேன், காப்பி குடித்தேன் என்றெல்லாம் தெரிவித்தான். அவன் அப் படிச் சொன்னபோது அந்த அறை முழுவதிலுமே ஒருவிதக் கிளர்ச்சி ஏற்பட்டதை உணர்ந்தேன். முதல்முறையாக நான் ஒரு குற்றவாளி என்பதைப் புரிந்துகொண்டேன். இல்லக் காவல்காரனை மறுபடியும் நான் காப்பி குடித்தது, புகைபிடித்தது முதலியவற்றைப் பற்றிச் சொல் லச் செய்தார்கள். அரசாங்க வழக்கறிஞர், கண்களில் ஏளனம் மின்ன, என்னைப் பார்த்தார். அப்போது என் வழக்கறிஞர் அந்தக் காவல் காரனைப் பார்த்து அவனும் என்னுடன் புகைபிடித்தான் அல்லவா என்று கேட்டார். அப்போது அரசாங்க வழக்கறிஞர் எழுந்து இக்கேள் வியை மிக வன்மையாக ஆட்சேபித்தார். "இங்கு யார்மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது? எப்படியும் உண்மையில் குற்றம்சாட்டப் பட்டவருக்கு எதிராகத் தக்க ஆதாரங்கள் இருக்க, சாட்சிக்காரரைக் கேவலப்படுத்தி அவரது சாட்சியத்தைப் பலவீனப்படுத்தும் இந்த உத்தி எதில் சேர்ந்தது?" என்றார். இருப்பினும், தலைமை நீதிபதி இல் லக் காவல்காரனை இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லுமாறு பணித் தார். அந்தக் கிழவன் சற்றே சங்கடப்பட்டவனாக, "ஆமாம். நான் செய்தது தவறு என்று எனக்குத் தெரியும். ஆனாலும் திரு. மெர்சோ சிகரெட் கொடுத்தபோது மறுக்க எனக்கு தைரியம் இருக்கவில்லை," என்றான். கடைசியில் இது விஷயமாகச் சொல்வதற்கு எனக்கு எது வும் இல்லையா என்று கேட்டனர். "ஒன்றுமில்லை, இந்தச் சாட்சிக்

காரர் சொல்வது உண்மை என்பதைத் தவிர. நான் அவருக்கு சிகரெட் கொடுத்தேன் என்பது உண்மைதான்,'' என்றேன். அந்தக் காவல் காரன் வியப்புடனும் நன்றி உணர்வுடனும் என்னைப் பார்த்தான். சற்றுத் தயங்கி, பிறகு, எனக்கு அவன்தான் காப்பி கொடுத்தான் என்று சொன்னான். என் வழக்கறிஞர் வெற்றி கோஷமிட்டார். ஜுரிகள் இதை நன்றாகக் கவனிக்க வேண்டுமென்றார். அரசாங்க வழக் கறிஞர், எல்லோர் தலைகளுக்கும் மேலாக மிதந்து வந்த குரலில் உரக்கப் பேசினார்: ''ஆமாம். மதிப்பிற்குரிய ஜுரிகள் நன்றாகவே கவனிப்பார்கள். மூன்றாம் மனிதன் வந்திருப்பவரிடம் காப்பி வேண் டுமா என்றுதான் கேட்பான். ஆனால் தன்னைப் பெற்றெடுத்தவளின் சடலத்திற்கு முன் வேண்டாமென்று மறுப்பதுதான் ஒரு மகனின் கடமை என்றும் முடிவுசெய்வார்கள்.'' அந்தக் காவல்காரன் தன்னுடைய இருக்கைக்குச் சென்றான்.

தோமா பெரேயின் முறை வந்தபோது நீதிமன்ற எழுத்தர் அவ ரைக் கைப் பிடித்து அழைத்துவர வேண்டியிருந்தது. அவருக்கு என் தாயாரை நன்றாகவே தெரியும் என்றும், சவ அடக்கத்தன்று ஒரே ஒருமுறைதான் என்னைப் பார்த்திருக்கிறார் என்றும் தெரியப்படுத் தினார். அன்று நான் என்ன செய்தேன் என்று கேட்கப்பட்டபோது அவர் சொன்னார் ''இங்கே பாருங்கள், நானே மிகவும் மன முடைந்துபோயிருந்தேன். ஆக, நான் எதையுமே கவனிக்கவில்லை. என் மனநிலையே என்னைக் கவனிக்க விடாமல் செய்தது. ஏனென் றால், என்னைப் பொறுத்தவரை எனக்கு அது ஒரு பலத்த இடி. நான் மூர்ச்சையாகிக்கூட விழுந்தேன். ஆக, நான் திரு. மெர்சோவைச் சரி யாகப் பார்க்கக்கூட இல்லை.'' நான் அழுததையாவது அவர் பார்த் தாரா என்று அரசாங்க வழக்கறிஞர் கேட்டார். இல்லையென்று பெரே பதிலளித்தார். இம்முறை அரசாங்க வழக்கறிஞர் ''ஜுரிகள் நன்றாகக் கவனிப்பார்கள்,'' என்று சொன்னார். என் வழக்கறிஞர் கோபமடைந்தார். அநாவசியம் என்று எனக்குத் தோன்றிய உரத்த குரலில் பெரேயைப் பார்த்து, நான் அழவில்லை என்பதை அவர் பார்த்தாரா, என்று கேட்டார். ''இல்லை,'' என்றார் பெரே. பார்வை யாளர்கள் சிரித்தார்கள். என் வழக்கறிஞர் தன் சட்டையின் கைகளை மடித்தவாறு சற்றுக் கடுமையாகக் கூறினார். ''இப்படித்தான்

இவ்விசாரணை நடக்கிறது. எல்லாமே உண்மைதான்; எதுவுமே உண்மை அல்லதான்!" அரசாங்க வழக்கறிஞரின் முகத்தில் ஈயாட வில்லை. தனது காகிதக் கட்டின்மேல் பென்சிலால் ஏதோ கிறுக்கிக் கொண்டிருந்தார்.

ஐந்து நிமிட இடைவேளையின்போது என் வழக்கறிஞர் என் னிடம் வந்து எல்லாம் நல்லபடியாக நடந்துகொண்டிருக்கிறது என்றார். அதற்குப் பிறகு செலஸ்த்தின் பெயர் பிரதிவாதி சார்பில் அறிவிக்கப்பட்டது. பிரதிவாதி நான்தான். செலஸ்த் பனாமா தொப்பி ஒன்றைக் கைகளுக்கிடையில் உருட்டியவாறும் அவ்வப் போது என்னைப் பார்த்தவாறும் இருந்தான். முன்பெல்லாம் ஞாயிற்றுக்கிழமைகளில் குதிரைப் பந்தயத்திற்குப் போவதற்காக என்னுடன் வரும்போது அணிந்துகொள்ளும் புதிய 'சூட்'டையே இப்போதும் அணிந்திருந்தான். இறுக்கமான கழுத்துப்பட்டையை அவன் அணிந்திருக்கவில்லை என்று நினைக்கிறேன். ஏனென்றால் ஒரு பித்தளைப் பொத்தான் மட்டுமே அவன் சட்டையின் இருபுறங் களையும் சீராகப் பிணைத்திருந்தது. நான் அவன் உணவு விடுதியின் வாடிக்கையாளனா என்று கேட்கப்பட்டது. அதற்கு அவன் "ஆமாம். அது மட்டுமல்ல, அவர் என் நண்பரும்கூட," என்றான். செலஸ்த் என்னைப் பற்றி என்ன நினைத்தான்? நான் ஒரு மனிதன் என்று பதி லளித்தான். என்ன அர்த்தத்தில் அப்படிச் சொன்னான்? அதற்கு என்ன அர்த்தம் என்று எல்லோருக்குமே தெரியும் என்று அவன் பதில் அளித் தான். நான் யாருடனும் பழகாமல் தனியனாக இருந்தேனா என்று அவனிடம் கேட்கப்பட்டது. அப்படியொன்றுமில்லை, அநாவசிய மாக நான் பேச மாட்டேன் என்றுதான் அவனுக்குத் தெரியும் என் றான். சாப்பாட்டிற்கான மாதத் தொகையை நான் ஒழுங்காகச் செலுத்தி வந்தேனா என்று அரசாங்க வழக்கறிஞர் அவனிடம் கேட் டார். செலஸ்த் சிரித்தான். "அது எங்களுக்குள் இருந்த விவகாரம்," என்று சொன்னான். நான் செய்த குற்றத்தைப் பற்றி அவன் என்ன நினைக்கிறான் என்று அவனிடம் கேட்கப்பட்டது. அவன் சாட்சிக் கூண்டின் குறுக்குச் சட்டத்தின் மீது கையை ஊன்றியிருந்தான். ஏதோ சொல்வதற்குத் தயாராக இருப்பவன்போல் காணப்பட்டான். "என்

னைக் கேட்டால் இது அவருக்கு ஏற்பட்ட ஒரு அசம்பாவிதம். இப்படி ஒரு அசம்பாவிதத்துக்கு இலக்காவது என்றால் என்ன என்று எல்லோருக்கும் தெரியும். அதிலிருந்து எப்படியும் தப்ப முடியாது. வேறு என்ன சொல்ல? என்னைப் பொறுத்தவரை இது ஒரு அசம்பா விதமே.'' அவன் தொடர்ந்து பேச முனைந்தான். ஆனால், தலைமை நீதிபதி அது போதும், மிக்க நன்றி என்று கூறி அவனை நிறுத்தினார். சற்றே தடைசெய்யப்பட்ட நிலையில் செலஸ்த் நிறுத்தினான். ஆனால் உடனேயே தான் மீண்டும் பேச விரும்புவதாக அறிவித்தான். சுருக்கமாக முடித்துக்கொள்ளுமாறு அவனுக்குத் தெரிவிக்கப்பட் டது. அவன் மறுபடியும் இது ஒரு அசம்பாவிதமே என்று கூறினான். தலைமை நீதிபதி அவனிடம் ''அது சரி. ஒப்புக்கொள்கிறோம். ஆனா லும் இது போன்ற அசம்பாவிதங்களை ஆராய்ந்து தீர்ப்பளிக்கத்தான் நாங்கள் இங்கே இருக்கிறோம். உங்களுக்கு மிக்க நன்றி,'' என்றார். அவனுடைய வாதங்களும் அவனுடைய நல்லெண்ணமும் முடி வுற்ற நிலையில் செலஸ்த் என் பக்கம் திரும்பினான். அவன் கண்கள் பனித்து உதடுகள் துடிப்பதாக எனக்குத் தோன்றியது. இனிமேலும் தன்னால் என்ன செய்ய முடியும் என்று கேட்பதுபோல் தோன்றியது. நான் ஒன்றும் சொல்லாமல் அசையாமல் இருந்தேன். ஆனாலும், இப் போதுதான் என் வாழ்க்கையில் முதல்முறையாக ஒரு மனிதனைக் கட்டித் தழுவி முத்தமிட வேண்டும்போல் தோன்றியது. தலைமை நீதிபதி மறுபடியும் அவனிடம் அவன் போகலாம் என்று அறிவித்தார். செலஸ்த் அங்கிருந்து நகர்ந்து தன் இருக்கையில் அமர்ந்தான். அதன் பிறகு, விசாரணை முடியும்வரை அங்கேயே இருந்தான். சற்றே முன் புறம் சாய்ந்து முழங்கைகளை ஊன்றி, கைகளிடையே பனாமாத் தொப்பியை ஏந்தி, அவ்விசாரணையில் சொல்லப்பட்ட அனைத்தை யும் கேட்டவாறு இருந்தான். மாரி உள்ளே வந்தாள். தொப்பி அணிந் திருந்த அவள் இன்னும் அழகாகவே இருந்தாள். ஆனாலும், அவள் கூந்தலைத் தொங்க விடுவதுதான் எனக்குப் பிடிக்கும். நான் இருந்த இடத்திலிருந்து அவளது சிறிய மார்பகங்களை ஊகித்துப் பார்க்க முடிந்தது. அவளுடைய கீழுதடு இன்னும் சற்றே வீங்கியிருப்பதை யும் கவனித்தேன். அவள் சற்றுப் பதட்டம் அடைந்தவளாகக் காணப்பட்டாள். எடுத்த எடுப்பிலேயே எவ்வளவு நாட்களாக என்

னைத் தெரியும் என்று அவளிடம் கேட்டனர். அப்போது எங்கள் அலுவலகத்தில் அவள் வேலைசெய்துகொண்டிருந்த நாட்களைப் பற்றிக் குறிப்பிட்டாள். எங்கள் இருவரிடைய எந்த மாதிரியான உறவு இருந்துவந்தது என்று தலைமை நீதிபதி கேட்டார். அவள் என் தோழி என்று தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டாள். மற்றொரு கேள்விக்குப் பதில் அளிக்கையில் என்னை மணந்துகொள்ளப்போவ தாக இருந்தது உண்மைதான் என்றும் அவள் சொன்னாள். ஒரு கோப்பைப் புரட்டியவாறே அரசாங்க வழக்கறிஞர், அவள் என்னிடம் முதல் முறையாக உடலுறவு கொண்டது எந்தத் தேதியில் என்று கேட்டார். அவள் தேதியைக் குறிப்பிட்டாள். அவர் அலட்சியமான தோரணையில், அது என் அம்மாவை அடக்கம் செய்ததற்கு மறுநாள் என்று தனக்குத் தோன்றுவதாகக் கூறினார். பிறகு ஏளனம் தொனிக்கும் குரலில், தர்மசங்கடமான இந்த அம்சத்தை மேலும் வலியுறுத்த அவர் விரும்பவில்லை என்றும், மாரியின் நியாய உணர்வை அவரால் புரிந்துகொள்ள முடிந்த தென்றும், இருப்பினும் (இப்போது வார்த்தைகள் பலமாகவே தாக்கின) இது போன்ற நாசூக்கான தனிநபர் விஷயங்களுக்கு அப்பாற்பட்டுத் தன் கடமையைச் செய்ய வேண்டிய நிலையில் அவர் இருந்தார் என்றும் அவர் சொன்னார். ஆகவே அவர் மாரியிடம் நாங்கள் சந்தித்த அந்தச் சம்பவ தினத்தை மேலும் விவரிக்கும்படி கேட்டுக்கொண்டார். மாரிக்கு அதைப் பற்றிப் பேச விருப்பமில்லை என்றாலும், நாங்கள் நீச்சல் குளத்திற்குச் சென்றது, சினிமாவுக்குப் போனது, பிறகு ஒன்றாக என் வீட்டுக்கு வந்தது ஆகியவற்றை அரசாங்க வழக்கறிஞரின் வற்புறுத்தலின் பேரில் குறிப்பிட்டாள். ஏற்கனவே விசாரணை நீதிபதியிடம் மாரி தந்த வாக்குமூலத்தின்படி, அந்தத் தேதியில் இருந்த சினிமா நிகழ்ச்சிகளைப் பற்றி அவர் குறிப்பெடுத்து வைத்திருப்பதாக அரசாங்க வழக்கறிஞர் நீதிபதியிடம் தெரிவித்தார். அந்தத் தேதியில் எந்தத் திரைப்படம் திரையிடப்பட்டிருந்தது என்று மாரியே சொல்வாள் என்றும் அறிவித்தார். சுருதி குறைந்த குரலில் மாரி அது பெர்னான்டெல் என்ற சிரிப்பு நடிகர் நடித்த படம் என்று குறிப்பிட்டாள். இவ்வாறு அவள் சொல்லி முடித்தபின் நீதிமன்றத்தில் முழுமையான ஒரு

மௌனம் நிலவியது. அப்போது அரசாங்க வழக்கறிஞர் எழுந்து, பொறுப்பான தோரணையோடு, அதே சமயம் உணர்ச்சி மிக்கதாக எனக்குத் தோன்றிய குரலில், ஆள்காட்டி விரலை என் பக்கம் நீட்டி யவாறு, மெதுவாக ஏற்ற இறக்கங்களோடு பேசினார்: "மதிப்பிற் குரிய ஜூரிகளே, தன் தாயார் இறந்த மறுநாள் இந்த மனிதர் நீச்சல் குளத்தில் நீராடச் சென்றிருக்கிறார். முறைகேடான உடலுறவு கொண்டிருக்கிறார். சிரிப்புப் படம் ஒன்றைப் பார்த்துக் களிப்புறச் சென்றிருக்கிறார். இதற்குமேல் நான் உங்களிடம் சொல்வதற்கு ஏதும் இல்லை." தொடர்ந்து அங்கு நிலவிய மௌனத்தினிடையே அவர் அமர்ந்தார். ஆனால் திடீரென்று மாரி வெடித்து அழுதாள். அவள் சொல்ல வந்தது அதுவல்ல என்றும், இன்னும் வேறு சில விஷ யங்கள் இருந்தனவென்றும், அவள் நினைத்ததற்கு மாறானவற்றைச் சொல்லும்படி அவள் வற்புறுத்தப்பட்டாள் என்றும், அவளுக்கு என்னை நன்றாகத் தெரியுமென்றும், அவளுக்கு நான் எந்த விதக் கெடுதலையும் செய்திருக்கவில்லை என்றும் அழுதவாறே சொல்லிக் கொண்டிருந்தாள். ஆனால் தலைமை நீதிபதியின் சைகையைத் தொடர்ந்து, நீதிமன்ற எழுத்தர் அவளை அழைத்துச்செல்ல, விசாரணை தொடர்ந்தது.

அதற்குப் பிறகு மாசோன், நான் நியாயமானவன், 'மேலும் சொல்லப்போனால் கண்ணியமானவன்கூட' என்று சொன்னதை யாராவது கேட்டார்களா என்பது தெரியாது. பிறகு, சலாமானோ வின் நாயிடம் எவ்வளவு அன்பாக இருந்தேன் என்று சலாமானோ நினைவுகூர்ந்ததையும் யாராவது கேட்டார்களா என்று சொல்ல முடி யாது. என் தாயாரைப் பற்றியும், என்னைப் பற்றியும் கேட்கப்பட்ட கேள்விகளுக்குப் பதிலளிக்கையில் எனக்கும் என் அம்மாவுக்கும் ஒருவரோடொருவர் பேசிக்கொள்ளப் பொதுவான விஷயம் எது வும் இருக்கவில்லையென்றும், அதனால்தான் நான் அவளை முதி யோர் இல்லத்தில் விட்டிருந்தேன் என்றும் சொன்னார். "இதை நாம் புரிந்துகொள்ள வேண்டும்," என்றார் சலாமானோ, "ஆம், இதை நாம் புரிந்துகொள்ள வேண்டும்." ஆனால் இதை யாருமே புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை: அவரை அழைத்துச் சென்றனர்.

பிறகு, கடைசி சாட்சியான ரேமோனின் முறை வந்தது. அவன் என்னைப் பார்த்து ஒரு சிறு சைகை செய்துவிட்டு, உடனேயே, நான் நிரபராதி என்றான். உடனே தலைமை நீதிபதி, அவனிடம் கேட்கப் பட்டது அபிப்பிராயங்கள் அல்ல, விவரங்கள்தான் என்றார். கேள்வி களுக்குப் பதில் சொல்லத் தயாராக இருக்கும்படி சொன்னார். கொலைசெய்யப்பட்ட ஆளுக்கும் ரேமோனுக்கும் எந்த விதமான உறவு இருந்து வந்தது என்று தெளிவாகச் சொல்லும்படி கேட்டார். இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு, கொலையுண்ட வனின் சகோதரியை ரேமோன் அடித்த நாள் முதலாகவே அவனுக்கு ரேமோன் மீதுதான் வெறுப்பு என்றான். அவன் என்னை வெறுக்கக் காரணம் எதுவும் இல்லையா என்று தலைமை நீதிபதி கேட்டார். அன்று கடற்கரையில் நான் இருந்தது ஒரு தற்செயலான நிகழ்ச்சியே என்றான் ரேமோன். அப்படியென்றால் இந்த விவகாரம் தொடங்கக் காரணமாயிருந்த கடிதம் மட்டும் எப்படி என்னால் எழுதப்பட் டிருந்தது என்று கேட்டார், அரசாங்க வழக்கறிஞர். அது மற்றொரு தற்செயல் என்றான் ரேமோன். இந்த விவகாரத்தில் தற்செயல் ஏற் கனவே மனசாட்சிக்கு அதிகச் சேதம் விளைவித்திருக்கிறது என்று பதிலடி தந்தார் அரசாங்க வழக்கறிஞர். ரேமோன் அவனது 'வைப் பாட்டியை' அடித்தபோது நான் குறுக்கிடாததும் தற்செயல்தானா, பிறகு காவல் நிலையத்தில் அவனுக்கு சாட்சியாக நான் சென்றதும் தற்செயல்தானா, அந்தச் சாட்சி வாக்குமூலத்தில் ரேமோனுக்குச் சாதகமாகவே நான் சொன்னதெல்லாம்கூடத் தற்செயல்தானா என்றெல்லாம் தெரிந்துகொள்ள விரும்பினார். கடைசியாக, ரேமோன் எப்படிப் பிழைப்பு நடத்துகிறான் என்று கேட்டதற்கு 'பண்டக சாலை வைத்திருப்பவன்' என்று பதிலளித்தான். அப்போது அரசாங்க வழக்கறிஞர் ஜூரிகளைப் பார்த்து, இந்த சாட்சி, பெண் களை வைத்துப் பிழைப்பவன் என்பது ஊரறிந்த விஷயம் என்று சொன்னார். நான் அவனது கூட்டாளி, தோழன். கீழ்த்தரமான சமூகத் தில் நடந்த இந்த அசிங்கமான விவகாரம் ஒரு ஒழுக்கங்கெட்ட மிரு கம் சம்பந்தப்பட்டதாகையால் மேலும் மோசமாகியிருக்கிறது என் றார். ரேமோன் தன் சார்பாக ஏதோ சொல்ல விரும்பினான். என் வழக்கறிஞரும் எதிர்ப்புத் தெரிவித்தார். ஆனால் அரசாங்கத் தரப்பில்

முதலில் பேசி முடிக்க வேண்டும் என்று கட்டளையிடப்பட்டது. அர சாங்க வழக்கறிஞர் தொடர்ந்தார். "நான் இன்னும் மிகச் சில விஷ யங்களே சொல்ல வேண்டியிருக்கிறது. குற்றம்சாட்டப்பட்டவர் உங்கள் நண்பரா?" ரேமோன், "ஆமாம், அவர் என் நெருங்கிய நண் பர்," என்றான். பிறகு அரசாங்க வழக்கறிஞர் அதே கேள்வியை என்னிடம் கேட்டார். நான் ரேமோனைப் பார்த்தேன். அவன் பார்வை என்னை விட்டு விலகவேயில்லை. "ஆமாம்," என்றேன். உடனே அரசாங்க வழக்கறிஞர் ஜுரிகளின் பக்கம் திரும்பி முடி வாகச் சொன்னார். "தாயார் இறந்த மறுநாளே மானக்கேடான உறவு களில் ஈடுபட்ட அதே மனிதன்தான் அற்பக் காரணங்களுக்காகவும், வெளியில் சொல்லக் கூசும் முறைகேடான விவகாரம் ஒன்றைத் தீர்த்துவைப்பதற்காகவும் ஒரு கொலைசெய்திருக்கிறான்."

பிறகு அவர் அமர்ந்தார். ஆனால் என் வழக்கறிஞர் பொறுமை இழந்தவராகக் கைகளை உயர்த்தியபடி எழுந்து கத்தினார். அவ்வாறு அவர் கைகளை உயர்த்தியபோது கஞ்சிபோட்ட சட்டையின் கைகள் மொடமொடத்தன. "இவர்மீது சாட்டப்பட்டிருக்கும் குற்றம் என்ன? தாயாரை அடக்கம் செய்ததா ஒரு ஆளைக் கொலை செய்ததா?" பார்வையாளர்கள் சிரித்தனர். ஆனால் அரசாங்க வழக் கறிஞர் மறுபடியும் எழுந்து, தன் அங்கியை இழுத்துப் போர்த்திய வாறு, இந்த இரு நிகழ்ச்சிகளுக்கும் இடையே ஒரு முக்கியமான, ஆழ்ந்த, சோகமான சம்பந்தம் இருக்கிறது என்றுகூட உணர முடி யாத அளவுக்குப் பிரதிவாதியின் வழக்கறிஞர் வெகுளியாக இருக் கிறார் என்று சொன்னார். மிகவும் ஆவேசமாக "ஆமாம். ஒரு கொலைகாரனின் மனநிலையோடு தாயாரை அடக்கம்செய்தான் என்றுதான் குற்றம்சாட்டுகிறேன்," என்றார். இந்தப் பிரகடனம் அங்கிருந்த மக்களிடையே ஒரு முக்கியமான விளைவை ஏற்படுத் தியதுபோல் தோன்றியது. என் வழக்கறிஞர் தோள்களைக் குலுக்கிய வாறு நெற்றியில் அரும்பிய வியர்வையைத் துடைத்துவிட்டுக் கொண்டார். ஆம். அவரே கொஞ்சம் ஆடித்தான் போயிருந்தார். அன்று விசாரணை எனக்குச் சாதகமாக அமையவில்லை என்பதைப் புரிந்துகொண்டேன்.

அன்றைய அமர்வு முடிவுக்கு வந்தது. நீதிமன்றத்தை விட்டு வெளியே வந்து சிறை வண்டியில் ஏறுமுன், நான் அறிந்திருந்த வேனிற்கால மாலைப்பொழுதின் மணங்களையும், நிறங்களையும் ஒரு கணநேரம் உணர்ந்தேன். பிறகு உருண்டோடிக்கொண்டிருந்த என் சிறையின் இருட்டில் சோர்வுற்று என் மனத்தின் ஆழத்தில் தேடிக் கண்டுபிடித்தது போன்ற உணர்வுடன், நான் மிகவும் நேசித்து விரும்பியிருந்த ஒரு நகரத்தின் பழகிப்போன ஓசைகளை இனம் கண்டுகொண்டேன். இது போன்ற மாலை நேரம்தான் நான் முன் பெல்லாம் மனநிறைவோடு இருந்த நேரம். ஏற்கனவே ஓய்ந்து போயிருந்த இந்த மாலைச் சூழலில் செய்தித்தாள் விற்கும் பையன் களின் கூப்பாடு. நகரின் சதுக்கத்தில் கடைசியாகப் பறந்து செல்லும் பறவைகளின் கூட்டம், தின்பண்டம் விற்பவர்களின் கூவல், குறு கிய தெருமுனைகளில் திரும்பிச் செல்லும் டிராம் வண்டிகளின் பரி தாபக் கதறல், துறைமுகத்தில் இருள் கவியும்முன் ஏற்படும் அந்தி நேரச் சலசலப்பு—இவற்றையெல்லாம் ஒரு குருடன் தன் வழக்க மான பாதையைத் தெரிந்துவைத்திருப்பது போல, சிறைக்குச் செல் லும் முன்னரேயே நான் தெரிந்துவைத்திருந்தேன். ஆம், வெகு நாட் களுக்கு முன்னால் இது போன்ற மாலை நேரங்களில் நான் உண்மை யாகவே மனநிறைவுடன் இருந்திருக்கிறேன். அப்போதெல்லாம் எனக்காகக் காத்திருந்தது கனவுகளற்ற சுகமான தூக்கம். ஆனால், இப்போது ஏதோ ஒரு மாற்றம் ஏற்பட்டு, நாளைய பொழுதுக்காகக் காத்துக்கொண்டிருந்த நிலையில், நான் கண்டது என் சிறைக் கூண்டை மட்டுமே. வேனிற்கால மாலைப்பொழுதின் பழக்கப் பட்ட பாதைகள் நிர்மலமான தூக்கத்துக்கு அழைத்துச் செல்வது போலவே சிறைச்சாலைக்கும் அழைத்துச் செல்லலாம்.

# 4

குற்றவாளிக் கூண்டில் இருந்தாலும் நம்மைப் பற்றிப் பிறர் பேசிக்கொள்வதைக் கேட்பது எப்போதுமே சுவாராஸ்யமாகத்தான் இருக்கிறது. அரசாங்க வழக்கறிஞர், என் வழக்கறிஞர், இருவரின் வாதங்களிலும் என்னைப் பற்றி நிறையவே பேசப்பட்டது என்று தான் சொல்ல வேண்டும்; என் குற்றத்தைவிட, என்னைப் பற்றிப் பேசப்பட்டதுதான் அதிகம். மேலும், இந்த இருவருடைய வாதங் களுக்கிடையே மட்டும் பெரிய வித்தியாசம் ஏதாவது இருந்ததா என்ன? என் வழக்கறிஞர் கைகளை உயர்த்தி, நான் குற்றவாளிதான் என்றாலும் அதற்குச் சில சமாதானங்கள் சொல்ல முடியும் என்றார். அரசாங்க வழக்கறிஞர் கைகளை நீட்டி, என் குற்றத்தைச் சாடி, இதற்குச் சமாதானம் ஏதும் கூற முடியாது என்றார். ஆனால் ஒன்று மட்டும் லேசாக என்னுள் உறுத்திக்கொண்டே இருந்தது. அவ்வப் போது என்னையும் மீறிக் குறுக்கிட்டுப் பேச நான் முற்படுவேன். ஆனால் என் வழக்கறிஞர் ''உங்கள் வழக்குக்கு நீங்கள் பேசாமல் இருப்பதே நல்லது,'' என்று சொல்வார். எப்படியோ ஒரு வகையில், என்னைச் சட்டைசெய்யாமலே இந்த வழக்கை முடித்துவிடு வார்கள்போல் இருந்தது. எல்லாமே என்னுடைய குறுக்கீடு இன்றி நடந்தது. என்னைக் கேட்காமலேயே என்னுடைய விதி நிச்சயிக்கப் பட்டு வந்தது. அவ்வப்போது எல்லோரையும் இடைமறித்துச் சொல்ல வேண்டும்போல் தோன்றியது; ''எது எப்படியிருந்தாலும் இங்கே யார் குற்றம்சாட்டப்பட்டவன்? குற்றம்சாட்டப்பட்ட வனுக்கும் ஒரு முக்கியத்துவம் உண்டே! எனக்கும் சொல்ல வேண் டிய விஷயங்கள் சில இருக்கின்றன.'' ஆனால், யோசித்துப்பார்த் தால், நான் சொல்வதற்கு எதுவும் இருக்கவில்லை. மேலும், தன்னைப் பற்றி மற்றவர்கள் பேசுவதில் இருக்கும் சுவாரஸ்யம் வெகு நேரம்

நீடிப்பதில்லை என்றும் நான் புரிந்துகொண்டேன். உதாரணமாக, அரசாங்க வழக்கறிஞரின் வாதங்கள் வெகு சீக்கிரத்தில் எனக்கு அலுப்பைத் தந்தன. அவருடைய வாதத்தோடு சேராமல், துண்டு பட்டு அங்குமிங்கும் சிதறிய சில வார்த்தைகள், சைகைகள் அல்லது நீண்ட வசை மாரிகள்—இவை மட்டுமே என்னை அவ்வப்போது பாதித்தன; அல்லது என் சுவாரஸ்யத்தை உசுப்பிவிட்டன.

நான் இந்தக் கொலையை முன்கூட்டியே யோசனைசெய்து வைத்திருந்தேன் என்பதுதான் அவரது ஆழமான அபிப்பிராயம் என்பதை நன்கு புரிந்துகொண்டேன். அதாவது, குறைந்தபட்சம் அதை நிரூபிக்க அவர் முயன்றார். அப்படித்தான் சொல்லவும் செய்தார்: "நான் அதை நிரூபித்துக்காட்டுகிறேன், மதிப்பிற்குரிய பெரியோர்களே, நான் அதை நன்றாகவே நிரூபித்துக்காட்டுகிறேன். முதலில் நம்மிடம் உள்ள விவரங்களின் கண் கூசவைக்கும் தெளிவின் மூலமாகவும், பிறகு இந்தக் கொலைகார ஆன்மாவின் மனத்தின் நலிந்த ஒளி மூலமாகவும் நிரூபிக்கிறேன்." நடந்தவற்றை என் அம்மாவின் மரணத்திலிருந்து தொடங்கி அவர் பட்டியலிட்டார். என் உணர்ச்சியின்மை, என் அம்மாவின் வயது பற்றிய என் அறியாமை, மறுநாள் நீச்சல் குளத்திற்குச் சென்றது, கூட இருந்த பெண், சினிமா, சிரிப்பு நடிகர் பெர்னான்டெல், கடைசியாக மாரியுடன் வீட்டுக்கு வந்தது—இவற்றையெல்லாம் தொகுத்துச் சொன்னார். முதலில் அவர் சொல்வதை என்னால் சரிவரப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏனென்றால், 'அவனுடைய ஆசைநாயகி' என்று குறிப்பிடப்பட்டவள் என்னைப் பொறுத்தவரை வெறும் 'மாரியாக' இருந்தவள்தான். பிறகு, அவர் ரேமோன் பற்றிய விவகாரத்திற்கு வந்தார். அவர் சம்பவங்களை விவரித்த விதம் தெளிவாக இல்லை என்று சொல்ல முடியாது. அவர் சொன்னதெல்லாம் சாத்தியக்கூறுகளாகவே தோன்றின. ரேமோனின் வைப்பாட்டியை அறைக்கு வரச்செய்து அந்த 'ஒழுக்கங்கெட்டவனின்' கொடுமைகளுக்கு அவளை ஆளாக்க வேண்டும் என்ற எண்ணத்தோடுதான் நான் ரேமோனுக்கு அந்தக் கடிதத்தை எழுதிக்கொடுத்திருக்கிறேன். பிறகு, கடற்கரையில் ரேமோனின்

எதிரிகளுடன் சண்டை மூட்டியிருக்கிறேன். ரேமோன் அடிபட்டிருந்திருக்கிறான். நான் அவனது துப்பாக்கியைக் கேட்டு வாங்கிக் கொண்டிருந்திருக்கிறேன். அதைப் பயன்படுத்தும் எண்ணத்தில் தான் தனியாகத் திரும்பிச் சென்றிருந்திருக்கிறேன். நான் திட்டமிட்டிருந்தபடியே அராபியனைச் சுட்டிருக்கிறேன். சற்றுக் காத்திருந்திருக்கிறேன். பிறகு 'திட்டம் நன்றாக நிறைவேறியிருக்கிறதா என்று உறுதிசெய்துகொள்ளும் வகையில்' நிதானமாக மீண்டும் நான்கு முறை சுட்டும் இருக்கிறேன்.

அரசாங்க வழக்கறிஞர் கூறினார்: ''ஆகவே, மதிப்பிற்குரிய பெரியோர்களே, இந்த மனிதன், தான் செய்யும் கொலையினுடைய விளைவுகளின் முழுப் பரிமாணமும் தெரிந்துகொண்டே அதைச் செய்யும்படி அவனைத் தூண்டிய சம்பவக் கோவையைத் தொகுத்துச் சொன்னேன். நான் ஏன் இதை வற்புறுத்திச் சொல்கிறேனென்றால், இது ஒரு சாதாரணக் கொலை அல்ல; தவிர்க்க முடியாத சந்தர்ப்பத்தில் யோசிக்காமல் செய்த செய்கை என்பதாக நீங்கள் முடிவுகட்ட முடியாது. இந்த மனிதன், பெரியோர்களே, இந்த மனிதன் புத்திசாலி. அவன் பேசுவதை நீங்கள் கேட்டீர்கள் அல்லவா? அவனுக்கு, எப்படிப் பதில் சொல்வது என்று தெரிந்திருக்கிறது. வார்த்தைகளின் மதிப்புத் தெரிந்திருக்கிறது. அவன், தான் என்ன செய்கிறோம் என்பதை உணராமல் செய்திருக்கிறான் என்று சொல்ல முடியாது.''

இதைக் கேட்டுக்கொண்டிருந்த நான் என்னைப் புத்திசாலி என்று அவர்கள் எடைபோட்டிருப்பதைக் கவனித்தேன். ஆனால் ஒரு சாதாரண மனிதனிடம் சிறப்பானவை என்று கருதப்படும் அம்சங்கள் எப்படி ஒரு குற்றவாளிக்கு எதிராகப் பலத்த குற்றச்சாட்டுகளாக மாற முடியும் என்று எனக்குப் புரியவில்லை; அதுதான் எனக்கு அதிர்ச்சியையும் அளித்தது. அதற்குப் பிறகு அவர் பேசுவதைக் கேட்காமலேயே இருந்தேன்; நான் மறுபடியும் கேட்க ஆரம்பித்தபோது வேறு சில சொற்கள் என் காதுகளில் விழுந்தன: ''அவன் தன் செய்கைக்கு வருத்தம் தெரிவிக்கவாவது செய்தானா? இல்லை, பெரியோர்களே, இல்லவே இல்லை. இந்த வழக்கு விசாரணையில் இதுவரை ஒருமுறைகூட அவன் தன்னுடைய இந்தக் கொடூரமான குற்றத்தி

னால் பாதிக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.'' இதைச் சொல்லும்போது அவர் என் பக்கம் திரும்பி என்னைச் சுட்டிக்காட்டினார். அவர் ஏன் அப்படிச் செய்தார் என்று எனக்குப் புரிந்திராத நிலையிலும் அவர் தொடர்ந்து என்னைச் சாடிக்கொண்டே இருந்தார். இருந்தாலும் அவர் சொன்னது சரிதான் என்பதை என்னால் ஏற்றுக்கொள்ளாமலிருக்க முடியவில்லை. உண்மையில், என் செய்கைக்காக நான் அவ்வளவாக ஒன்றும் வருந்தவில்லை. ஆனால் அவர் இவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டது எனக்கு வியப்பாக இருந்தது. அவரிடம் தோழமையுடன், ஏன் ஒருவிதப் பரிவுடன், என்னால் ஒருபோதும் எதற்காகவுமே வருத்தப்பட முடிந்ததில்லை என்று சொல்ல விரும்பினேன். நான் எப்போதும் எனக்கு உடனே நடக்க இருப்பவற்றில்—இன்றைக்கு அல்லது நாளைக்கு—இவற்றில் மட்டுமே ஈடுபாடு கொண்டிருந்தேன். ஆனால் நான் அப்போது இருந்த நிலையில், இந்தத் தொனியில் யாரிடமும் பேச முடியாதவனாக இருந்தேன். தோழமை உணர்வையோ, நல்ல ஒழுக்கங்களையோ வெளிப்படுத்த உரிமை இல்லாதவனாக ஆகியிருந்தேன். அவர் பேசுவதைத் தொடர்ந்து கேட்க முற்பட்டேன். ஏனென்றால், அரசாங்க வழக்கறிஞர் இப்போது என் ஆத்மாவைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்.

என் ஆத்மாவை அலசிப்பார்த்திருப்பதாக அவர் சொன்னார். ஆனால், மதிப்பிற்குரிய ஜூரி அவர்களே, அவரால் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை. உண்மையில் எனக்கு ஆத்மாவே இல்லை; மனிதாபிமான குணங்கள் எதுவும் இல்லை; மனிதனை மனிதனாக வைத்திருக்க உதவும் ஒழுக்க நெறிகளில் எதுவுமே எனக்கு எட்டாத நிலையில் இருந்தது என்றார். அவர் மேலும் சொன்னார்: ''ஒருவிதத்தில் இதை நாம் ஒரு குறையாகச் சொல்லக் கூடாது. அவனால் பெற முடியாத குணங்கள் அவனிடம் இல்லை என்று நாம் குறைசொல்லக் கூடாது. ஆனாலும் இந்த நீதிமன்றத்தில் உபயோகமற்ற சகிப்புத் தன்மைக்கு இடம்கொடுக்காமல், அதைவிடக் கடினமானதும், ஆனால் சீரியதுமான நீதி என்ற கோட்பாட்டை நிலைநிறுத்த வேண்டிய அவசியம் இருக்கிறது. அதுவும் இது போன்ற மனிதனுடைய இதயத்தின் சூனியம் ஒரு சமூகத்தையே புதைத்துவிடும் படுகுழியாக இருக்

கும் நிலையில் இது மிகவும் அவசியம்.'' அப்போதுதான் என் அம்மா விடம் எனக்கிருந்த மனோபாவத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். அதற்கு முன்னால் வாக்குவாதங்களின்போது ஏற்கனவே அவர் சொல்லியிருந்தவற்றை மறுபடியும் சொன்னார். ஆனால், இம்முறை அவர் என்னுடைய குற்றத்தைப் பற்றி மிக விரிவாக நீண்ட நேரம் பேசினார். அவர் என்ன பேசினார் என்பதுகூட நினைவில்லாத வகை யில் அவ்வளவு நேரம் பேசிக்கொண்டிருந்ததில் அன்றைய பகல் பொழுதின் வெயிலை மட்டும்தான் உணர்ந்தேன். ஒரு கட்டத்தில் சட்டென்று ஒரு கணநேரம் நிறுத்தினார். தாழ்ந்த குரலில், அழுத்தந் திருத்தமாக அவர் தொடர்ந்தார்: ''பெரியோர்களே, இதே நீதிமன் றம் நாளை இதைவிடக் கொடூரமான இழிசெயலைப் பற்றித் தீர்ப் பளிக்க இருக்கிறது. ஆம், தந்தையைக் கொன்ற ஒருவரின் வழக்கு.'' அவரைப் பொறுத்தவரை இது போன்ற கொடிய செயலுக்கு முன் னால் கற்பனைகூடப் பின்வாங்கிவிடும். ஆனால் மனித நீதி தவறா மல் தண்டிக்கும் என்று நம்பத் துணிவார். மேலும் இன்னொன்றை யும் சொல்வதற்குப் பயப்பட மாட்டார். தகப்பனைக் கொன்ற குற்றம் தோற்றுவித்த பயங்கரத்தை, என் கல்நெஞ்சம் அவருடைய மனத்தில் தோற்றுவித்த பயங்கரம் ஒன்றுமில்லாமல் ஆக்கிவிட்டது. இன்னும் சொல்லப்போனால், அவரைப் பொறுத்தவரை, தனக்கு வாழ்வளித்த தந்தையைத் தன் கையாலேயே கொன்றவன் எவ்வளவு தூரம் சமூகத்திலிருந்து விலகியிருந்தானோ, அவ்வளவு தூரம், மனத்தளவில் தாயாரைக் கொன்றவனும் விலகியிருந்தான். இன்னும் சொல்லப்போனால், பின்னவன், முன்னவனின் குற்றத்திற்கு ஒரு தூண்டுதலாக இருந்திருக்கிறான். அவனது செய்கைக்கு இவன் ஒரு முன்னோடியாக இருந்து அதற்கு நியாயம் கற்பிக்கும் வகையில் செயல்பட்டு இருந்திருக்கிறான்; இப்போது தன் குரலை உயர்த்திச் சொன்னார்: ''பெரியோர்களே, நான் தகாத முறையில் எதுவும் சொல்வதாக நீங்கள் நினைக்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன். இதோ, இங்கே, இந்தக் குற்றவாளிக் கூண்டில் இருக்கும் இவன், நாளை இதே நீதிமன்றம் வழங்க விருக்கும் கொலை வழக்கிலும் குற்றம்சாட்டப்பட்டவனாக இருக்கிறான் என்றுகூடச் சொல்ல லாம். ஆகவே, தகுந்த முறையில் இவன் தண்டிக்கப்பட வேண்டும்.''

இந்த இடத்தில் அரசாங்க வழக்கறிஞர் வியர்வையில் நனைந்து பளபளத்துக்கொண்டிருந்த தன் முகத்தைத் துடைத்துவிட்டுக்கொண் டார். தன் கடமை மன வருத்தத்தை அளிக்கக்கூடியதுதான் என்றாலும், கட்டுப்பாட்டுடன் அதைச் செய்ய அவர் கடமைப்பட் டிருந்தாரென்றும் அறிவித்தார். சமூகத்தின் ஆதார நியதிகளைப்பற்றி அறிந்திராத நான் அதற்காகச் சற்றும் கவலைப்பட வில்லையென் றும், சமூகத்தின் மனித இதயத்தில் ஏற்படும் பாதிப்புகளைச் சட்டைசெய்யாத நான் அதனிடம் இரக்கத்தை எதிர்பார்க்க முடியாதென்றும் கூறினார். "இவனுக்கு மரண தண்டனை அளிக்க வேண்டும். இதில் நீங்கள் பச்சாதாபம் எதுவும் காட்ட வேண்டாம் என்று வேண்டுகிறேன். என்னுடைய இத்தனை வருடச் சட்டத் தொழில் வாழ்க்கையில் இன்று போல் என்றுமே நான் ஒருவ னுடைய மரண தண்டனையைக் கோரியதில்லை என்பதற்குக் கார ணம்: சர்வவல்லமை பொருந்திய புனிதக் கட்டளையின் மனசாட்சி யும், கொடூரத்தைத் தவிர வேறு எதையுமே தன்னால் பார்க்க முடி யாத இந்த மனிதனின் முகத்தின் முன் நான் உணரும் குலைநடுக்க மும் என்னுடைய சுமை மிக்க இந்தக் கடமையை ஈடுசெய்து, சமன்செய்து, தெளிவாக்கியதை நான் உணர்ந்ததால்தான்.

அரசாங்க வழக்கறிஞர் மீண்டும் அமர்ந்தபோது நீண்டதொரு நிசப்தம் அங்கே நிலவியது. வெயிலின் உக்கிரம், அதிர்ச்சி ஆகிய வற்றால் நான் மலைத்துப்போயிருந்தேன். தலைமை நீதிபதி தொண் டையைக் கனைத்துக்கொண்டு, தாழ்ந்த குரலில் நான் எதுவும் சொல்ல விரும்புகிறேனா என்று கேட்டார். நானும் ஏதாவது சொல்ல வேண்டும் என்ற நிலையில் இருந்ததால் எழுந்து நின்று எனக்கு அப்போது மனத்தில் தோன்றியதை—இதுவும்கூடத் தற்செயல்தான் —சொன்னேன். அந்த அராபியனைக் கொல்ல வேண்டும் என்ற எண் ணம் எனக்கு இருக்கவில்லை என்றேன். ஒரு பிரகடனம் என்ற அள வில் அதை அவர் ஏற்றுக்கொண்டார். ஆனால், இதுவரை என்னு டைய பிரதிவாதம் என்ன என்பது அவருக்குப் புரிந்திருக்கவில்லை என்றும், என்னுடைய வழக்கறிஞரின் வாதத்தைக் கேட்பதற்குமுன், என்னுடைய செய்கைக்கு உண்மையான உள்நோக்கம் என்ன என்று

இன்னும் விளக்கமாகச் சொல்லும்படியும் கேட்டுக்கொண்டார். படபடப்புடன் வார்த்தைகள் குளற, நான் கேலிக்குள்ளாகியிருந் தேன் என்ற உணர்வுடன், வெயில்தான் காரணம் என்றேன். நீதி மன்றத்தில் சிரிப்பொலி எழுந்தது. என் வழக்கறிஞர் தோள்களைக் குலுக்கியவாறு சலிப்படைந்தார். உடனேயே, அவர் பேச அழைக் கப்பட்டார். ஆனால் அவர் அப்போது நேரமாகிவிட்டது என்றும், தான் சில மணி நேரம் பேச வேண்டியிருக்கிறது என்றும், ஆகவே, அவருடைய முடிவுரையைப் பிற்பகலுக்கு ஒத்திப்போடும்படியும் கேட்டுக்கொண்டார். நீதிபதியும் அதற்கு ஒப்புக்கொண் டார்.

பிற்பகல் அங்கிருந்த மின்விசிறிகள் அந்த அறையின் உக்கிரமான காற்றை விசிறிக்கொண்டிருந்தன. ஜூரிகளின் சிறிய வண்ண விசிறி களும் அதேபோல் இயங்கிக்கொண்டிருந்தன. என் வழக்கறிஞரின் முடிவுரை முடியாமலேயே போய்க்கொண்டிருக்கும்போல் தோன்றியது. இருந்தாலும், ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் அவர் கூறி யது காதில் விழுந்தது. ஏனென்றால், ''நான் கொலை செய்தேன் என்பது உண்மைதான்,'' என்றார். பிறகு, தொடர்ந்து பேசும்போது என்னைக் குறிப்பிடும்போதெல்லாம் 'நான்' என்றே தன்மைப் படுத்திக்கொண்டார். இது எனக்கு மிகவும் வியப்பாக இருந்தது. அங் கிருந்த போலீஸ்காரனை நோக்கிக் குனிந்து, அவர் ஏன் இப்படிச் சொல்கிறார் என்று கேட்டேன். என்னைச் சும்மா இருக்கச் சொன்ன அவன், சற்று நேரம் கழித்து ''எல்லா வழக்கறிஞர்களுமே அப்படித் தான் செய்வார்கள்,'' என்றான். எனக்கு அப்படித் தோன்றவில்லை. இந்த விவகாரத்திலிருந்து என்னை அந்நியப்படுத்தி என்னைப் பூஜ்யமாக்கிவிட்டு எனக்குப் பதிலாக ஒரு விதத்தில் தன்னைப் பிரதியிட்டுக்கொள்கிறார் என்று தோன்றியது. ஆனாலும், நான் ஏற் கனவே இந்த நீதிமன்றத்திலிருந்து வெகு தூரம் போய்விட்டிருந் தேன்.

மேலும் என் வழக்கறிஞரும் கேலிக்குரியவராக எனக்குத் தோன் றினார். என் செயலுக்கான காரணங்களைத் தன் தரப்பில் மடமட வென்று சொல்லி முடித்துவிட்டு, பிறகு அவரும் என் ஆத்மாவைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். இருந்தாலும், அரசாங்க வழக்கறிஞருக்கு

இருந்த அளவு சாமர்த்தியம் அவருக்கு இல்லையென்று எனக்குப் பட்டது. "ஆம். நானும் இவரது ஆத்மாவை நன்கு அலசிப்பார்த்தேன். ஆனால் அரசாங்கத் தரப்பின் பிரதிநிதி போலல்லாமல், இவருடைய ஆத்மாவில் சில அம்சங்களை என்னால் பார்க்க முடிந்தது; ஒரு திறந்த புத்தகம் போன்று அதைத் தெளிவாகப் படித்து அறிந்து கொள்ள முடிந்தது," என்றார். நான் நாணயமானவன், எனக்கு வேலை கொடுத்தவரிடம் ஒழுங்காக, அயராது, விசுவாசமாக உழைத்த ஊழியன், மற்றவர்களால் மிகவும் நேசிக்கப்பட்டவன், பிறர் துயரத்தில் பங்குகொள்பவன் என்றெல்லாம் அறிந்துவைத்திருந்தார். அவர் கருத்தில் தாயாரைத் தன்னால் முடிந்தவரை வைத்துக் காப்பாற்றிய லட்சிய மகனாக நான் இருந்திருக்கிறேன். கடைசியாக, என் பொருளாதார வசதியைக் கொண்டு வயதான தாய்க்குச் செய்துதர முடியாத சௌகரியங்களை முதியோர் இல்லம் செய்துத் தரக்கூடும் என்ற நம்பிக்கையில் அங்கே அவளைச் சேர்த்துமிருக்கிறேன். அவர் தொடர்ந்தார்: "பெரியோர்களே, இந்த இல்லத்தைக் குறித்து ஏன் இப்படிப் பிரமாதப்படுத்திப் பேசப்படுகிறது என்பது தான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. இது போன்ற நிலையங்கள் அரசாங்க உதவியுடன் இயங்கிவருகின்றன என்பதிலிருந்தே அவற்றின் அவசியத்தையும், முக்கியத்துவத்தையும் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும்." என் அம்மாவின் அடக்கம்பற்றி மட்டும் அவர் பேசவில்லை. இது அவரது வாதத்தில் இடம்பெறவில்லை என்பதை நான் உணர்ந்தேன். இருந்தாலும் அந்த நீண்ட வாக்கியத் தொடர்கள், பல நாட்களாக, பல மணி நேரமாக என் ஆத்மாவைப் பற்றிப் பேசியதில் நீண்டுகொண்டேபோன காலப் பொழுது ஆகியவற்றின் ஒட்டுமொத்தமான விளைவாக, எல்லாமே தலையைச் சுற்ற வைக்கும் ஒரு நிறமற்ற நீர்ச்சுழல்போல எனக்குத் தோன்றியது.

கடைசியாக நினைவில் நின்றது ஒன்றுதான்: என் வழக்கறிஞர் பேசிக்கொண்டே இருந்தபோது, தெருவில் ஐஸ் விற்றுக்கொண்டு சென்றவன் ஒலித்த குழலோசை தெருவைத் தாண்டி நீதிமன்றத்தின் அறைகள், விசாரணைக்கூடம் எல்லாவற்றையும் தாண்டி என் செவியில் ஒலித்தது. எனக்கு இனியும் சொந்தமில்லாத அந்த வாழ்வின்

நினைவுகள் என்னைத் தாக்கின. அந்த வாழ்வுதான் எனக்கு மிகவும் நிச்சயமான, மிகவும் எளிமையான இன்பங்களைத் தந்திருந்தது. வேனிற்கால மணங்கள், நான் நேசித்த வட்டாரம், மாலை நேர வானத்தின் அழகு, மாரியின் புன்னகை, அவளுடைய உடைகள். இங்கு இப்போது நடந்துகொண்டிருந்தவற்றை நினைக்கும்போது தொண்டை அடைத்தது. எனக்கிருந்த ஒரே ஒரு அவசரம் சீக்கிரம் இவர்கள் முடிக்க மாட்டார்களா, சிறைக் கூண்டுக்குத் திரும்பச் சென்று தூங்க மாட்டோமா என்பதுதான். இந்த நிலையில் என் வழக் கறிஞர் உரத்த குரலில் தன் வாதங்களை முடிப்பதுகூட எனக்கு மிக வும் மெதுவாகத்தான் கேட்டது. ஒரே ஒரு கணம் தன் நிலை இழந்து தவறுசெய்துவிட்ட ஒரு நாணயமான ஊழியனுக்கு மரண தண் டனை அளிக்க ஜூரிகள் விரும்ப மாட்டார்கள். ஒருமுறை தவறி விட்டோம் என்ற நினைவு வாழ்நாள் முழுவதும் கறையாகப் படிந் திருக்கும் என்பதே போதுமான தண்டனை அல்லவா? ஆதலால் தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களின் காரணமாகச் செய்துவிட்ட குற் றம் என்று கருதி, கருணையுடன் தீர்ப்பளிக்கப்பட வேண்டும், என்று சொல்லி முடித்தார். நீதிபதிகள் எழுந்து செல்ல, என் வழக்கறிஞர் மிகவும் சோர்ந்துபோய்த் தன் இடத்தில் அமர்ந்தார். அவருடைய சகாக்கள் அவரிடம் வந்து கைகுலுக்கினர். ''பிரமாதம்,'' என்று புகழ்ந்தார் ஒருவர். மற்றொருவர், ''பிரமாதம், இல்லை?'' என்று என்னைப் பார்த்து சாட்சிக்கு அழைப்பதுபோல் கேட்டார். நானும் அது சரிதான் என்று ஆமோதித்தேன். ஆனால் என் புகழ்ச்சி உண்மை யானது என்று சொல்ல முடியாது. ஏனென்றால் நான் மிகவும் சோர்ந்துபோயிருந்தேன்.

இன்னும் சற்று நேரமாகி இருக்க, வெளியே வெயில் குறைந் திருந்தது. தெருவிலிருந்து வந்த சிறுசிறு சத்தங்களின் ஊடே மாலை நேரத்தின் மென்மையை மட்டும் ஊகிக்க முடிந்தது. நாங்கள் எல் லோருமே அங்கே காத்துக்கொண்டிருந்தோம். எதற்காகக் காத்துக் கொண்டிருந்தோமோ அதில் நான் மட்டும் சம்பந்தப்பட்டிருந்தேன். நான் மறுபடியும் அந்தக் கூடத்தைப் பார்த்தேன். எல்லாமே முதல் நாளில் இருந்த அதே நிலையில் இருந்தது. சாம்பல் நிறக் கோட்ட

ணிந்த பத்திரிகை நிருபர், தானியங்கியான அந்தப் பெண்—இவர்களுடைய பார்வையைச் சந்தித்தேன். விசாரணை நடைபெற்ற நேரம் முழுவதும் மாரியைத் தேடிப்பார்க்க நான் முயலவில்லை என்ற நினைவு எனக்கு இப்போதுதான் வந்தது. நான் அவளை மறந்துவிடவில்லை; ஆனால் எனக்கு வேறு பல விஷயங்கள் இருந்தன. செலஸ்த், ரேமோன் இருவருக்குமிடையில் அவள் இருந்தாள். 'அப்பாடி, ஒரு வழியாக முடிந்தது' என்பதுபோல் என்னைப் பார்த்துச் சைகை செய்தாள். கவலையுற்ற அவள் முகத்தில் லேசாக ஒரு புன்னகைக் கீற்று இழையோடியதைப் பார்த்தேன். ஆனால் மனம் உறைந்துபோயிருந்ததால் என்னால் அவள் புன்னகைக்குப் பதிலளிக்க முடியவில்லை.

நீதிபதிகள் திரும்பி வந்தனர். ஜூரிகளுக்காகச் சில கேள்விகள் மடமடவென்று படிக்கப்பட்டன. ''கொலை செய்த குற்றத்திற்காக...'', ''முன்கூட்டியே திட்டமிடப்பட்ட...'', ''தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்கள்...'' போன்ற சில சொற்றொடர்களை மட்டுமே என்னால் கேட்க முடிந்தது. ஜூரிகள் அறையை விட்டு வெளியே சென்றனர். நான் இதற்குமுன் ஏற்கனவே காத்துக்கொண்டிருந்த ஒரு சிறிய அறைக்கு என்னை இட்டுச்சென்றனர். என் வழக்கறிஞர் நான் இருந்த இடத்திற்கு வந்தார். அவர் சற்று அதிகமாகப் பேசிக்கொண்டிருந்தார். இதற்குமுன் ஒருபோதும் இல்லாத அளவு நம்பிக்கையுடனும், நட்புறவுடனும் என்னுடன் பேசிக்கொண்டிருந்தார். எல்லாம் நல்லபடியாக முடியும் என்று அவர் கருதினார். சில வருடச் சிறை வாசம் அல்லது கடுங்காவல் தண்டனையுடன் தப்பித்துக்கொள்ளலாம் என்று சொன்னார். எனக்கு எதிராகத் தண்டனை விதிக்கப்படும் பட்சத்தில் அதை ரத்துசெய்யக் கோரும் வாய்ப்பு இருந்ததா என்று கேட்டேன். இல்லையென்றார்.

ஜூரிகளின் மனோபாவத்தை பாதித்துவிடும் வகையில் எந்த முடிவையும்தான் வைத்துவிடக் கூடாது என்பதுதான் அவர் உத்தியாக இருந்தது. தகுந்த ஆதாரங்கள் இன்றி எந்தத் தண்டனையையும் அப்படி முறையிட்டு ரத்துசெய்துவிட முடியாது என்றும் அறிவித்தார். அவர் சொன்னது இப்போது எனக்குத் தெளிவாகியது. அவ

ருடைய காரணங்களும் சரியென்றே நினைத்தேன். நடுநிலை மையுடன் யோசித்துப்பார்த்தால் அது நியாயம்தான் என்றும் தோன்றியது. இல்லையென்றால் அனாவசியமாகக் காகிதக் கற்றைகள்தான் குவியுமே ஒழிய, வேறெந்தப் பயனும் இருக்காது. "இருந்தாலும், சாதாரணமாக மேல்முறையீடு செய்வதுபோலச் செய்ய வாய்ப்பு இருக்கிறது," என்று சொன்ன அவர், "அதற்கு அவசியம் இருக்காது. தீர்ப்பு சாதகமாகவே இருக்கும்," என்றார்.

நாங்கள் வெகு நேரம் காத்திருந்தோம். சுமார் முக்கால் மணி நேரம் ஆகியிருக்கும் என்று நினைக்கிறேன். பிறகு மணியோசை ஒன்று கேட்டது. "இப்போது ஜூரிகளின் தலைவர் பதில்களை வாசிப்பார். பிறகு தீர்ப்பின் வாசகங்களைப் படிக்கும்போது மட்டுமே உங்களை நீதிமன்ற அறைக்குள் அழைத்துச்செல்வார்கள்," என்று என்னிடம் சொல்லிவிட்டு என் வழக்கறிஞரும் என்னை விட்டுச் சென்றார். சில கதவுகள் மூடப்படும் சத்தம் கேட்டது. தடதடவென்று படிகளில் இறங்கிச் சிலர் விரையும் சத்தமும் கேட்டது. ஆனால் நான் அவற்றின் அருகில் இருந்தேனா, தொலைவில் இருந்தேனா என்று எனக்குத் தெரியவில்லை. பிறகு நீதிமன்ற அறையிலிருந்து தெளிவற்ற குரல் ஒன்று ஏதோ படிப்பது கேட்டது. மறுபடியும் அந்த மணியோசை கேட்டபோது விசாரணைக் கூண்டிற்குச் செல்லும் கதவு திறக்கப்பட்டபின், நீதிமன்றத்தில் நிலவிய இறுக்கமான மௌனம் என்னை நோக்கிப் பாய்ந்தது. அந்த மௌனத்தினூடே, இதுவரை விடாமல் என்னையே பார்த்துக்கொண்டிருந்த அந்த இளம் பத்திரிகையாளன் இப்போது வேறு பக்கம் தன் பார்வையைத் திருப்பிய போது, இனம்புரியாத ஒருவித உணர்வு என்னைத் தாக்கியது. நான் மாரி இருந்த பக்கம் பார்க்கவேயில்லை. எனக்கு அதற்கு நேரம் இருக்கவில்லை. ஏனென்றால் தலைமை நீதிபதி ஒரு விசித்திரமான வார்த்தைச் சேர்க்கையில், 'பிரெஞ்சுக் குடியரசின் மக்கள் பெயரால்' ஒரு பொது இடத்தில் என் தலை துண்டிக்கப்படும் என்று அறிவித்தார். அப்போது அங்கிருந்தவர்களின் மனநிலையை அவர்களின் முக பாவங்களிலிருந்து புரிந்துகொண்டதாக எனக்குப் பட்டது. அவர்கள் எனக்காக இரக்கப்பட்டிருக்க வேண்டும். காவலாளிகள் என்னிடம்

மிகவும் மென்மையாக நடந்துகொண்டார்கள். என் வழக்கறிஞர் மணிக்கட்டின் மீது தன் கையை வைத்தார். நான் எந்த ஒரு நினைவுமில்லாமல் இருந்தேன். மேற்கொண்டு நான் சொல்வதற்கு எதுவுமில்லயா என்று என்னைத் தலைமை நீதிபதி கேட்டார். யோசித்தேன். "இல்லை," என்றேன். அதன் பிறகுதான் என்னை அங்கிருந்து அழைத்துச்சென்றார்கள்.

# 5

மூன்றாவது முறை சிறைச்சாலைப் பாதிரியைச் சந்திக்க நான் மறுத்திருந்தேன். எனக்கு அவரிடம் சொல்வதற்கு எதுவும் இருக்க வில்லை. நான் அவரிடம் பேச விரும்பவில்லை; எப்படியும், வெகு விரைவில் நான் அவரைச் சந்திக்க வேண்டும். இப்போதைக்கு எனக்கிருந்த அக்கறையெல்லாம் இந்தப் 'பொறி'யிலிருந்து தப்புவது எப்படி, தவிர்க்க முடியாத இதிலிருந்து தப்ப வழி ஏதாவது இருக்கிறதா என்று தெரிந்துகொள்வதுதான். என்னை வேறு அறைக்கு மாற்றினார்கள். இந்த இடத்தில் நான் நன்றாக நீட்டிப் படுத்தால் என் பார்வையில் ஆகாயம் தெரிகிறது. பரந்த வானத்தை மட்டுமே நான் பார்க்க முடிகிறது. வானத்தில் தெரிகிற, பகலை இரவுக்கு இட்டுச்செல்லும் வண்ணங்களின் மாற்றங்களைப் பார்த் துக்கொண்டிருப்பதிலேயே என் நாள் பொழுது கழிகிறது. படுத்த வாறு என் கைகளைத் தலைக்குப் பின்னால் வைத்துக் காத்திருக் கிறேன். இதுவரை மரண தண்டனை எதிர்பார்த்திருந்த கைதிகளில் யாராவது தடுத்து நிறுத்த முடியாத இந்தப் 'பொறி'யிலிருந்து தப்பி யிருப்பார்களா, தண்டனை நிறைவேறுவதற்குமுன் காணாமல் போயிருந்திருப்பார்களா, காவல் வேலியைத் தகர்த்தெறிந்திருப்பார் களா என்றெல்லாம் எவ்வளவு முறை நினைத்துப்பார்த்தேன் என்று எனக்கு இப்போது நினைவில்லை. மரண தண்டனைபற்றி அச்சில் வெளியாகியிருந்தவற்றைக் கவனித்துப் படிக்காமல் இருந்திருக்கி றேன் என்பதற்காக என்மீதே நான் கோபம் அடைந்தேன். இது போன்ற விஷயங்களில் ஒருவர் எப்போதும் அக்கறைகொள்ள வேண்டும். யாருக்கு என்ன நேரும் என்று ஒருபோதும் தெரியாது. எல்லோரையும்போல் நானும் தினசரிகளில் வந்திருந்த செய்திக ளைப் படித்திருக்கிறேன். ஆனாலும், இதுபற்றி விவரமாக எழுதப்

பட்ட புத்தகங்களும் அவசியம் இருந்திருக்க வேண்டும். அவற்றைப் பார்க்க வேண்டும் என்ற உந்துதல் எனக்கு ஒருபோதும் ஏற்பட்டதேயில்லை. பார்த்திருந்தால், தப்பிச் சென்றவர்களின் கதை ஏதாவது எனக்குத் தென்பட்டிருக்கும். சக்கரங்கள் எப்போதாவது ஒருமுறை தடைபட்டு நின்றுபோன சம்பவத்தைத் தெரிந்துகொண்டிருந்திருப்பேன். எதிர்த்து வெல்ல முடியாத இந்த எண்ணச் சுழல்களை ஒரு அதிர்ஷ்டமோ, ஒரு தற்செயலோ ஏதோ ஒருவிதத்தில் ஒருமுறையேனும் மாற்றியிருக்கக்கூடும். ஆம், ஒரே ஒருமுறை! ஒருவிதத்தில் பார்க்கப்போனால் அதுவே எனக்குப் போதுமானதாக இருந்திருக்கும். மீதியை என் மனம் கற்பனைசெய்து முடித்திருக்கும். சமூகத்திற்குத் தனிமனிதன் கடன்பட்டிருப்பதைப் பற்றிப் பத்திரிகைகளில் அடிக்கடி பேசப்பட்டிருக்கிறது. அவர்கள் கருத்துப்படி, இக்கடன்கள் தவறாமல் தீர்க்கப்பட வேண்டுமாம். ஆனால் இதுபோன்ற வாதங்களில் கற்பனைக்கு இடமில்லை. தப்பிச்செல்ல வழி இருக்கிறதா என்பதுதான் எனக்கு முக்கியமாக இருந்தது. மாற்ற முடியாத இச்சடங்குகளிலிருந்து வெளியே துள்ளிக்குதித்து நம்பிக்கையூட்டும் வாய்ப்புகளை நோக்கி ஓட முடியாதா என்றுதான் எண்ணத் தோன்றியது. ஓடிக்கொண்டிருக்கும்போதே முதுகில் குண்டடிபட்டுத் தெருமுனையில் வீழ்த்துவதாகக்கூட அந்த 'நம்பிக்கை' இருந்திருக்கலாம். ஆனாலும் எல்லாவற்றையும் எண்ணிப்பார்க்கையில் அந்த அற்ப சுகம்கூட எனக்கு அளிக்கப்படவில்லை. எல்லா விதத்திலும் அது எனக்கு மறுக்கப்பட்டிருந்தது; 'பொறி' என்னை இழுத்துக்கொண்டு விட்டிருந்தது.

என்னதான் முயன்றாலும், என்னால் இந்த இரக்கமற்ற நிச்சயத்தை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஏனென்றால், இந்த நிச்சயத்திற்கு ஆதாரமாக இருந்த தீர்ப்பின் கடுமைக்கும், தீர்ப்பு அளிக்கப்பட்ட பின் ஒன்றன்பின் ஒன்றாக நடந்த, மாற்றப்பட முடியாத சம்பவங்களுக்கும் இடையே இருந்த தொடர்பு சற்றும் பொருத்தமற்றதாக, கேலிக்குரியதாக இருந்தது. தீர்ப்பு படிக்கப்பட்டது மாலை ஐந்து மணிக்குப் பதிலாக இரவு எட்டு மணிக்கு என்பதும், அது முற்றிலும் வேறு விதமாக இருந்திருக்கலாம் என்பதும், நாள் தவறாமல்

தங்கள் உள்ளாடைகளை மாற்றிக்கொள்ளும் மனிதர்களால் அது படிக்கப்பட்டது என்பதும், 'பிரெஞ்சுக் குடியரசின் (ஜெர்மானிய அல்லது சீன) மக்கள் பெயரால்' போன்ற முகமற்ற ஒரு கருத்தின் பெயரால் இத்தீர்ப்பு அளிக்கப்பட்டது என்பதும் ஒன்றுசேர்ந்து, இந்த மாதிரியான முடிவின் முக்கியத்துவத்தைப் பெருமளவு பாதித் தன என்றே எனக்குத் தோன்றியது. இருந்தபோதிலும், தீர்ப்பு அளிக்கப்பட்ட வினாடியிலிருந்து அதன் விளைவுகள், இதோ இந்த அறை நெடுகிலும் என் உடலை அழுந்தச் சாய்க்கும்போது நான் உண ரும் சுவர்கள்போல் அவ்வளவு உறுதியாக, கடுமையாக இருந்தன என்பதைப் புரிந்துகொண்டேன்.

அப்போதுதான், என் அம்மா என் தந்தையைப் பற்றி என்னிடம் சொல்லியிருந்த ஒரு சம்பவம் நினைவுக்கு வந்தது. என் தந்தையைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரிந்திருக்கவில்லை. அவரைப் பற்றி நான் தெரிந்துகொண்டிருந்ததெல்லாம் அவ்வப்போது அம்மா சொல்லி யிருந்த தகவல்கள்தான். ஒருமுறை அவர் மரண தண்டனை பெற்ற குற்றவாளி ஒருவனின் தலை துண்டிக்கப்படுவதைப் பார்க்கச் சென் றிருந்திருக்கிறார். இப்படிப் பார்க்கப் போகிறோம் என்ற எண்ணமே அவருக்குச் சங்கடமாக இருந்திருக்கிறது. இருந்தாலும் சென்றிருந் திருக்கிறார். திரும்பி வந்து, அன்று காலை முழுவதும் வாந்தி எடுத்துக் கொண்டிருந்தாராம். அதைக் கேட்டபோது என் தந்தையிடம் எனக்கு வெறுப்புணர்வுதான் ஏற்பட்டது. ஆனால் இப்போது நினைத்துப்பார்க்கையில் அவர் செய்கை மிகவும் இயல்பானதாகவே எனக்குத் தோன்றுகிறது. மரண தண்டனை நிறைவேற்றப்படுவதைப் போல முக்கியமானது எதுவும் இல்லை என்பது எனக்கு எப்படித் தோன்றாமல்போயிற்று! உண்மையிலேயே ஒரு மனிதன் அக்கறை கொள்ளக்கூடியது அது ஒன்றுதானே! இப்போது மட்டும் நான் சிறை யிலிருந்து விடுதலை பெற்றால் ஒவ்வொரு மரண தண்டனை நிறை வேற்றப்படும்போதும் விடாமல் சென்று பார்ப்பேன்.

ஆனால் இது போன்ற ஒரு வாய்ப்பு இருக்கக்கூடும் என்று நான் நினைத்துப்பார்ப்பதே தவறு என்று நினைக்கிறேன். ஏனென்றால், நான் விடுதலை பெற்ற மனிதனாக, போலீஸ்காரர்களின் காவல்

வேலிக்குப் பின்னால்—அதாவது, இப்போது இருப்பது போலன்றி, மறுபுறம் இருந்துகொண்டு—மரண தண்டனையைப் பார்க்க வந்த ஒரு பார்வையாளனாக இருந்துவிட்டு, பின் வீடு திரும்பி, வாந்தி எடுப்பவனாக என்னை நான் கற்பனைசெய்துபார்க்கும்போது என் நெஞ்சில் மோதிய மகிழ்ச்சிப் பெருக்கில் ஒருவித நச்சுத் தன்மை இருப்பதை உணர்ந்தேன். ஆனால் அப்படியெல்லாம் நினைத்தது நியாயமில்லை. இதுபோன்ற வீண் கற்பனைகளில் மனத்தை ஓட விட்டதே மிகப் பெரிய தவறு; ஏனென்றால் அடுத்த நிமிடமே என் உடல் பயங்கரமாகச் சில்லிட்டுப்போக, போர்வைக்குள் நடுங்கினேன். நடுக்கம் அடங்காமல் பற்கள் படபடத்தன.

ஆனால் உண்மையில் எல்லா நேரங்களிலும் காரண ரீதியாகவே இருக்க எவராலும் முடிவதில்லை. சில சமயங்களில், உதாரணமாக, கற்பனையில், நானே சட்டங்களை இயற்றி, தண்டனை விதிமுறைகளை மாற்றி அமைத்தேன். தண்டிக்கப்பட்டவனுக்கு வாய்ப்பு அளிக்க வேண்டியது அவசியம் என்று கருதினேன். ஆயிரத்தில் ஒரு முறை என்று இருந்தாலும் போதும்; சமாளித்துவிடலாம். உதாரணமாக, ஒரு ரசாயனக் கலவை. அதை உட்கொண்டால் பத்துக்கு ஒன்பது நோயாளி இறக்க வாய்ப்பிருக்கும் (நோயாளி என்றுதான் என் மனம் நினைத்தது). ஆனால் அவனுக்கு அது தெரிந்திருக்க வேண்டும்; அதுதான் விதிமுறை. அமைதியாக, எல்லா அம்சங்களையும் கருதி, நிதானமாக யோசித்துப்பார்த்தால் இந்தப் 'பொறி'யிலுள்ள கத்தியில் இருந்த ஒரேயொரு குறை இது போன்ற வாய்ப்பு ஏதும் அதில் இல்லை; சுத்தமாக இல்லை. திட்டவட்டமாக, மறுபேச்சுக்கு இடமின்றி நோயாளியின் மரணம் முடிவுசெய்யப்பட்டுவிடுகிறது. தீர்மானமாக முடிவாகிவிட்ட இந்த விஷயத்தில், நன்கு நிச்சயிக்கப்பட்ட இந்தச் சேர்மானத்தில், கவனமாகத் தயாரிக்கப்பட்ட இந்த ஒப்பந்தத்தில் மீண்டுவருவதற்கான கேள்விக்கே இடமில்லை. தப்பித்தவறி அக்கருவி வெட்டத் தவறினால், எல்லாம் மறுபடியும் முதலிலிருந்து தொடங்கப்படும். ஆகவே, இதில் ஒரு பெரிய சங்கடம் என்னவென்றால், இக்கருவி நன்றாக, எந்தவிதக் குறைபாடுமின்றிச் செயல்பட வேண்டுமே என்று குற்றவாளியே விழைய வேண்டிய

நிலைமை ஏற்பட்டுவிடுகிறது. இந்த நடைமுறையில் இது ஒரு குறை பாடு என்றுதான் சொல்லுவேன். ஒருவிதத்தில் இது உண்மை; ஆனால் வேறு விதமாகப் பார்த்தால், ஒரு திறமை மிக்க அமைப்பின் ரகசியமே அதில்தான் இருக்கிறதென்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டிய நிலையில் நான் இருந்தேன். மொத்தத்தில், குற்ற வாளியே இந்த அமைப்புடன் மனத்தளவில் ஒத்துழைக்கக் கட்டா யப்படுத்தப்படுகிறான். எல்லாம் மனத்தளவில் தடையின்றி இயங்க வேண்டுமென்பதே அவன் நன்மைக்காகத்தான்.

இது போன்ற விஷயங்களில் இதுவரை தவறான விவரங்க ளையே அறிந்துவைத்திருந்தேன். உதாரணமாக, கியோட்டினுக்குச் செல்வதற்கு ஒரு தற்காலிக மேடைமீது ஏறப் படிகள் வழியே போக வேண்டுமென்றுதான் நான் இதுவரை—ஏனென்று தெரியாது— நினைத்திருந்தேன். 1789ஆம் ஆண்டின் பிரெஞ்சுப் புரட்சி ஒரு காரணமாக இருந்திருக்கலாம். அதுபற்றி நான் கற்றிருந்த பாடங் களும், பார்த்திருந்த படங்களும் இது போன்ற ஒரு எண்ணத்தைத் தோற்றுவித்திருக்கலாம். திடீரென்று ஒருநாள் எல்லோராலும் வெகு வாகப் பேசப்பட்டு வந்த ஒரு மரண தண்டனை குறித்துச் செய்தித் தாள்களில் வெளியாகியிருந்த புகைப்படம் நினைவுக்கு வந்தது. உண்மையில் அந்தக் கருவி தரைமட்டத்தில் வைக்கப்பட்டிருந்தது. மிகச் சாதாரணமாக வைக்கப்பட்டிருந்த அந்தக் கருவி நான் எதிர் பார்த்ததைவிடக் குறுகலாகவே இருந்தது. இதுவரை அது என் நினை வுக்கு வராமல் இருந்ததே ஒரு பெரிய வேடிக்கை. அந்தக் கருவியின் புகைப்படத்தில் என்னைக் கவர்ந்த அம்சம், அதன் துல்லியமான, கச்சிதமான, பளபளக்கும் தோற்றமே. நமக்குத் தெரியாதவற்றைப் பற்றி எப்போதும் நமக்கு மிகையான அபிப்பிராயமே இருக்கிறது. ஆனால் இப்போதோ அது எவ்வளவு சாதாரணமாக இருந்தது என்று சொல்ல வேண்டிய நிலைமையில் இருந்தேன்; அந்தக் கருவியும் அதை நோக்கிச் செல்லும் மனிதனும் ஒரே தளத்தில் இருந்தார்கள். மற்றொரு மனிதனைச் சந்திக்கச் செல்வது போலவே அவனும் அந் தக் கருவியைச் சந்தித்தான். அதுவே ஒரு ஏமாற்றமாக இருந்தது. பரந்த வானத்தை நோக்கி மேலே எழும்புவதுபோல மேடையின் மீது

ஏறிச் செல்வதாக இருந்தால் கற்பனைக்காவது ஓரளவு வேலை இருந் திருக்கும். ஆனால் அதுகூட இல்லாமல், அந்தக் கருவி எல்லாவற் றையும் நசுக்கிவிட்டிருந்தது; குற்றவாளி நாசூக்காகக் கொல்லப்பட் டான்—ஓரளவு அவமானத்துடனும், மிகக் கச்சிதமாகவும்.

இவை தவிர, என் நினைவை இன்னும் ஆக்கிரமித்துக்கொண் டிருந்தவை இரண்டு விஷயங்கள்: நாளைய விடியலும், எனது மேல் முறையீட்டு மனுவும். இருந்தாலும் இவைபற்றியே நினைத்துக் கொண்டிருக்கக் கூடாதென்று இவற்றை மறக்க நான் முயன்று கொண்டிருந்தேன். மல்லாந்து படுத்து ஆகாயத்தைப் பார்த்தவாறு அதில் மனத்தை ஈடுபடுத்த முயன்றேன். வானத்தில் பசுமை படர ஆரம்பித்திருந்தது; மாலை நேரம் என்று அறிந்துகொண்டேன். மறுபடியும் என் நினைவுகளைத் திசைதிருப்ப முயன்றேன். என் இருதயத் துடிப்பை உற்றுக் கேட்க ஆரம்பித்தேன். விடாமல் நான் இதுவரை கேட்டுக்கொண்டிருந்த இந்த இருதயத் துடிப்பு எப்போ தாவது நின்றுவிடும் என்று கற்பனைசெய்துபார்க்க முடியாமலேயே இருந்திருக்கிறேன். எனக்கு எப்போதுமே கற்பனை வளம் போதாது தான். இருந்தாலும், என் இருதயத் துடிப்பே என்னுள் எதிரொலிக்காத ஒரு கணத்தை மனக்கண் முன் நிறுத்திப்பார்த்தேன்; பயனில்லை. நாளைய விடியல், எனது மேல்முறையீடு இரண்டும் இருக்கவே செய் தன. இறுதியாக, இயல்பான நினைவோட்டத்தை வலுக்கட்டாய மாக மாற்ற முடியாது என்ற நினைவுக்கு வந்தேன்.

சாதாரணமாக, விடியற்காலையில் 'அவர்கள்' வருவார்கள் என்று எனக்குத் தெரியும். ஆகவே, இரவெல்லாம் இந்த விடியற் பொழுதை எதிர்நோக்கிக் காத்திருந்தேன். எதிர்பார்க்காமல் இருக்கும்போது ஆச்சரியப்படுத்தப்படுவதை நான் விரும்பியதில்லை. எனக்கு ஏதா வது நேரும்போது நான் அதற்குத் தயாராகவே இருக்க விரும்பி னேன். இதனாலேயே நான் பகல் பொழுதில் மிகச் சிறிதளவு தூங்கி யும், இரவெல்லாம் தூங்காமலேயும், கூரைச் சாளரத்தில் வானத்தின் ஒளி எப்போது உதயமாகுமென்று எதிர்பார்த்தும் பொறுமையாகக் காத்திருந்தேன். அவர்கள் வரும் இரவின் விவரிக்க முடியாத அந்த நேரம்தான் அப்போது மிகக் கடினமானதாக இருந்தது. தினமும்

நள்ளிரவுக்குப் பிறகு மிகவும் உன்னிப்பாகக் கவனித்துப் பொறுமை யாகக் காத்திருந்தேன். இதுவரை கேட்டிராத வண்ணம் என் செவிகள் பலவித ஓசைகளைக் கேட்டன; மிகச் சிறு ஓசைகளையும் தனித் தனியே பிரித்து இனம்கண்டுகொண்டன. ஆனால் இதுவரை நான் கூர்ந்து எதிர்நோக்கியிருந்த நாட்களில் ஒருமுறைகூடக் காலடி யோசை எதுவும் கேட்காதது என் அதிர்ஷடம்தான் என்றே சொல் வேன். அம்மா அடிக்கடி சொல்லுவாள்: வாழ்க்கை எப்போதும் வெறும் துன்பமயமாக மட்டுமே இருப்பதில்லை என்று. நான் சிறை யிலிருந்தபோது ஒவ்வொரு முறையும் வானத்தின் நிறங்கள் மாறி மாறி வர, அறையினுள் ஒரு புது விடிவு ஊர்ந்து நுழையும்போதெல் லாம் அம்மா சொன்னது சரியென்றே எனக்குத் தோன்றியது. ஏனென் றால், நான் எப்போதாவது காலடி ஓசைகளைக் கேட்டிருந்திருக்கக் கூடும்; என் நெஞ்சு சுக்குநூறாக வெடித்திருக்கக் கூடும். மிகச் சிறிய ஒரு ஓசைகூட என்னைக் கதவருகே விரையச்செய்தபோதிலும், கதவின் மரத்தில் காதுகளைப் பதித்து, என் மூச்சின் ஒலி எனக்கே கேட் கும் அளவுக்கு உன்னிப்பாகக் கேட்டபோதிலும், அந்த ஒலி, நாயின் இரைப்புப் போல கரடுமுரடாக இருப்பதைக் கண்டு திகிலுற்ற போதிலும், வேறு எதுவும் நடந்திருக்கவில்லை. என் நெஞ்சு வெடிக்கவில்லை; எனக்கு இன்னும் இருபத்திநாலு மணி நேரம் கிடைத்திருக்கிறது.

பகல் பொழுதில் நினைத்துப்பார்க்க என் மேல்முறையீடு விவ காரம் இருந்தது. இதை நான் நன்றாகவே பயன்படுத்திக் கொண்டேன் என்று நினைக்கிறேன். என்னுள் ஏற்பட்ட விளைவு களைக் கூட்டிக்கழித்துப்பார்த்ததில், என்னுடைய எண்ணச் சுழல் களிலிருந்து மிகச் சிறந்த ஒரு முடிவுக்கு வந்தேன். மோசமான நிலைமை எதுவாக இருக்க முடியுமோ அதைக் கற்பனைசெய்து கொள்வேன்: ''என் மேல்முறையீடு நிராகரிக்கப்படும். அப்படி யானால் நான் இறக்க வேண்டும்.'' மற்ற எல்லாவற்றையும்விட, இதுதான் நன்றாகத் தெரிந்த முடிவு. ஆனால், வாழ்க்கை வாழ்ந்து கொண்டே இருப்பதற்கு லாயக்கானதில்லை என்பது எல்லோருக் கும் தெரியும். மேலும், இன்னும் ஆழ்ந்து பார்த்தால், முப்பதில் இறப்

பதும் ஒன்றுதான், எழுபதில் இறப்பதும் ஒன்றுதான் என்பதை நான் மறந்திருக்கவில்லை. ஏனென்றால், நாம் எப்போது இறந்தாலும் மற்றவர்கள் எல்லோரும் இன்னும் வாழ்ந்துகொண்டுதான் இருக்கப் போகிறார்கள். இப்போது மட்டுமல்ல; இன்னும் பல ஆயிரம் ஆண்டு களுக்கு. அதில் சந்தேகமேயில்லை. இது போன்ற நினைவுகளில் இறப்பது நானாகவேதான் இருந்தேன். இப்போதென்றாலும் சரி, இருபது வருடங்களுக்குப் பிறகென்றாலும் சரி. ஆனால், இந்தத் தர்க்கத்தில் ஒரு சங்கடம் என்னவென்றால், இன்னும் வரவிருக்கும் இருபது வருட வாழ்வுடன் எனக்கு ஒரு பயங்கரமான பிணைப்பு ஏற்பட்டிருப்பதை உணர்ந்தேன். இருந்தாலும், இன்னும் இருபது வருடங்களுக்குப் பிறகு மறுபடியும் இதே நிலைக்கு வரும்போது என் நினைவுகள் எப்படி இருக்கக்கூடும் என்று யோசித்து இந்த நினைவு களை அடக்கிவைப்பேன். இறக்கும் தருணம் வந்துவிட்டால்—எப் படி, எப்போது என்பது பிரச்சினை அல்ல—இதெல்லாம் தெளிவாகி விடுகிறது. ஆகவே, (இது போன்ற தர்க்க வாதங்களில் இந்த 'ஆகவே'க்களின் முக்கியத்துவத்தை மறக்காமல் இருப்பது மிகவும் கடினமாக இருந்தது) என் மேல்முறையீடு நிராகரிக்கப்படுவதை ஏற்றுக்கொள்ள வேண்டிய கட்டாயத்தில் இருந்தேன்.

இந்தக் கட்டத்தில், அதாவது, இவ்வளவு தூரம் யோசித்தபின் வந்தடைந்த இது போன்ற கட்டத்தில் மட்டுமே, என் நிலைமை வேறு எப்படி இருக்கக்கூடும் என்று ஊகித்துப்பார்க்க முனைந்து, அப் படிச் செய்ய எனக்கு நானே ஒரு உரிமையை வழங்கிக்கொண்டேன். நான் மன்னிக்கப்பட்டுவிடுவதாக வைத்துக்கொண்டேன். அப்படி நினைத்த மாத்திரத்திலேயே, என் ரத்தநாளங்களின் வழியாக என் உடல் முழுவதும் பொங்கிப் பாய்ந்த மகிழ்ச்சி அலைகளைக் கட்டுப் படுத்தி அடக்கிவைப்பது மிகச் சிரமமாக இருந்தது. இந்த மகிழ்ச்சி—இரைச்சலைக் குறைத்து, ஒருவிதக் கட்டுப்பாட்டை நிலைநிறுத்த வேண்டியது அவசியம் என்று கருதினேன். முதலாவதாக நினைத்தபடி என் மேல்முறையீடு நிராகரிக்கப்படும் பட்சத்தில் எனக்கு ஏற்படும் விரக்தி மனப்பான்மை உண்மையென்றால், இரண் டாவதான இந்த மகிழ்ச்சியூட்டும் கருதுகோளிலும் ஒரு மனத்

தெளிவும் நிதானமும் இருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அந்த முயற்சியில் நான் வெற்றி கண்டபோது எனக்கு ஒரு மணி நேரம் அமைதி கிடைத்தது. குறைந்தபட்சம் அதாவது கிடைத்ததே.

இது போன்ற மனநிலையில் இருந்தபோதுதான் மீண்டும் ஒரு முறை சிறைச்சாலைப் பாதிரியைச் சந்திக்க நான் மறுத்தேன். மல்லாந்து படுத்தவாறு வானத்தில் படர்ந்த பசுமஞ்சள் நிறத்தின் வாயிலாகக் கோடைக் காலத்தின் மாலைப்பொழுது நெருங்கிக்கொண்டிருந்ததை உணர்ந்தேன். அப்போதுதான் மேல்முறையீடு செய்ய மறுத்திருந்தேன். என் உடலில் ரத்த அலைகள் சீராகப் பாய்வதையும் உணர்ந்தேன். பாதிரியைப் பார்க்க வேண்டிய அவசியம் எனக்கு இருக்கவில்லை. வெகு நாட்களுக்குப் பிறகு முதல் முறையாக, மாரியின் நினைவு வந்தது. பல நாட்களாகவே அவள் எனக்கு கடிதம் எழுதியிருக்கவில்லை. அன்று மாலைதான் சற்றுச் சிந்தித்துப் பார்த்தேன். மரண தண்டனை பெற்றவனின் காதலியாக இருப்பது அவளுக்கு வெறுப்பைத் தந்திருக்கலாம் என்று தோன்றியது. ஒரு வேளை அவளுக்கு உடல்நலமில்லாமல் இருந்திருக்கலாம்; அல்லது இறந்துபோயிருக்கலாம் என்று தோன்றியது. இவையெல்லாமே நடக்ககூடியவைதானே. எதுவாயினும் எனக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்? உடலளவில் பிரிக்கப்பட்டு, தனித்தனியே இருந்த எங்களை, ஒருவரையொருவர் நினைத்துக்கொள்ளும் வண்ணம் பிணைக்கும்படியாக எதுவுமே இருக்கவில்லையே. இவ்வளவு தூரம் வந்த பிறகு, மாரியைப் பற்றிய நினைவில்கூட எனக்கு எவ்வித அக்கறையுமின்றி இருந்தது. அவள் இறந்துபோயிருந்தால் அதற்காக நான் கவலைப்படப்போவதில்லை. நான் இறந்த பிறகு என்னையும் எல்லோரும் மறந்துவிடுவார்கள் என்பதைப் புரிந்துகொண்டிருந்த எனக்கு, இது ஒரு சாதாரண விஷயமாகவே பட்டது. நான் இறந்த பிறகு மற்றவர்களுக்கும் எனக்கும் என்ன தொடர்பு இருக்கப் போகிறது? இது மாதிரியான நினைவு மனத்துக்குக் கஷ்டமாக இருந்தது என்றுகூடச் சொல்ல முடியாத நிலையில் இருந்தேன். என் நினைவோட்டத்தின் இந்தக் கட்டத்தில்தான் பாதிரியார் என் சிறையறைக்குள் நுழைந்தார். அவரைப் பார்த்தவுடன் எனக்குச் சற்று நடுக்கம்

ஏற்பட்டது. அதை அவரும் கண்டுகொண்டார். பயப்பட வேண்டாம் என்றார். சாதாரணமாகச் சிறைச்சாலைப் பாதிரியார் வேறு சமயத்தில் அல்லவா வருவார் என்று கேட்டேன். அதற்கு அவர், இது ஒரு நட்புரீதியான வருகைதான் என்றும், என்னுடைய மேல்முறையீடு விவகாரம் பற்றி அவருக்கு எதுவும் தெரிந்திருக்கவில்லை என்றும், அதற்கும் அவரது வருகைக்கும் எந்த விதச் சம்பந்தமும் இல்லையென்றும் தெரிவித்தார். அவர் என் கட்டிலின் மீது அமர்ந்து என்னை அவரருகில் உட்காரும்படி சொன்னார். நான் மறுத்தேன். இருந்த போதிலும், அவர் மிகவும் மென்மையாகவே, தோழமை உணர்வுடனேயே காணப்பட்டார்.

அவர் சற்று நேரம் வெறுமனே உட்கார்ந்திருந்தார். முன்னங்கைகளை முழங்காலின்மேல் படர விட்டுத் தலையைக் குனிந்தவாறு கைகளைப் பார்த்த வண்ணம் இருந்தார். சதைப்பிடிப்பான, கச்சிதமான கைகள், இரண்டு துறுதுறுப்பான சிறிய மிருகங்களைப் போல் எனக்குத் தோன்றின. மெதுவாகத் தன் கைகளைத் தேய்த்து விட்டுக் கொண்டார். தலையைக் குனிந்தவாறு இன்னும் அப்படியே பேசாமல் உட்கார்ந்திருந்தார். வெகு நேரம் அங்கு அவர் அப்படியே இருந்ததையே நான் ஒரு கணம் மறந்துவிட்டதுபோல் எனக்குத் தோன்றியது.

ஆனால், அவர் அப்போது திடீரென்று தலையை உயர்த்தி என்னை நேருக்கு நேராக நோக்கி "என்னைச் சந்திக்க ஏன் எப்போதும் மறுக்கிறீர்கள்?" என்று கேட்டார். எனக்குக் கடவுள்மீது நம்பிக்கை இல்லை என்று பதிலளித்தேன். எனக்கு நிச்சயமாகத் தெரியுமா என்று கேட்டார். இந்தக் கேள்வியை என்னை நானே கேட்டுக் கொள்ள வேண்டிய அவசியம் எனக்கு இருந்திருக்கவில்லை; என்னைப் பொறுத்தவரை எனக்கு நம்பிக்கை இருப்பதும் இல்லாததும் அப்படியொன்றும் முக்கியமானது அல்ல என்று தோன்றியது. பிறகு அவர் சற்றே நிமிர்ந்து, பின்புறமாகச் சுவரின்மேல் சாய்ந்து, கைகளைத் தொடையின்மீது வைத்தவாறு இருந்தார். என்னுடன் பேசுவதுபோல் இல்லாமல் பொதுவாகச் சொல்வதுபோல் சொன்னார். சில சமயம் சில விஷயங்கள் நிச்சயமாகத் தெரியும் என்று

நினைத்துக்கொண்டிருப்போம்; ஆனால் உண்மையில் அப்படி இருக்காது என்றார். நான் ஒன்றும் பேசாமல் இருந்தேன். என்னை உற்று நோக்கி "நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்றார். அவர் சொன்னது உண்மையாக இருக்கலாம் என்றேன். ஆனாலும், ஒருவேளை எனக்குத் தேவையானது எது என்பதில் நான் நிச்சயமற்று இருந்திருக்கலாம்; ஆனால் எனக்கு தேவையற்றது, அவசியமற்றது எது என்று உறுதியாக, நிச்சயமாகத் தெரிந்துவைத்திருந்தேன். அவர் இப்போது குறிப்பாகச் சொன்னாரே, அதில் எனக்கு நாட்டம் இருக்கவில்லை.

அவர் வேறுபுறம் தன் பார்வையைத் திருப்பியவாறு, நிலையில் எந்த வித மாற்றமுமின்றி, முற்றிலும் நான் நம்பிக்கையை இழந்திருந்ததால்தான் இப்படியெல்லாம் பேசுகிறேனா என்று கேட்டார். நம்பிக்கை இழந்திருந்தேனா என்று சொல்ல முடியாதென்றும், இப்போதைக்கு மிகவும் பயந்த நிலையில் இருந்தேனென்றும், அதிலொன்றும் வியப்பில்லை என்றும் விளக்கமாகச் சொன்னேன். "அப்படியானால், கடவுள் உங்களைக் காப்பாற்றுவார். எனக்குத் தெரிந்து உங்கள் நிலையில் இருந்த அனைவருமே இறுதியில் அவரைத்தான் நாடியிருக்கிறார்கள்," என்றார். அது அவர்கள் உரிமை என்று அங்கீகரித்தேன். அவர்களுக்கு அதற்கெல்லாம் போதிய அவகாசம் இருந்திருக்கிறது என்பதையும் அது காட்டியது. ஆனால் நானோ, மற்றவர்கள் எனக்கு உதவி செய்ய வேண்டும் என்று விரும்பவில்லை. இதுவரை எனக்கு விருப்பமோ, தேவையோ அற்ற ஒன்றில் இனிமேல் ஈடுபாடுகொள்ள எனக்கு அவகாசமும் இருக்கவில்லை.

நான் இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும்போது அவர் கைகள் ஒரு நிலையிலில்லாமல் அவருடைய ஆடைகளை இழுத்துவிட்டுச் சரிசெய்த வண்ணம் இருக்க, அவர் நிமிர்ந்து உட்கார்ந்தார். பிறகு அவர் என்னை நோக்கிப் பேச ஆரம்பித்தார். அப்படிப் பேசுகையில் "மகனே!" என்றும் அழைத்தார். நான் மரண தண்டனை பெற்றவன் என்ற அனுதாபத்தால் அவர் என்னை "நண்பரே!" என்று அழைக்கவில்லை; அவர் கருத்தில் நாம் எல்லோருமே மரண தண்டனையைப்

பெற்றவர்கள்தாம். அவரை இடைமறித்து, அவர் ஒரேயடியாக ஒப்பிட்டுச் சொல்ல முடியாதென்றும் சொன்னேன். "அது சரிதான்," என்ற அவர், "ஆனால் இன்றைக்கில்லாவிடிலும் என்றாவது ஒருநாள் இறக்கத்தான் போகிறீர்கள். இதே பிரச்சினை அப்போது எழும். இந்தக் கடும் சோதனையை அப்போது மட்டும் எப்படி எதிர்கொள்ளப்போகிறீர்கள்?" என்றும் கேட்டார். இப்போது எந்த மனநிலையில் எதிர்கொள்கிறேனோ அதே மனநிலையில் அப்போது எதிர்கொள்வேன் என்று பதிலளித்தேன்.

இதைக் கேட்ட அவர், எழுந்து வந்து, நேருக்கு நேராக என் கண் களை உற்றுநோக்கினார். இது எனக்கு ஏற்கனவே நன்றாகத் தெரிந் திருந்த ஒரு விளையாட்டு. செலஸ்த், இம்மானுவேல் ஆகியோ ருடன் அடிக்கடி விளையாடியிருக்கிறேன்; பொதுவாக அவர்கள் தான் தோற்றுப்போய்த் தங்கள் கண்களை என் பார்வையிலிருந்து திருப்பிக்கொண்டிருந்திருக்கிறார்கள். சிறைச்சாலைப் பாதிரியும் இந்த விளையாட்டில் தேர்ந்தவராக இருந்தார். நான் அதை வெகு சீக்கிரமே புரிந்துகொண்டேன். அவரது பார்வை சலனமற்று நிலை யாக இருந்தது. பிறகு அவர் பேசும்போது அவர் குரலும் அப்படியே சலனமற்று நடுக்கமேதும் இன்றி இருந்தது; "அப்படியானால், உங்க ளுக்கு எந்த வித நம்பிக்கையுமே இல்லையா? மரணத்திற்குப் பிறகு வேறு எதுவுமே இல்லை என்ற எண்ணத்தில்தான் வாழ்ந்துகொண் டிருக்கிறீர்களா?" "ஆம்," என்றேன்.

பிறகு அவர் தலையைக் குனிந்தவாறு அமர்ந்தார். எனக்காக மிக வும் வருத்தப்படுவதாகச் சொன்னார். இது போன்று ஒரு மனிதன் இருக்க முடியுமென்பது அவருக்குத் தாங்க முடியாத வருத்தத்தை அளித்தது. எனக்கோ, அவர் அங்கு இருப்பதே அலுப்பூட்ட ஆரம் பித்திருந்தது. நானும் இப்போது மறுபுறமாகத் திரும்பி, சிறைக் கூண்டின் மேல்பக்கத்தில் இருந்த கண்ணாடிச் சாளரத்தின் அடியில் சென்று நின்றுகொண்டேன். சுவரின் மீது அழுந்திச் சாய்ந்து கொண்டேன். அவர் பேசியதைப் புரிந்துகொள்ள முற்படாவிட்டா லும், அவர் என்னைக் கேள்வி கேட்டுக்கொண்டிருந்தார் என்பதைத் தெரிந்துகொண்டேன். அவர் குரலில் கவலையும் அவசரமும் தெரிந்

தன. அவர் உணர்ச்சிவசப்பட்டுப் பேசுகிறார் என்று புரிந்துகொண்ட நான், இப்போது கவனமாகவே கேட்க ஆரம்பித்தேன். என் மேல் முறையீடு ஏற்றுக்கொள்ளப்படுமென்று அவர் நிச்சயமாக இருந்தார். ஆனால் அதற்கு முன்னால் நான் சுமந்திருந்த பாவச்சுமையிலிருந்து என்னை விடுவித்துக்கொள்ள வேண்டும் என்றார். அவரைப் பொருத்தவரை மனிதனின் தீர்ப்பு ஒன்றுமேயில்லை; இறைவனின் தீர்ப்புதான் எல்லாம். எனக்குத் தீர்ப்பளித்தது மனிதன்தானே என் றேன். இருந்தபோதிலும் அது என்னைப் பாவத்திலிருந்து விடுவிக்க வில்லை என்றார். இதில் 'பாவம்' என்ன இருந்ததென்று எனக்குப் புரியவில்லை. நான் குற்றம்புரிந்தவன் என்று மட்டும்தான் எனக்கு அறிவிக்கப்பட்டது. நான் குற்றவாளி, அதன் பலனை அனுபவித் தேன். அதற்கும் அப்பால் என்னிடமிருந்து எதுவும் எதிர்பார்க்கக் கூடாது. இப்படி நான் சொல்லிக்கொண்டிருக்கையில் அவர் மீண் டும் எழுந்தார். அப்போது நான் நினைத்துக்கொண்டேன், இவ்வளவு குறுகலான இந்த அறையில் அவர் சற்றே அசைய விரும்பினாலும் அவருக்கு அது சாத்தியமில்லை; ஒன்று, உட்கார வேண்டும் அல்லது நிற்க வேண்டும்.

நான் குனிந்து தரையைப் பார்த்தவாறே இருந்தேன். அவர் என்னை நோக்கி ஓரடி எடுத்து வைத்து, பிறகு மேலும் நகர அஞ்சி யவர்போல் உடனே நின்றுவிட்டார். சன்னல் கம்பிகள் வழியே ஆகாயத்தைப் பார்த்தார். "நீங்கள் சொல்வது தவறு, மகனே. உங்க ளிடம் எதிர்பார்க்க வேண்டியது ஒன்று இருக்கிறது. ஒருவேளை உங்களிடம் அது எதிர்பார்க்கப்படலாம்." "நீங்கள் என்ன சொல்கி றீர்கள்?" "நீங்கள் நன்றாகப் பார்க்க வேண்டுமென்று எதிர்பார்க்கப் படலாம்." "நானா? எதைப் பார்ப்பது?" பாதிரியார் தன்னைச் சுற்றி மீண்டும் ஒருமுறை பார்த்தார். அவரது குரலில் திடீரென்று ஒருவிதச் சோர்வு தோன்றியதைக் கவனித்தேன். அவர் பதிலளித்தார்: "இந்தச் சிறைக்கூண்டின் கற்களிலிருந்து சோகம் கசிந்துகொண்டிருக்கிற தென்று எனக்குத் தெரியும். இவற்றை நான் ஒருபோதும் வேதனை யின்றிப் பார்த்ததில்லை. ஆனால் மனப்பூர்வமாக ஒன்று சொல்வேன்: உங்களில் மிகவும் துன்புற்றவர்கள்கூட இவ்விருளிலிருந்து ஒரு தெய்

வீக முகம் மலர்வதைப் பார்த்திருக்கிறார்கள். இந்த முகத்தைத்தான் நீங்களும் பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.''

நான் கொஞ்சம் உசுப்பிவிடப்பட்டேன். சில மாதங்களாக இந்தக் கற்சுவர்களைத் தவிர நான் வேறு எதையுமே பார்த்துக்கொண்டிருக்கவில்லை என்றேன். இவ்வுலகில் இவற்றைத் தவிர வேறு யாரையுமோ வேறு எதையுமோ நான் இவ்வளவு நன்றாகத் தெரிந்து வைத்துக்கொண்டிருக்கவில்லை. ஒருவேளை பல நாட்களுக்கு முன்னர், இதில் ஏதாவது முகத்தைத் தேடியது உண்டு. ஆனால், நான் தேடிய அந்த முகத்தில் கதிரவனின் ஒளியும், ஆசைச் சுடருமே இருந்தன. ஆம், அது மாரியின் முகம். அதைத் தேடித்தேடி நான் அலுத்துப் போயிருந்தேன். இப்போது அதுவும் முடிந்துவிட்டது. எது எப்படியாயினும், அவர் சொன்னதுபோல் இக்கற்களின் கசிவிலிருந்து எதுவும் வெளிப்பட்டதை நான் இதுவரை பார்த்ததில்லை.

பாதிரியார் ஒருவிதச் சோர்வுடன் என்னைப் பார்த்தார். இப்போது நான் சுவரின் மீது முற்றிலும் சாய்ந்தவாறு இருந்தேன். பகலின் ஒளி என் நெற்றியில் படர்ந்தது. அவர் முணுமுணுத்த சில வார்த்தைகள் என் காதில் விழவில்லை. திடீரென்று என் பக்கம் திரும்பி, அவர் என்னை முத்தமிட நான் அனுமதிப்பேனா என்று கேட்டார். ''மாட்டேன்,'' என்றேன். உடனே மறுபடியும் திரும்பி, சுவரை நோக்கி நடந்து சென்று, மெதுவாக அதன் மீது கை வைத்தவாறு லேசாக முணுமுணுத்தார். ''இந்த ஸ்தூல உலகை அவ்வளவு தூரம் நேசிக்கிறீர்களா?'' நான் ஒன்றும் பேசவில்லை.

வெகு நேரம் அப்படித் திரும்பியவாறே நின்றுகொண்டிருந்தார். அவர் அங்கு இருந்ததே ஒருவிதச் சுமையாக, தொந்தரவாக இருந்தது. என்னை நிம்மதியாக இருக்க விட்டுப் போய்விடும்படி அவரிடம் சொல்ல இருந்தேன். அப்போதுதான் அவர் திடீரென்று மின்னல் வேகத்தில் என் பக்கம் திரும்பி, உரக்கக் கத்தினார்: ''இல்லை, நான் உங்களை நம்பத் தயாராக இல்லை. வேறு விதமான வாழ்க்கை உங்களுக்கு அமைய வேண்டும் என்று எப்போதாவது நீங்கள் ஆசைப்பட்டிருப்பீர்கள் என்று நான் உறுதியாக நம்புகிறேன்,'' என்றார். ஆம், அதிலொன்றும் வியப்பில்லை என்று பதிலளித்தேன். ஆனால் அது

போல் விரும்புவது. நான் இன்னும் பணக்காரனாக இருக்க வேண் டும், எனக்கு நன்றாக நீந்தத் தெரிந்திருக்க வேண்டும், என் முகத்தில் உதடுகளின் அமைப்பு இன்னும் அழகாக இருக்க வேண்டும் என் றெல்லாம் விரும்புவதைப் போலத்தான்; அதைவிட இது ஒன்றும், வேறு எந்த முக்கியத்துவமும் வாய்ந்ததல்ல. அவர் என்னை இடை மறித்து, அந்த மற்றொரு வாழ்க்கை எப்படிக் காட்சியளித்தது என்று அறிய விரும்பினார். ''இந்த உலக வாழ்க்கையை நான் நினைவில் கொள்ளக்கூடிய ஒரு வாழ்க்கைதான் அது,'' என்று பதிலளித்து, உட னேயே சலிப்படைந்து, நான் அதற்குமேல் பேச விரும்பவில்லை என்றேன். அவர் கடவுளைப் பற்றி என்னிடம் இன்னும் பேச விரும் பினார். ஆனால் நான் அவரை நோக்கி ஒரு அடியெடுத்து வைத்து, மீண்டும் ஒருமுறை அவரிடம், எனக்கு இன்னும் மீதமிருந்த நேரம் குறுகியதென்பதைத் தெரியப்படுத்த முற்பட்டேன். கடவுளைப் பற்றிய சர்ச்சையில் அந்த நேரத்தையும் இழக்க நான் விரும்ப வில்லை. பேச்சை அவர் மாற்ற விரும்பி, நான் அவரை ஏன் 'என் பிதாவே' என்றழைக்காமல், 'ஐயா' என்று அழைத்தேன் என்று கேட் டார். இது எனக்கு இன்னும் எரிச்சலூட்டியது. அவர் என் பிதா அல்ல, அவர் மற்றவர்கள் பக்கம் இருந்தார்.

அவர் என் தோள்மீது கை வைத்தவாறு ''இல்லை, மகனே, நான் உங்கள் பக்கம்தான் இருக்கிறேன். ஆனால் உங்களுக்கு அது தெரிய வில்லை. ஏனென்றால், உங்கள் இதயம் பார்வையை இழந்திருக் கிறது. நான் உங்களுக்காகப் பிரார்த்திப்பேன்,'' என்றார்.

அப்போது, எதனால் என்று தெரியவில்லை, என்னுள் ஏதோ ஒன்று உடைந்து நொறுங்கியது. முழு வேகத்தில் என் குரலை உயர்த்தி, அவ ரைத் திட்டி, எனக்காக அவர் பிரார்த்திக்க வேண்டியதில்லை என் றேன். அவருடைய அங்கியின் கழுத்துப் பட்டையை இறுகப் பிடித் தேன். என் இதயத்தின் ஆழத்தில் இருந்ததையெல்லாம் மகிழ்ச்சியும் கோபமும் கலந்த கொந்தளிப்புடன் அவர்மீது சரமாரியாகக் கொட் டினேன். அவர் எல்லாவற்றையும் பற்றி அவ்வளவு நிச்சயமாக இருந் தாரல்லவா? என்னதான் இருந்தாலும், அவரது நிச்சயங்களில் ஒன்று கூட பெண்ணின் ஒரு முடிக்குக்கூடச் சமானமாகாது. நடைப்

பிணம்போல் வாழ்ந்துகொண்டிருந்த அவர், தான் உயிர்த்திருப்பது பற்றிக்கூட நிச்சயமாக இருந்தார் என்று சொல்ல முடியாது. நானோ வெறுங்கையுடன் இருப்பவன்போல் தோற்றமளித்தேன். இருந்தாலும் நான் அவரைவிட நிச்சயத்துடன் இருந்தேன். என்னைப் பற்றிய நிச்சயம், எனக்கு வரவிருக்கும் மரணத்தைப் பற்றிய நிச்சயம். ஆம், என்னிடம் இருந்ததே இதுபோன்ற நிச்சயங்கள்தாம். ஆனாலும், குறைந்தபட்சம், இந்த உண்மை என்னைப் பற்றிக்கொண்டிருந்த அளவுக்கு நானும் அதைப் பற்றிக்கொண்டிருந்தேன். நான் வாழ்ந் திருந்த விதம் சரி, நான் சரியாகத்தான் வாழ்ந்தேன், நான் எப்போ துமே சரியாகவே வாழ்ந்தேன். நான் ஒரு குறிப்பிட்ட முறையில் வாழ்ந்திருக்கிறேன்; வேறு முறையில் வாழ்ந்தும் இருக்கலாம். நான் இதைச் செய்திருக்கிறேன்; அதைச் செய்யவில்லை. நான் இன்னின்ன மாதிரி செய்யாதபோது, வேறு மாதிரியெல்லாம் செய்திருக்கிறேன். அவ்வளவுதானே? எல்லாம் நான் இவ்வளவு நாட்களாக, ஏதோ இந்த நிமிடத்திற்காக, எனக்கு 'நியாயம்' வழங்கப்படும் இந்த ஒரு 'அற்ப' விடியலுக்காகக் காத்திருப்பதுபோல் ஆயிற்று. எதற்குமே முக்கியத் துவம் இருக்கவில்லை; ஏன் என்று எனக்குத் தெரியும். அவர் மட்டு மென்ன, அவருக்கும் தெரிந்திருக்கிறது. என் எதிர்காலத்தின் ஆழத் திலிருந்து, நான் இதுவரை வாழ்ந்திருந்த இந்த அபத்த வாழ்க்கை முழுவதும், இன்னும் வந்திருக்காத காலத்தினூடாக ஒரு இனம் தெரியாத மூச்சுக்காற்று என்னை நோக்கி மேலெழும்பி வந்தது; அது தன்னுடைய பாதையில் நான் வாழ்ந்திருந்த காலத்தை எந்த விதத் திலும் மேலும் நிஜமாக இல்லாத, இனிவரப் போகும் காலத்தில் என் முன் வைக்கப்பட்ட எல்லாவற்றையும் சமனாக்கிவிட்டது. அப்படி யிருக்கையில், மற்றவர்களின் மரணம், ஒரு தாயாரின் அன்பு— இவற்றைப் பற்றி எனக்கு என்ன அக்கறை? ஒரு மனிதனின் கடவுள், அவன் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் வாழ்க்கை அல்லது விதி— இவற் றைப் பற்றி எனக்கு என்ன அக்கறை? ஏன், இதே விதிதானே என்னை யும், என்னுடன் இந்தப் பாதிரியார்போல் தங்களை என் சகோதரர் கள் என்று அழைத்துக்கொள்ளும் ஆயிரக் கணக்கான அதிர்ஷ்டசாலி களையும் தேர்ந்தெடுத்திருக்க வேண்டியிருந்தது? இதையெல்லாம் அவர் புரிந்துகொள்ளத்தானே செய்தார். இல்லை? ஒவ்வொருவரும்

அதிர்ஷ்டசாலிகள்தான். இங்கே அதிர்ஷ்டசாலிகளைத் தவிர வேறு யாரும் இல்லை. இவர்களும்—இந்த மற்றவர்களும்—ஒருநாள் தண்டிக்கப்படுவார்கள். இவரும் ஒருநாள் தண்டிக்கப்படுவார். ஒரு கொலைகாரனாகக் குற்றம்சாட்டப்பட்டுத் தன் தாயாரின் சவ அடக்கத்தில் அவர் அழவில்லை என்பதற்காக அவர் தலை துண்டிக்கப்பட்டாலும் எனக்கு என்ன அக்கறை? சலாமானோவின் நாய்க்கு இருந்த மதிப்புதான் அவருடைய மனைவிக்கும். மாசோன் மணந்திருந்த பாரிஸ்காரி எந்த அளவுக்குக் குற்றவாளியோ, தன்னை நான் மணக்க வேண்டும் என்று விரும்பிய மாரி எந்த அளவுக்கு குற்றவாளியோ அதே அளவுதான் இயந்திர கதியில் இயங்கும் அந்தக் குள்ளமான பெண்ணும் குற்றவாளியாக இருந்தாள். ரேமோனும் என் நண்பனாக இருந்தான், அவனைவிடப் பல மடங்கு உயர்ந்தவனான செலஸ்த்தும் என் நண்பனாக இருந்தான் என்பதால் மட்டும் என்ன ஆயிற்று? இன்று மாரி வேறு ஒரு புதிய மெர்சோவுக்குத் தன் இதழ்களை அளித்துக்கொண்டிருக்கலாம் என்பதால் என்ன ஆயிற்று? தண்டிக்கப்பட்ட இவர்... என் எதிர்காலத்தின் தொடுவானிலிருந்து... இதெல்லாம் அவருக்குப் புரியவில்லையா? இப்படிக் கத்திக்கொண்டிருக்கும்போது எனக்கு மூச்சுத் திணறியது. ஆனால் அதற்குள்ளாகவே பாதிரியாரை என்னிடமிருந்து விடுவித்து, காவலாளிகள் என்னை மிரட்டினார்கள். ஆனால் அவரோ, அவர்களைச் சமாதானப்படுத்திவிட்டு, அமைதியாக என்னை ஒரு கணம் பார்த்தார். அவர் கண்களில் நீர் ததும்பியிருந்தது. மறுபுறம் திரும்பி, வெளியே சென்று மறைந்தார்.

அவர் சென்ற பிறகு நான் அமைதியடைந்தேன். சோர்ந்துபோய் என் படுக்கையில் சாய்ந்தேன். நான் தூங்கிப்போயிருக்க வேண்டும். ஏனென்றால், நட்சத்திரங்கள் என் முகத்தில் விழ, கண்விழித்தேன். வெளியே கிராமப்புறத்தின் ஓசைகள் என் காதுக்கு எட்டின. இரவின் மணங்கள், மண்ணின் மணம், உப்பின் மணம் என் நெற்றிப்பொட்டில் புத்துணர்ச்சியை அளித்தன. உறங்கிக்கொண்டிருக்கும் இந்தக் கோடைக் காலத்தின் அற்புதமான அமைதி, பொங்கி வரும் கடலலை போல என்னுள் புகுந்தது. இச்சமயத்தில் இரவின் முடிவில்,

கப்பலின் சங்குகள் ஒலிக்கக் கேட்டேன். இப்போது நான் சற்றும் கவலைப்படாத உலகத்திற்குச் செல்லும் புறப்பாடுகளை அவை அறிவித்த வண்ணம் இருந்தன. வெகு நாட்களுக்குப் பிறகு, முதல் முறையாக, இப்போது நான் என் அம்மாவை நினைத்துக்கொண் டேன். தன் வாழ்க்கையின் கடைசி நாட்களில் அவள் ஏன் தனக் கொரு ஆண் துணையைத் தேடிக்கொண்டாள் என்பது எனக்குப் புரிந்ததுபோல் தோன்றியது. மறுபடியும் ஆரம்பிப்பதுபோல் ஏன் அப்படிச் செய்தாள் என்பதைப் புரிந்துகொண்டேன். இங்கு போலவே அங்கேயும், வாழ்க்கைச் சுடர்கள் ஒன்றன்பின் ஒன்றாக அணைந்துகொண்டிருந்த அந்த முதியோர் இல்லத்திலும் அந்திப் பொழுது ஒரு சோகமான இளைப்பாறல்போல் இருந்தது. மரணத் துக்கு அவ்வளவு அருகில் இருந்த அம்மா, விடுதலை பெற்று ஒரு புதிய வாழ்வைத் தொடங்குபவள்போல் உணர்ந்திருக்க வேண்டும். அவளுக்காக அழுவதற்கு யாருக்குமே உரிமை இருந்திருக்கவில்லை; ஆம், யாருக்குமேதான். நான் ஒரு புதுவாழ்வைத் தொடங்கத் தயாராக இருப்பதுபோல் உணர்ந்தேன். இந்தக் கோபக் கொந்த ளிப்பு என்னைக் கழுவிவிட்டதைப்போல, நம்பிக்கைகள் வெளி யேற்றப்பட்ட நிலையில் நட்சத்திரங்களும், மற்ற அறிகுறிகளும் நிரம்பியிருந்த இந்த இரவின் முன்னால் முதல் முறையாக—ஆம், முதல் முறையாக—இவ்வுலகின் மென்மையான அலட்சியத்தை மனம்திறந்து வரவேற்றேன். என்னைப் போலவே அது இருந்தது என்பதை உணரும்போது, அந்தச் சகோதர மனப்பான்மையில், நான் மகிழ்ச்சியாக இருந்தேன். மகிழ்ச்சியாகவே இருந்துகொண்டிருக்கி றேன் என்பதை அறிந்துகொண்டேன். ஆக, எல்லாம் முழுமை பெற வேண்டுமானால், என் தனிமை உணர்வு ஓரளவு குறைய வேண்டுமா னால், நான் விழையக் கூடியது ஒன்றே ஒன்றுதான்—என் தலை துண்டிக்கப்படும் தினத்தன்று பெரும் எண்ணிக்கையில் பார்வை யாளர்கள் இருக்க வேண்டும்; வெறுப்புக் கலந்த கூக்குரலுடன் என்னை அவர்கள் வரவேற்க வேண்டும்.

***

## க்ரியாவின் பிற மொழிபெயர்ப்புகள்

1. குட்டி இளவரசன் (புதிய பதிப்பு), அந்த்வான்த் செந்த்-எச்சுபெரி
(தமிழில்: வெ. ஸ்ரீராம், ச. மதனகல்யாணி, )

2. ருபாயியத், ஓமர்கய்யாம்
(தமிழில்: தங்க. ஜெயராமன், ஆசை)

3. சின்னச் சின்ன வாக்கியங்கள், பியரெத் ஃப்லுசியோ
(தமிழில்: வெ. ஸ்ரீராம்)

4. சொற்கள், ழாக் ப்ரெவெர், (தமிழில்: வெ. ஸ்ரீராம்)

5. தாவோ தே ஜிங், லாவோ ட்சு, (தமிழில்: சி. மணி)

6. சூரியனின் கடைசிக் கிரணத்திலிருந்து சூரியனின் முதல் கிரணம்வரை..., சுரேந்திர வர்மா (தமிழில்: வி. சரோஜா)

7. கீழை நாட்டுக் கதைகள், மார்கெரித் யூர்ஸ்னார்,
(தமிழில்: வெ. ஸ்ரீராம்...)

8. காண்டாமிருகம், யூழேன் இயொனெஸ்கோ
(தமிழில்: டி.எஸ். தட்சிணாமூர்த்தி)

9. அபாயம், ஜோஷ் வண்டேலூ (தமிழில் என். சிவராமன்)

10. தீமையின் மலர்கள், ஷார்ல் போத்லெர்
(தமிழில்: குமரன் வளவன்)

11. விசாரணை, ஃப்ரன்ஸ் காஃப்கா
(தமிழில் ஏ.வி.தனுஷ்கோடி)

இருபதாம் நூற்றாண்டின் மிக முக்கியமான படைப்புகளில் ஒன்றான 'அந்நியன்' 1942இல் வெளிவந்தது. வெளியான 70 ஆண்டுகளில் இந்த நாவலின் பிரெஞ்சு மொழிப் பதிப்பு மட்டும் ஒரு கோடி பிரதிகளுக்கு மேல் விற்றிருக்கிறது. கிட்டத்தட்ட எல்லா முக்கிய மொழிகளிலும் உலகெங்கும் இது மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இந்தத் தமிழ் மொழிபெயர்ப்பு பிரெஞ்சு மொழியிலிருந்து நேரடியாகச் செய்யப்பட்டிருக்கிறது.

'இன்றைய மனிதனின் மனசாட்சி குறித்த பிரச்சினைகளைத் தெளிவான நேர்மையுடன் தன் இலக்கியப் படைப்புகளில் விளக்கியிருப்பதற்காக' ஆல்பெர் காம்யுவுக்கு 1957ஆம் ஆண்டு நோபல் பரிசு அளிக்கப்பட்டது.




க்ரியா